# முடியரசனின் கவிதைத் திறன்

**(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் (பி.எச்.டி)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**இரா.வனிதா**

*(பதிவு எண்:711)*

**நெறியாளர்**

**முனைவர் ச.முருகேசன்**

**இணைப்பேராசிரியர், தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி**





**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

**(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறு மதிப்பீட்டில் 'ஏ+' தகுதிபெற்றது)**

**காரைக்குடி – 630 003**

**ஆகஸ்டு – 2017**

**முனைவர் ச.முருகேசன், எம்.ஏ., எம்.ஃ.பில். , பி.எச்.டி. ,**
**இணைப்பேராசிரியர்**
**தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி**
**காரைக்குடி – 630 003**

---

**நாள்:**

# நெறியாளர் சான்றிதழ்

**'முடியரசனின் கவிதைத்திறன்'** என்னும் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வுரை, அழகப்பா பல்கலைக் கழக முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் திருமதி. இரா.வனிதா என்பார், காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வு மையத்தில் மேற்கொண்ட பகுதி நேர ஆய்வில் உருவாக்கப்பெற்றதாகும். இவ்வாய்வுரை அல்லது இதன் பகுதிகள் இதற்கு முன்பு வேறு எந்தப் பட்டத்திற்கோ அல்லது ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்பதற்கும், இஃது ஆய்வாளர் தம் சொந்த முயற்சியினால் உருவாக்கப்பெற்றது என்பதற்கும் சான்றிதழ் வழங்குகிறேன்.

**(ச.முருகேசன்)**
**நெறியாளர்**

**இரா.வனிதா,**

**ஆசிரியை, பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,**

**பாரதி நகராட்சி நடுநிலைப்பள்ளி,**

**காரைக்குடி.**

---

**நாள்:**

# ஆய்வாளர் உறுதிமொழி

**'முடியரசனின் கவிதைத்திறன்'** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வுரை, யான் மேற்கொண்ட பகுதிநேர ஆராய்ச்சியின் பயனாக அமைந்ததாகும். இவ்வாய்வுரை இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டம், சான்றிதழ், பல்கலைக்கழக உறுப்பினர் தகுதி போன்றவற்றிற்கு அளிக்கப்பெறவில்லை என்றும், இஃது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பெற்றது என்றும் உறுதி கூறுகிறேன்.

**(இரா.வனிதா)**

**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் ச.முருகேசன்**

**இணைப் பேராசிரியர்**

**தமிழ் உயராய்வு மையம்**

**அழகப்பா அரசு கலைக் கல்லூரி**

**காரைக்குடி – 630 003**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| இ.ப.த.ம | - | இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் |
| இளம் | - | இளம்பூரணர் |
| உரை.ஆ. | - | உரையாசிரியர் |
| எ.ப.ஆ. | - | எம்.ஃ.பில் பட்ட ஆய்வேடு |
| கழக வெளியீடு | - | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு |
| குறள் | - | திருக்குறள் |
| தி.ப. | - | திருத்திய பதிப்பு |
| தொகு.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நா.ப. | - | நான்காம் பதிப்பு |
| நூ | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதி.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பா. | - | பாடல் |
| பா.எ. | - | பாடல் எண் |
| பா.ப.க. | - | பாரதிதாசன் பல்கலைக் கழகம் |
| பி.ப.ஆ | - | பிஎச்.டி பட்ட ஆய்வேடு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| ம.ப. | | மறு பதிப்பு |
| மு.ப | - | முதற்பதிப்பு |
| மூ.ப | - | மூன்றாம் மதிப்பு |
| மேலது | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| **P** | - | **Page** |
| **PP** | - | **Pages** |

## நன்றியுரை

**‘முடியரசனின் கவிதைத்திறன்’** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வுப்பணி செய்ய வாய்ப்பளித்த காரைக்குடி அழகப்பா அரசு கலைக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், கல்லூரித் தமிழ் உயராய்வு மையத் தலைவர் அவர்களுக்கும் நன்றி.

ஆய்வு முயற்சிகளை ஊக்குவித்து, உற்சாகப்படுத்தி, அரிய ஆலோசனைகளை வழங்கி, ஆய்வினை நெறிப்படுத்திய நெறியாளர், காரைக்குடி அழகப்பா அரசு கலைக்கல்லூரியின் தமிழ் உயராய்வு மைய இணைப்பேராசிரியர் முனைவர் **ச.முருகேசன்** அவர்களுக்கு என் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

என் ஆய்வு முயற்சிகளுக்குத் தொடர்ந்து ஊக்கமளித்த பாரதி நகர்மன்ற நடுநிலைப்பள்ளியின் தலைமையாசிரியை திருமதி.**கு.மலர்விழி** அவர்களுக்கும், அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர். **சு. இராஜராம்** அவர்களுக்கும், கவிஞர் முடியரசனின் தலைமகன் அன்புச் சகோதரர் **பாரி முடியரசன்** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி என்றும் உரியது.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கி உதவிய அழகப்பா பல்கலைக்கழக நூலகருக்கும், அழகப்பா அரசு கலைக்கல்லூரி நூலகத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்றும் என் முயற்சிகளுக்கு உறுதுணையாக இருக்கும் என் அன்புப் பெற்றோர் திரு. **ராயப்பா**-திருமதி**. மல்லிகா** ஆகியோருக்கும், என் அன்புக் கணவர் திரு. **கரு. சண்முகம்** அவர்களுக்கும், என் அன்புச் செல்வங்கள் **பிரதீப், நித்திஷ்** ஆகியோருக்கும் அன்பு நண்பர்கள் **ஸ்டீபன், தனுஷ்கோடி** (முதல்வர், செயிண்ட் ஜோசப் கல்லூரி) ஆகியோருக்கும் நன்றி.

ஆய்வேட்டினைச் செம்மையாக உருவாக்கித் தந்துள்ள ஸ்ரீ ராம்நகர் அண்ணாமலையார் கணினி மையத்திற்கும் என் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# பொருளடக்கம்


| இயல் எண் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | ஆய்வு முன்னுரை | 1-4 |
| 1. | படைப்பாசிரியரும் படைப்புகளும் ஓர் அறிமுகம் | 5-35 |
| 2. | முடியரசன் கவிதைகளில் உத்திகள் | 36-87 |
| 3. | முடியரசன் கவிதைகளில் தமிழியற்சிந்தனை | 88-125 |
| 4. | முடியரசன் கவிதைகளில் சமூதாயப்பார்வை | 126-180 |
| 5. | முடியரசனின் காப்பியத்திறன் | 181-215 |
| | ஆய்வு முடிவுரை | 216-220 |
| | துணைநூற்பட்டியல் | 221-233 |
| | பின்னிணைப்பு | 234 |

# ஆய்வு முன்னுரை

**ஆய்வுத் தலைப்பு**

“எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு”

என்று பாடிய புதுவைக் குயில் பாரதிதாசன் சுயமரியாதை இயக்கத்திற்கும், பொதுவுடைமை இயக்கத்திற்கும் உரமாக இருந்தவர். பாரதிதாசன் அடக்கப்பட்டவர்களுக்காகவும் ஒடுக்கப்பட்டவர்களுக்காகவும் சுரண்டப்பட்டவர்களுக்காகவும் புரட்சிக் கீதம் பாடியவர். பாரதிதாசன் பரம்பரையின் தலைமகனாகக் கருதப்பட்டவர் கவிஞர் முடியரசன். கவிதை, காப்பியம், கவிதை நாடகம், கட்டுரை, கதை இலக்கியம், இலக்கணம், கடித இலக்கியம், தன் வரலாறு எனப்பல வகைமைகளில் படைப்புகளை வெளியிட்டுள்ளார் முடியரசன். கவிதை இலக்கிய வரலாற்றில் மரபுக்கவிதைகளை மையமாகக் கொண்டு ஆய்வு செய்யும் போக்குப் பரவலாகக் காணப்படுகிறது. கவிஞர் முடியரசனின் கவிதைகள், காப்பியங்கள் ஆகியவற்றை மையமிட்டு **‘முடியரசனின் கவிதைத்திறன்’** என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வு நோக்கம்:**

முடியரசன் கவிதைகளில் பீறிட்டெழும் மொழியுணர்வு, உத்திகள், சமுதாயத்தைச் சீர்திருத்த விழையும் சமுதாயப்பார்வை, காப்பியத்திறன் ஆகியவற்றை வெளிக்கொணர்வதே ஆய்வு நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:**

முடியரசன் பாடிய 12 கவிதைத் தொகுதிகளும், மூன்று காப்பியங்களும், ஒரு கவிதை நாடகமும் ஆய்வின் எல்லையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

முடியரசன் கவிதைகளில் கையாண்டுள்ள உத்திகள், காப்பியக் கூறுகள் ஆகியவற்றைப் பகுத்தாய்வதில் பகுப்பாய்வு அணுகுமுறையும் (Analytical Approach)> மொழியுணர்வை முன்னிறுத்தும் தமிழியற் சிந்தனைகளை விளக்கிச் செல்வதில் விளக்கமுறைத் திறனாய்வும் (Descriptive Criticism), சமுதாயப் பார்வை குறித்த கருத்துகளை விளக்குவதில் சமூகவியல் அணுகுமுறையும் (Sociological Approach) ஆய்வு அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்:**

கவிஞர் முடியரசனின் படைப்புகள் குறித்துப் பலரும் ஆய்வு செய்துள்ளனர். 'பாவரசன் முடியரசனின் தமிழ்த்தொண்டு' என்னும் தலைப்பில் மு.இளங்கோவனும், 'முடியரசன் படைப்புகள்-ஓா ஆய்வு' என்ற தலைப்பில் எஸ்.ஸ்ரீகுமாரும், 'முடியரசன் படைப்புகள்' என்னும் தலைப்பில் மணிமேகலையும், 'கவிஞர் முடியரசன் கவிதைகளில் சமுதாயத் தாக்கம்' என்ற தலைப்பில் ச.நாகரசனும், 'முடியரசனார் கவிதைகளில் புலப்பாட்டு நெறி' என்னும் தலைப்பில் ச.சேதுகல்பனாவும் ஆய்வு செய்துள்ளனர். இவ்வாய்வுகள் அனைத்தும் முனைவர் பட்டப்பேற்றிற்காக நிகழ்த்தப்பெற்றனவாகும். 'கவிஞர் முடியரசனார் பூங்கொடி – ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில் ப.நீலகண்டன் என்பாரும், 'கவியரசு முடியரசனாரின் ஊன்றுகோல் ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் சு.ரேவதி சுபாஷினியும், 'பூங்கொடியும் மணிமேகலையும்' என்னும் தலைப்பில் மு.நீலாமணி என்பாரும் ஆய்வு நிகழ்த்தியுள்ளனர். இவ்வாய்வுகள் அனைத்தும் எம்.ஃ.பில் பட்டப் பேற்றிற்காக நிகழ்த்தப்பட்டனவாகும். இவ்வகையில் கவிஞர் முடியரசனின் கவிதைத்திறன்களை மையமிட்டு 'முடியரசனின் கவிதைத்திறன்' என்னும் இவ்வாய்வு அமைவது குறிக்கத்தக்கது.

**ஆய்வுச் சான்றாதாரங்கள்**

முடியரசன் இயற்றிய முடியரசனின் கவிதைகள், நெஞ்சிற் பூத்தவை, காவியப்பறவை, கவியரங்கில் முடியரசன், தமிழ் முழக்கம், நெஞ்சு பொறுக்கவில்லையே, மனிதனைத் தேடுகிறேன், மனிதரைக் கண்டு கொண்டேன், தாய்மொழி காப்போம், புதியதொரு விதி செய்வோம், வள்ளுவர் கோட்டம், ஞாயிறும் திங்களும் ஆகிய கவிதைத் தொகுதிகளும். பூங்கொடி, வீர காவியம், ஊன்றுகோல் ஆகிய காப்பியங்களும், இளம்பெருவழுதி என்னும் கவிதை நாடகமும் ஆய்விற்குரிய முதன்மைச் சான்றாதாரங்கள் ஆகின்றன.

**துணைமைச் சான்றாதாரங்கள்:**

கவிதை மற்றும் காப்பியம் குறித்தத் திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், அகராதிகள் கலைக்களஞ்சியம், இதழ்கள், ஆங்கில நூல்கள் முதலானவை ஆய்விற்குரிய துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**ஆய்வுப்பகுப்பு:**

**‘முடியரசனின் கவிதைத் திறன்’** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு, ஆய்வு முன்னுரை, ஆய்வு நிறைவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை:

இயல் - 1: படைப்பாசிரியரும் படைப்புகளும் - ஓர் அறிமுகம்

இயல் - 2: முடியரசன் கவிதைகளில் உத்திகள்

இயல் - 3: முடியரசன் கவிதைகளில் தமிழியற் சிந்தனை

இயல் - 4: முடியரசன் கவிதைகளில் சமுதாயப் பார்வை

இயல் - 5: முடியரசனின் காப்பியத்திறன் என்பனவாகும்.

**இயல் விளக்கம்:**

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடிகள் சான்றாதாரங்கள், ஆய்வுப்பகுப்பு, இயல்விளக்கம் ஆகியன இடம் பெற்றுள்ளன.

‘படைப்பாசிரியரும் படைப்புகளும் - ஓர் அறிமுகம்’ என்னும் முதல் இயலில், பிறப்பும் கல்வியும், இயற்பெயர், பணிகள், படைப்புகள், பிற துறைத் தொடர்புகள், விருதுகளும் சிறப்புகளும், இல்லறம் ஆகியன குறித்து விளக்கப்பட்டுள்ளன.

‘முடியரசன் கவிதைகளில் உத்திகள்’ என்ற இரண்டாமியல், உத்தி – விளக்கம், ஒலிக்குறிப்புச் சொல், ஒலியிசை முதலான ஒலிநிலை உத்திகள், அடைச்சொற்கள், தொன்மைச்சொல், பல்பொருள் உடைய ஒரு சொல் முதலான சொல் நிலை உத்திகள், முரண், எதிர்மறை, பொருள் மயக்கம், சிலேடை, அங்கதம், குறிப்பு முதலான பொருண்மை நிலை உத்திகள், விளித்தொடர், கேள்வித் தொடர், இணைத்தொடர், பழமொழி ஆகிய தொடரமைப்பு உத்திகள், கூற்று உத்தி, வருணனை, கற்பனை, காட்சி முதலான வெளியீட்டு உத்திகள், உவமை, மேற்கோள் ஆட்சி ஆகியன குறித்து விளக்கிச் செல்கிறது.

‘முடியரசன் கவிதைகளில் தமிழியற் சிந்தனை’ என்னும் மூன்றாமியலில், தமிழ் வாழ்த்து, பிறமொழி ஆதிக்க எதிர்ப்பு, தமிழின் சிறப்பு, தமிழர்நிலை, தமிழ்ப்பற்று, தமிழ்வளர்ச்சி, தமிழ் நாட்டுக் கலைகள் ஆகியன விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

‘முடியரசன் கவிதைகளில் சமுதாயப்பார்வை’ என்ற நான்காமியல், சாதி, மதவெறி, மூட நம்பிக்கை, கலப்புமணம், அரசியல் ஒழுக்கக்கேடு, பொருளியல் சீர்கேடு, இலஞ்சம், வறுமை, ஒற்றுமையின்மை, மது எதிர்ப்பு, வரதட்சணை, காதல், பெண்கள் நிலை, கொடுமைகளைத் தட்டிக் கேட்டல், பண்பாடு, பொது நல உணர்வு முதலான சமுதாயச் சிக்கல்கள் குறித்த முடியரசனின் சமுதாயப்பார்வை குறித்து விளக்கிச் செல்கிறது.

‘முடியரசனின் காப்பியத்திறன்’ என்னும் ஐந்தாமியல், காப்பிய இலக்கணப் பொருத்தம், காப்பிய வகைமை, காப்பியக் கூறுகள், கதை அமைப்பு, கதைக்கரு, கிளைக்கதை, மொழிநடை, வருணனை, பாத்திரப்படைப்பு, காப்பிய நயம் முதலானவை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் இறுதியில் கண்ட முடிவுகள் தொகுப்புரையில் இடம்பெற்றுள்ளன. ஆய்வின் நிறைவைக் கருதி, நிறைவுரையில் ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆய்விற்குத் துணை நின்ற நூல்கள் பின்னிணைப்பில் பட்டியலிடப்பட்டுள்ளன.

## இயல் - 1

## படைப்பாசிரியரும் படைப்புகளும் ஓர் அறிமுகம்

### முன்னுரை

தமிழை உயிராகவும், கவிதையை மூச்சாகவும் கொண்டு கவிதைகள் படைத்தவர் முடியரசன். தமிழின் ஆட்சியையும், தமிழினத்தின் மீட்சியையும் முன்னிறுத்திக் கவிதைபாடிய முடியரசன், சமூக அநீதிகளையும் மூடப்பழக்க வழக்கங்களையும் கடுமையாகச் சாடியவர். சமத்துவச் சமுதாயம் காண்பதற்கு எதிரான கருத்துகளை எதிர்த்துத் தன் கவிதைகளால் அறிவுப்போர் நடத்தியவர்.

> "கவியரசு முடியரசன் தமக்கெனத் தனிப்பாணி வகுத்துக்கொண்டு, கவிதையே மூச்சாக வாழ்ந்தவர். அவருக்கு அது ஒரு தொழிலாக மட்டுமின்றி, உயிர் மூச்சாகவே இயங்கி வந்தது."[1]

என்னும் கூற்று இங்குச் சுட்டத்தக்கது.

தமிழ், தமிழர் நலன் காக்கக் கொள்கை முரசமாய் ஒலித்த முடியரசன்,பாரதிதாசன் பரம்பரையின் மூத்த கவிஞன்.

> "என் மூத்த வழித்தோன்றல் முடியரசனே
> எனக்குப்பிறகு கவிஞன் முடியரசன்"

எனப் பாவேந்தர் பாரதிதாசனே போற்றிய தகைமையாளர் முடியரசன்.

> "சுற்றிவ ளைத்திடும் எத்துய ரத்தையும்
>
> சுட்டுமு டித்ததை – எறிவேனே
>
> சொத்துந லத்தினை முற்றஇ ழப்பினும்
>
> சொற்றமி முக்குளனைத் தருவேனே"[2]

எனப் பாடியவாறு, கவிதை, காப்பியம், சிறுகதை, கடித இலக்கியம், கட்டுரை எனப் பல்துறைகளிலும் படைப்புகள் பலவற்றைப் படைத்துத் தமிழுக்குத் தந்துள்ளார், கவிஞர் முடியரசன். படைப்பாசிரியர் கவிஞர் முடியரசன் வாழ்க்கை, பணி, படைப்புகள், விருதுகள் ஆகியவை குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**பிறப்பும் கல்வியும்:**

முன்னாள் மதுரை மாவட்டத்தையும் இந்நாள் தேனி மாவட்டத்தையும் சேர்ந்த பெரியகுளம் நகரில் 7.10.1920 இல் பிறந்தார் இவருடைய பெற்றோர் சுப்புராயலு – சீதாலெட்சுமி. பெரிய குளத்தில் இரண்டாண்டுகள் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் பயின்ற அவர், பின்னர் வேந்தன் பட்டியிலும் மேலைச்சிவபுரியிலும் பள்ளிக்கல்வி பெற்றுள்ளார். அதன்பிறகு மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் 1934 முதல் 1939 வரை பயின்று பிரவேச பண்டிதம் தேர்ச்சி பெற்றுள்ளார். பின்னர் மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் 1939 முதல் 1943 வரை பயின்று வித்துவான் பட்டம் பெற்றுள்ளார்.

**இயற்பெயர்:**

தமிழர் நலன் காக்கும் கொள்கைக்காகக் கவிமுரசு ஒலித்த முடியரசனாரின் இயற்பெயர் துரைராசு என்பதாகும். மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பயின்ற காலத்தில் திருப்பத்தூரில் ஒருமுறை அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவைக் கேட்டுள்ளார். அதன் விளைவாகத் தன் பெயரை முடியரசன் என மாற்றிக் கொண்டார்.

**பணி:**

சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் முடியரசன் 1947-இல் தமிழாசிரியராகப் பணியில் சேர்ந்தார். அங்கு 1949 வரை இரண்டாண்டுகள் பணியாற்றியுள்ளார். பின்னர் காரைக்குடி மீ.சு. உயர்நிலைப்பள்ளியில் 1949 இறுதியில் தமிழாசிரியர் பணியில் சேர்ந்த அவர் தொடர்ந்து 28 ஆண்டுகள் பணியாற்றி 23.6.1979-இல் ஓய்வு பெற்றுள்ளார்.

> ‘‘ஆசிரியப்பணி உயரிய பணிதான். மாணவர்களை நன்மக்களாக உருவாக்கும் பணிதான். தீமை செய்யாமல் நன்மை செய்தற்கேற்ற பணிதான்’’[3]

என்னும் கருத்து, ஆசிரியப்பணியின் உயர்வைப் பறைசாற்றுவதாய் அமைகிறது எனலாம். மதுரை காமராஜர் பல்கலைக் கழகத் தமிழியற்புலத்தில் 1985 முதல் 1986 வரை ஓராண்டுக் காலம் ஒப்பந்த அடிப்படையில் பணிபுரிந்துள்ளார்.

**படைப்புகள்:**

முடியரசன் தம் 21ஆம் வயதில் ‘சாதி என்பது நமக்கு ஏனோ’ என்னும் தலைப்பில் கவிதையொன்றை எழுதினார். இதுவே, அவருடைய முதல் கவிதையாகும். ‘திராவிட நாடு’ இதழில் இக்கவிதை ‘பெரியகுளம் துரைராசு’ என்ற பெயரில் வெளியானது.

முடியரசன் கவிதைகள், காவியப்பாவை, கவிரயரங்கில் முடியரசன், பாடுங்குயில், நெஞ்சு பொறுக்கவில்லையே, மனிதனைத் தேடுகிறேன். தமிழ் முழக்கம், நெஞ்சிற் பூத்தவை, ஞாயிறும் திங்களும், வள்ளுவர் கோட்டம், புதியதொரு விதி செய்வோம், தாய்மொழி காப்போம், மனிதரைக் கண்டு கொண்டேன் முதலான கவிதைத் தொகுதிகளைப் படைத்துள்ளார். பூங்கொடி, வீரகாவியம், ஊன்றுகோல் முதலான காப்பியங்களை எழுதியுள்ளார். இளம்பெருவழுதி என்னும் பெயரில் நாடகக் காப்பியம் ஒன்றையும் இயற்றியுள்ளார்.

அன்புள்ள பாண்டியனுக்கு, இளவரசனுக்கு என இரண்டு கடித இலக்கியங்களையும் வெளியிட்டுள்ளார். முடியரசன் தமிழ் இலக்கணம், எப்படி வளரும் தமிழ், சீர்திருத்தச் செம்மல் வை.சு.சண்முகனார், பாடுங்குயில்கள் முதலான கட்டுரை நூல்களையும் படைத்துள்ளார். எக்கோவின் காதல் என்ற தலைப்பில் சிறுகதைத் தொகுப்பு ஒன்றையும், பாட்டுப் பறவையின் வாழ்க்கைப் பயணம் என்னும் தன் வரலாற்று நூல் ஒன்றையும் படைத்துள்ளார்.

**பிறதுறைத் தொடர்புகள்:**

சென்னையில் ஆசிரியராகப் பணியாற்றிய காலத்தில் முடியரசனுக்கு, ‘போர்வாள்,’ ‘அழகு,’ ‘முருகு’ முதலான இதழ்களோடு தொடர்பு உண்டாயிற்று. இவற்றில் கவிதைகளும், கட்டுரைகளும், கதைகளும் எழுதி வந்தார். நவாப் டி.சு.இராசமாணிக்கம் குழுவோடு சற்றுத் தொடர்பு இருந்தது. திரைப்படத்துறையிலும் ஈடுபட்டு கண்ணாடி மாளிகை என்னும் திரைப்படத்திற்கு வசனமும் பாடல்களும் எழுதியுள்ளார்.

**தேடிவந்த பட்டமும் பாராட்டும்:**

அறிஞர் அண்ணா 1957-இல் ‘திராவிட நாட்டின் வானம்பாடி’ என்னும் பட்டத்தை வழங்கினார். பறம்புமலை பாரி விழாவில் குன்றக்குடி அடிகளார் 1966-இல் ‘கவியரசு’ பட்டம் வழங்கிச் சிறப்பித்துள்ளார். 1974-இல் குன்றக்குடி அடிகளார் ‘சங்கப்புலவர்’ பட்டத்தை வழங்கியுள்ளார். பாவாணர் 1979-இல் ‘பாவரசர்’ பட்டம் வழங்கியுள்ளார். 1980-இல் நடந்த மணிவிழாவில் ‘கவிப்பேரரசர்’ பட்டம் வழங்கிச் சிறப்பித்தார் கலைஞர் மு.

கருணாநிதி. ஈரோடு தமிழ் இலக்கியப் பேரவை 1994-இல் ‘இரண்டாம் புரட்சிக் கவிஞர்’ பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. இங்ஙனம் பல்வேறு பட்டங்களைப் பெற்றுள்ள முடியரசனாரைப் பாராட்டாத தலைவர்களோ, தமிழறிஞர்களோ இல்லை எனலாம். சான்றாகச் சிலரின் பாராட்டுரைகள் சுட்டப்பெறுகின்றன.

“கவிஞர் யார்? … என்பதற்கு எடுத்துக்காட்டுதானய்யா…

பகுத்தறிவுக் கவிஞர் முடியரசனய்யா - தந்தை பெரியார்:

திராவிட நாட்டின் வானம்பாடி கவிஞர் முடியரசன் -

பேரறிஞர் அண்ணா”[4]

என்பது முடியரசனாருக்குக் கிடைத்த புகழாரமாகும்.

“தன்மானக் குன்றம் - கொள்கை மாறாச்சிங்கம் - திராவிட இயக்கத்தின் முன்னோடிக் கவிஞர் - திராவிட இயக்கத்தின் ஈடு இணையற்ற தளகர்த்தர்களில் ஒருவர் - 1940-க்குப் பின்னால் திராவிட இயக்கத்தின் சார்பில் நாற்பதுக்கு மேற்பட்ட இதழ்களில் கொள்கை முழக்கம் செய்தவர் கவிஞர் முடியரசன். குறிப்பாக முரசொலியிலும் முத்தாரத்திலும் அவர் கவிதை இடம்பெறாத நாளே இருக்க முடியாது. இன்று திராவிட இயக்கம் நிமிர்ந்து நின்று கோலோச்சுகிறதென்றால் அன்று முடியரசனார் ஆற்றிய இலக்கியப் பணியும் காரணம் - தலைவர் கலைஞர்.

‘கவிஞர் என்றால் இப்படித்தான் வாழவேண்டும் என்று முடியரசனார் அவர்களின் வாழ்க்கையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம் - மக்கள் திலகம் எம்.ஜி.ஆர்’”[5]

இவை இருபெரும் தலைவர்களின் பாராட்டுரைகளாகும்.

“வேத்தவைப் பாவலரும் வேற்று மொழிகலக்குந்
தீத்திறக் காலை தெளிமருந்தே - மூத்த
முடியரச ரின்றி மொழி வனப்புச் செய்யும்
முடியரசன் செய்யுள் முறை”[6]

என்பது மொழிஞாயிறு தேவநேயப் பாவணரின் பாராட்டுப்பாவாகும்.

“இருபதாம் நூற்றாண்டின் இலக்கியவாதிகளுள்

இணையற்றவர் கவியரசர் முடியரசனார் - முத்தமிழ்க்காவலர்

கி.ஆ.பெ.விசுவநாதம்,

சாதி ஒழிய வேண்டும் எனக் கவிதையிலும் மேடையிலும்

முழங்கிய கவிஞர்களும் அவற்றைத் தன் வாழ்வில்

கடைப்பிடித்தவர் கவிஞர் முடியரசனார் தவிர வேறு யாராவது

இருக்கிறார்களா? எனத் தெரியவில்லை -தவத்திரு குன்றக்குடி அடிகளார்”[7]

என்னும் பாராட்டுரைகளும் இங்குக் குறிக்கத்தக்கவையாகும்.

“அல்மொழி திணிப்பார் வல்வர வெதிர்த்தும்

தொடுமொழிப்போரில் தும்பை சூடியோன்

மொழியர சோச்சும் முதல்முடி யரசன்

குடியரசு போற்றுங் கொள்கை யோனே”[8]

என்று வ.சுப. மாணிக்கம் பாரட்டுரை தந்துள்ளார்.

“மும்முடியை ஓர் தலையில் முடித்த முடியரசர்

எம்முடியும் தலை வணங்கும் இயற்கையிலே கவிஞர்

தம்மரிய கவிதையினால் கவியரசன் ஆனார்

தாய்த்தமிழே! அவர் முடியை உனக்குத்தான் சாய்ப்பார்”

- கவிஞர் கண்ணதாசன்

“.... ...... பாவேந் தர்தம்

தவப்புதல்வர்! தமிழ்ப்புலவர்! இவரின் பாட்டு

தன்மான இயக்கத்தின் தளிர்தா லாட்டு

யுகப்புரட்சி எழுத்தாளா! தமிழர் கைக்கு

உயிர் நூற்கள் பாடைப்பாளா! உன்றன் தொண்டை

அகங்குன்ற நினைக்கின்றேன்! உருவம் கூட

அகலவில்லை! அடடாநீ! எங்கே போனாய்!

- உவமைக்கவிஞர் சுரதா

‘கொட்டிக் கொடுத்தாலும் கோமான்கள் அழைத்தாலும்
எட்டியே பார்க்காத இளம் போத்துச் சிங்கமாய்
அட்டியின்றி பணத்தாசை அணுவளவும் இல்லாமல்
சுட்டி உரைக்கும் சுடர்க்களியாய் கவியுலகில்
பாடிப்பறந்த பறவையாம் கவியரசர் முடியரசன்’

-தமிழாகரர் தெ. முருகசாமி”[9]

எனப் பலரும் முடியரசனின் இலக்கியப் பணியைப் பாராட்டிச் சிறப்பித்துள்ளனர்.

**பரிசுகளும் விருதுகளும்:**

கோவை, முத்தமிழ் மாநாடு அழகின் சிரிப்பு கவிதைக்கு முதற்பரிசு (1950), முடியரசன் கவிதைகள் நூலுக்குத் தமிழ்நாடு அரசு பரிசு (1966), வீரகாவியம் - தமிழ்நாடு அரசு பரிசு (1973), நெய்வேலி – பாவாணர் தமிழ்க்குடும்பம் பொற்கிழி (1979), சிவகங்கை பாரதியார் நூற்றாண்டு விழாக்குழு – பொற்கிழி, அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கம் - பொற்கிழி (1993), இந்திராணி இலக்கியப்பரிசு (1993), அரசர் முத்தையவேள் நினைவுப் பரிசு (1993), கணேசர் செந்தமிழ்க் கல்லூரி பழைய மாணவர் பொற்கிழி (1997) முதலான பரிசுகளைப் பெற்றுள்ளார் முடியரசன்.

‘நல்லாசிரியர் விருது’ (1974), ‘தமிழ்ச்சான்றோர் விருது’ (1983), ‘கலைஞர் விருது’ (1988), ‘பாவேந்தர் விருது’ (1989), இராணா இலக்கிய விருது’ (1994), ‘கல்வி உலகக் கவியரசு விருது (1996), ‘கலைமாமணி விருது’ (1998) முதலான விருதுகளும் முடியரசரைத் தேடி வந்து சிறப்பித்தன எனலாம்.

**இல்லறம்:**

‘சாதி என்பது நமக்கு ஏனோ?’ என்னும் முதற்கவிதையில் பாடியதற்கேற்ப, 2.2.1949-இல் கலைச் செல்வி என்பாரைக் கலப்புமணம் செய்து கொண்டார். இவருக்கு பாரி, குமணன், செல்வம் முதலான மகன்களும், குமுதம், அன்னம், அல்லி என மூன்று பெண்மக்களும் ஒன்பது பேரப்பிள்ளைகளும் உள்ளனர். தம் 79 ஆம் வயதில் 4.12.1998 அன்று முடியரசனார் இயற்கையெய்தினார்.

முடியரசன் படைப்புகளுள் கவிதை மற்றும் காப்பியப் படைப்புகள் மட்டும் இங்கு அறிமுக நிலையில் சுட்டப்பெறுகின்றன.

**முடியரசன் கவிதைகள்:**

கவிஞர் முடியரசனின் முதல் படைப்பான இந்நூல் இரு தொகுதிகளைக் கொண்டுள்ளது. முதல் தொகுதி 1954-ஆம் ஆண்டிலும், இரண்டாம் தொகுதி 1955-ஆம் ஆண்டிலும் வெளிவந்துள்ளது. இந்நூல் தமிழ்த்தாத்தா மயிலை சிவமுத்து அவர்களுக்குக் காணிக்கை ஆக்கப் பெற்றுள்ளது. ‘முடியரசன் கவிதைகளைத் தமிழ்க்கலை என்று கூறலாம்’[10] என்பது முடியரசன் கவிதைகள் பற்றி மயிலை சிவமுத்து அளித்துள்ள மதிப்பீடாகும். இந்நூல்கள் காவிய உலகம், இயற்கை உலகம், காதல் உலகம், தொழில் உலகம், தமிழ் உலகம், சான்றோர் உலகம், பல்வகை உலகம் என்னும் ஏழு தலைப்புகளில் 78 கவிதைகளைக் கொண்டுள்ளது. இதில் அமைந்துள்ள பத்துக் கவிதைகள் சாகித்திய அகாதெமியால் இந்தி மற்றும் ஆங்கில மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன என்பது சிறப்பாகச் சுட்டத்தக்கது.

**காவியப்பாவை:**

இசையரங்குகளில் பெரிதும் ஒலிக்கும் பிறமொழிப் பாடல்களைக் கேட்டு மனம் வெதும்பிய முடியரசன், தாமாகவே இசை அமைத்து 75 பாடல்களைப் புனைந்து ‘காவியப்பாவை’ என்னும் பெயரில் 1945-இல் வெளியிட்டார்.

> “இசையரங்குகளில் தமிழுக்கு இன்னும் தடையுளதே என்னும் ஏக்கத்திற் பிறந்தது தான் இந்நூல். இசைவாணர் மனங்கொள்ளுவரேல் இவள் குரல் தமிழகம் எங்கும் எதிரொலிக்கும்”[12]

என்னும் பாடல்வரிகளும் இங்கு இணைத்து நோக்கத்திற்குரியது. தமிழ், மொழி, இனம் நாடு, இயற்கை, பொது நலம், பாப்பா பாட்டு, காதல், கலைகள் முதலானவை குறித்து இசையோடு அமையும் பாடல்களைக் கொண்ட இந்நூல் இசையோடு படித்தின்புறத்தக்கது.

**பாடுங்குயில்:**

தமிழுக்குப் புதுமை செய்வதாக எண்ணி, ஏதேதோ எழுதிக் கவிதையெனப் பெயரிட்டு வெளியிடும் இளைய சமுதாயத்தினருக்கு வழிகாட்டும் நோக்கில் முடியரசன் இந்நூலை எழுதியுள்ளார்.

"கற்பனை வளமும் பொருள் நலமும் செறிய எழுதும் இளைஞர் பலர் இன்று கவிதை உலகிலே உலாவரல் கண்டு மகிழ்ச்சி பெருக்கெடுத்தோடுகிறது. ஆயினும் கவிதை என்ற பெயரால் உரைநடைகளை எழுதுவது கண்டு அம்மகிழ்ச்சி வற்றி வறண்டு போய் விடுகிறது. வழி தவறிச்செல்லும் அவர்களுக்கு இந்நூல் நேர்வழி காட்ட உற்ற துணையாகும் என்று நம்புகின்றேன்"[13]

என்று நூலின் முன்னுரையில் முடியரசன் எழுதியிருப்பது இந்நூலின் நோக்கத்தைத் தெற்றெனப் புலப்படுத்துகிறது. 'தமிழைப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் வல்ல தமிழன்பரும் தம் கவிதையின்பால் ஆழ்ந்த பற்றுடையவரும் படகு கவிழ்ந்து இளம் பருவத்திலேயே இயற்கை எய்தியவரும். தமது பெயரைச் செம்பியன் எனத் தமிழாக்கிக் கொண்டவருமான சோவியத்து நாட்டுத் தோழர் ரூதின் அவர்களுக்கு இந்நூலைக் காணிக்கையாக்கி மகிழ்ந்திருப்பது'[14] முடியரசனாரிடம் குடிகொண்டிருந்த தமிழ்ப்பற்றையும் நட்பின் ஆழத்தையும் புலப்படுத்துகிறது.

எழுபத்தெட்டு மெல்லிசைப் பாடல்களைக் கொண்ட இந்நூலின் தொடக்கத்தில் தமிழின் பெருமையயைப் பறைசாற்றும் வகையில் முடியரசன் பாடியிருக்கும்,

"செந்தமிழே என்னுயிரே புலவர் நெஞ்சில்
சேர்ந்தாடும் எழில் மயிலே என்னுட்பொங்கி
உந்திவரும் உணர்வதனால் கூவிக் கூவி
உவகைதரும் பூங்குயிலே மொழிக் குலத்தில்
முந்திவரும் தெய்வமே என்னைச் சூழ்ந்து
மொய்த்துவரும் துண்பாடலாம் நீக்கி யின்பம்
தந்துவரும் ஆரணங்கே அன்பே நின்றன்
தாள்வணங்கி, நிற்கின்றேன் அருள்வாய் அம்மா"[15]

என்னும்தெமிழ் வாழ்த்து மனோன்மணீயம் நாடகத் தொடக்கத்தில் சுந்தரனார் தமிழின் உயர்வைப் பாடியிருக்கும் தமிழ் வாழ்த்தோடு இணைத்து நோக்கத் தக்கது.

"நானொரு பாடும் பறவை – பொற்வேன்

நாடோடிலும் பாடல் நலுவை

வானில்விரிப்பேன் சிறகை – மறவேன்

வாழ்த்திடும் மண்ணின் பறவை

பாடுவ தென்றான் தொழிலாம்[16]

என்று முடியரசன் பாடியிருப்பது எனக்குத் தொழில் கவிதை எனப் பாரதி பாடியதை அடியொற்றி அமைந்துள்ளது. மேலும்

“பாடிடு வேன்புது வுலகை – அங்கே

படைத்திடு வேன்பொது வுடைமை”[17]

என்றும் பாடியிருப்பதை

“முப்பது கோடி ஜனங்களில் சங்கம்

முழுமைக்கும் பொது உடைமை

ஒப்பி லாத சமுதாயம்

உலகத்துக் கொரு புதுமை”[18]

என்னும் பாரதியின் கவிதையைச் சரியாக உள்வாங்கிக் கொண்டிருப்பதன் வெளிப்பாடு என்றே கூறத் தோன்றுகிறது.

**கவியரங்கில் முடியரசன்:**

தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களில் நடந்த கவியரங்குகளிலும் வானொலி நிலையம் நடத்திய கவியரங்குகளிலும் முடியரசன் கலந்து கொண்டு தம் கவிதைகளை அரங்கேற்றியுள்ளார். கவியரங்கத் தலைமையேற்றும் பிறர் தலைமையிலும் தமிழ் வாழ்வு, ஆடவர், எண்ணம், உணவு, பாரதியும் கவிதையும், நட்பு, யாதும் ஊரே யாவரும் கேளிர், திரு.வி.க, அழகப்பர், அரசியல் அறிஞன், குறிஞ்சி, எனக்கும் ஓர் அதியன், பாரதி – வீரன், முயல்வோம் வெல்வோம், திராவிட நாட்டின் வளம், உறவினர், உரிமை, பாரதியார் முதலான பதினெட்டுத் தலைப்புகளில் பாடிய கவிதைகள் இந்நூலில் அடங்கியுள்ளன.

“சிலர் கவிதை பாடும்போது ‘பிரசவவேதனைப் படுவதுண்டு

முடியரசனுக்கோ எண் சீர் விருத்தம் வெண்பா, அகவல்

முதலிய பாவகைகள் பாடுங்கால் வேதனைப் பட்டதாகவே அறிந்ததில்லை. ஒரு பாடல் விறுவிறப்பேறும், கருத்துமிகும்: சொற்கள் வளம் பெறும், அவர் முகமும் மலரும், உள்ளம் உவகையூற்றின் உச்சியிலே களித்துக் கிடக்கும். இதைப் பார்த்த பிறகுதான் அவரை உண்மையிலேயே கவிஞரெனக் கூற என் மனம் ஒப்பியது. அவர் மேடை ஏறித் தோற்றது கிடையாது"[19]

என்பது முடியரசனின் கவியரங்கக் கவிதை வீச்சு குறித்த தமிழண்ணலின் மதிப்பீடாகும்.

"முடியரசன் இவரென்றால் மக்க ளெங்கே?
முன்னோடும் பரி எங்கே? படைக ளெங்கே?
முடி எங்கே? அரசெங்கே? முரச மெங்கே?
முத்தமிழில் ஒரு தமிழ்தான் முடியோ! மற்ற
இடைத்தமிழ்தான் அரசோ! மூன் றாவதான
எழிற்றமிழ்தான் முரசோ! ஓ! சரிதான் இந்த
முடியரசன் பாவரசன் பாடுகின்றார் நாம்
முழங்காலை நிலந்தாழ்த்தி வணங்கிக் கேட்போம்![20]

எனக் கவிஞர் கண்ணதாசன், முடியரசனைப் பற்றிப் பாடியிருப்பது பொருத்தமுடையதெனலாம்.

**தமிழ் முழக்கம்:**

முடியரசன் பாடிய கவியரங்கக் கவிதைகளின் தொகுப்பாய் இந்நூல் அமைந்துள்ளது. இதில், பாட்டுப்பறவைகள், குயில்பாட்டு, தென்னாட்டுக் கலைகள், பிரிவில் கண்ணகி, புகழ்க்கம்பன், நமது வீரம், நீரின் பெருமை, பறம்புமலை, செஞ்சொற்சிலம்பு, விண்குடும்பம், ஊர்வலக் காட்சி, நெல்லின் கதை, மரத்தின் பெருமை, கம்ப நாட்டில், பிறவிக் கவிஞன், பாவேந்தர் வழங்கிய கொடை, பாரதி பொழிந்த மழை, அண்ணல் நடந்த அடிச்சுவடு முதலிய தலைப்புகளில் பதினெட்டுக் கவிதைகள் அமைந்துள்ளன.

"மண்ணிற் கிடந்து மடிகின்ற மாந்தனைநீ
நண்ணி உணர்வூட்டு நாளும் வலிவூட்டு

கண்ணைத் திறந்துவிடு காலத்தை ஞாலத்தை

எண்ணித் தொழில்புரிய ஏவிவிடு, மண்ணகத்தே

வாழ்வாங்கு வாழ வழிமுறைகள் சொல்லிவிடு

தாழ்வாகி நிற்போர் தலைநிமிரச் சொல்லிவிடு"[21]

என்று தமிழ்த்தாய் தன்னை நோக்கிக் கூறியதாக முடியரசன் பாடியிருப்பது நாடு, இனம், மொழி நலன் காக்கப் பாடும் முடியரசனின் தனித்தன்மையை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

**நெஞ்சு பொறுக்கவில்லையே:**

நாட்டில் காணப்பெறும் தீமைகளைக் கண்டு மனம் கொதித்துப் பாடிய பாடல்களின் தொகுப்பே இந்நூல். இதில் 36 பாடல்கள் உள்ளன. தமிழ்த்தாய் வணக்கம், நெஞ்சு பொறுக்குதில்லையே, நெஞ்சுத்துடிப்பு, அச்சு முறிந்தால், வகுப்பறையும் மாணவரும், நூலகமும் மாணவரும், ஒப்பனையும் மாணவரும், அரசியலும் மாணவரும், இதழ்களும் மாணவரும், திரைப்படமும் மாணவரும், பெற்றவர் தூங்கினால், ஓடம் பழுதானால், புலவர் குறிக்கோள், காசுக்கா நீதி?, மருத்துவ மனையா? வருத்தும் மனையா?, நியாய விலைக்கடை, கையூட்டுலகம், பூக்களிற் புழுக்கள், ஏச்சு மேடை, தேர்தலாற் கண்ட பயன், கண்ணீர்த் துளி, எது நாட்டுப் பற்று?, உலகை நினையுங்கள், எழுத்துலகம், கேள்வி-பதில், ஓதிக்கெட்டவன், திருமணச் சந்தை, படிப்பும் நடப்பும், ஈழம் சிவந்தது, உலகம் சிவக்கும், தேவதாசி முளையிலே கிள்ளுக, ஒப்பனை மகளிர், திரையரங்க வீரம், மனித மந்தை முதலான தலைப்புகளில் பாடிய பாடல்கள் இந்நூலில் காணப்பெறுகின்றன.

> "நடுவுநிலமையில் நின்று நாட்டைப் பார்க்கிறேன். நாட்டைச் சுற்றிக் குற்றங்களும் குறைபாடுகளும் முற்றுகையிட்டுக் கிடப்பதைக் காணுகிறேன். அவை கடியப்பட வேண்டுமென்பதற்காகச் கண்டிக்கிறேன். அக்ண்டனத்தில் என் நண்பர்களும் சிக்கலாம். அதற்கென்ன செய்வது? கண்டனதக்குள்ளோர் வகுத்துவர் என்பதையும் அறிவேன். மாணவன் வருந்துவானே என்பதற்காக ஆசானும், மகன் வருந்துவானே என்பதற்காக அன்னையும் கண்டிக்காமல் இருந்துவிடின் நிலைமை என்னாவது?, குமுகாய மண்புக்கு மாயுமே என்று குமுறும் எனது நெஞ்சம் கடமையைச் செய்யத் தூண்டுகிறது. எனது கடமையை நான் செய்கிறேன்.

பிறரை வருத்த வேண்டும் என்பதற்காக எழுதவில்லை:
அவரைத் திருத்த வேண்டும் என்பதற்காகவே எழுதுகிறேன்”[22]

என்று முடியரசன் இந்நூலின் முன்னுரையில் கூறியிருப்பது ஒரு சீர்திருத்தியின் கடமையைத் துலக்கிக் காட்டுவதாக அமைகிறது.

நாட்டில் நிலவும் தீமைகளைச் சுட்டிக் காட்டுவதோடு மட்டும் அமையாமல் அவற்றிற்கான தீர்வின் திசைநோக்கிச் செலுத்தும் வகையிலும் கருத்துரைக்கும் கவிதைகளைப் பாடியுள்ளார் முடியரசன். சான்றாக,

“எங்கெங்கும் காணினும் தீமையடா – உல
கெங்கணும் வாய்மைகள் ஊமையடா
அங்கங்கு வாழ்பவர் எள்ளினரே – குணம்
அத்தனை யுங்கொண்டு தள்ளினரே
தங்கடன் செய்வதில் தூங்குகிறார் - மனச்
சான்றுகள் கொய்யவே ஏங்குகிறார்
இங்கவர் நல்லவ ராவதெந்நாள்? – கெடும்
எண்ணங்கள் யாவுமே போவதெந்நாள்?”[23]

என்றும்,

“தீய குணங்களைத் தூக்கி எறி – அது
தெள்ளிய நாட்டினைக் காக்கும் நெறி
தூய மனத்தினைப் போற்றிநட – பொதுச்
சொத்தினைக் கண்ணெனக் காத்துநட
சேயுன் தன்னையின் நாடுயர – மனச்
செம்மையைக் காத்திடப் பாடுபடு
தாயக மேன்மையை ஆக்கிவிடு – வளர்
தம்பிஎன் வேதனை நீக்கிவிடு”[24]

என்றும் அமையும் கவிதைகளைச் சுட்டலாம்.

**மனிதனைத் தேடுகிறேன்:**

மக்கட்பண்பு குறைந்து வரும் இன்றைய உலகின் நிலை கண்டு முடியரசன் பாடிய 32 பாடல்களின் தொகுப்பே இந்நூல். நந்தா விளக்கே, மனிதனைத் தேடுகிறேன், அந்தோ அரசியலே,! அரசியல் அரங்கம், வண்ணமும் எண்ணமும், நாடு உருப்படுமா?, தேர்தல் திருவிழா, சிலம்பட்டும் போர் முரசு, உரிமையும் கடமையும், எது துணிவு?, தீண்டாமை நல்ல சமையமடா!, கடைத்தெருவில், நமது வாணிகம், நல்ல உலகமடா!, சிவப்பு விளக்கு, முன்னறிவிப்பு, இருண்ட வீடு, துன்புறவோ பெற்றாள்?, புது விதி செய்வோம், விடிவு தோன்றும், போலிக் குடும்பம், சமூதாய வீதியிலே, திரையுலகக் கற்பு, வாழ்வுப் பாதையில் பக்தி, இன்றைய மனிதன், வெம்புவான் கம்பன், பாரதி கண்ட பெண்ணுரிமை, இதுவா முன்னேற்றம், பெண்ணின் பெருமை, அணையா விளக்கு முதலான தலைப்புகளில் பாடிய கவிதைகள் இந்நூலில் உள்ளன.

> “பண்பாட்டை ஓர் ஏலனப் பொருளாகக் கருதிப் புறக்கணித்து விட்டு, மக்கள் நடந்து செல்வதைக் காணுந்தொறும் மனம் வருந்தி உருகுவதற்கு மக்களின் தவறான போக்கு என் நெஞ்சத்தில் அழுத்திக் கொண்டேயிருக்கும், வாய்ப்பு நேரும் போதெல்லாம் அவ்வழுத்தத்தால் ஏற்பட்ட வேதனைகளை வெளிப்படுத்துவதுண்டு. அதனை என் கடமையாகவே ஏற்றுள்ளேன். ‘கவிதை என் கைவாள்’ என்று கவிஞர் ஒருவர் கூறியதை அடிக்கடி நினைத்துக் கொள்வதுண்டு. குமுகாயக் குறைகளை – தீமைகளை கொடுமைகளை எதிர்க்க அக்கைவாளைப் பயன்படுத்தி வருகிறேன்”[25]

என்று இந்நூல் முன்னுரையில் ‘பொழுது புலரட்டும்’ என்ற தலைப்பில் முடியரசன் குறித்துச் செல்வது மனங்கொளத்தக்கது. மனிதப் பண்பிலிருந்து தடம் மாறிச் செல்லும் மனித சமுதாயத்தைச் சீரமைக்கும் திடமான சிந்தனையோடு அமையும் பாடல்கள் இத்தொகுப்பில் அமைந்துள்ளன.

“கடமைசெயத் தயங்குகிறோம், கண்ணி யத்தைக்
　　காற்றின்மிசைப் பறக்கவிட்டோம்: கட்டுப் பாட்டை
அடிமைநிலை எனக்கருதி உதறி விட்டோம்:
　　ஆதலினால் மானுடத்தைச் சீர ழித்தோம்

கெடுவினையை விட்டொழித்தால் அருவ ருக்கும்

கீழ்மைதனைச் சுட்டெரித்தால் இருளில் வீழ்த்தும்

மடமையினை தகர்த்தெறிந்தால், மக்கட் பண்பை

மதித்திருந்தால் மானுடமே வெல்லும் வெல்லும்"[26]

என்னும் கவிதையைச் சான்றாகக் குறிக்கலாம்.

**மனிதரைக் கண்டு கொண்டேன்:**

மனிதரைக் கண்டு கொண்டேன் என்னும் இந்நூலில் என்றும் வாழ்வர், தமிழ்த்தொண்டு, அப்பரடிகள், எழுத்து மலை, வாழிய தமிழ் முனிவர், வாழிய மனித நேயம், பழமை வேண்டான்!, தொடர்வோம் தொண்டு, புதுக்கோட்டைக் காந்தி, மணிவிழா வாழ்த்து, வாழும் அண்ணாமலை, தமிழ்க்கடல், மாணிக்கப்புலவன், குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா, பதிப்புச் செம்மல், உடன் பிறவாத் தமக்கை, நட்பிற்பெரியன், பொற்கிழி பெற்றவன், வணிக நோக்கறியான், கலைத்திறன் காட்டும் கணபதி, பழனி தந்த பாட்டு, பாளைநகர்ப் பண்பாளன், உயர்ந்தவன், அன்பு தரும் அழகன், தோள் தந்தான், அழகின் சிரிப்பில் கலைஞர், தூற்றலுக்குத் துவளாதான், முறுவலிக்கும் இளையவனே, வாழிய தமிழரசு, என்றும் உயர்க எழில் முல்லை, வாழிய கவிதை, உலகத் தமிழ்க்கழக வாழ்த்து முதலான தலைப்புகளில் பாடப்பெற்ற கவிதைகள் இடம்பெற்றுள்ளன.

நாடு, மொழி, இன நலனுக்குழைத்த நல்லோரை, சான்றோரைப் பற்றிப் பாடிய பாடல்களைத் தொகுத்து இந்நூலை உருவாக்கியிருக்கும் முடியரசன்,

> "குறைகளைச் சுட்டிக்காட்டித் திருத்த முயல்வது ஒருமுறை நிறைகளை எடுத்துக்காட்டி ஆர்வமூட்டி நெறிப்படுத்துவது மற்றொரு முறையாகும். அதனால் தனிமனிதரைப் புகழ்வது என் நோக்கமன்று. தன்னலம் தவிர்த்துப் பொது நல நோக்கு ஓரளவு காணப்படினும் அவர்களைப் பாடியிருக்கிறேன். வளருங் குமுகாயத்திற்கு வழிகாட்டும் என்ற நம்பிக்கைதான் வேறொன்றுமில்லை"[27]

என்று நூலின் முன்னுரையில் குறித்துச் செல்வது 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே' என்பதை எடுத்துக்காட்டுகிறது.

"நாவாழும் தமிழ்மொழிக்கே வாழ்வு வேண்டி

நயத்தக்க ஆய்வுரைகள் எழுதிக் காட்டித்

தீவாழும் நெஞ்சுடைய ஆரி யத்தின்
 திரிபுரையைப் பகுத்தறிவால் மறுத்துக் காட்டிக்
கோவாக நம்முன்னே வீற்றி ருக்கும்
 கொடுமீசை சிவந்தவிழி கருத்த மேனிப்
பாவாணர் படைத்தளித்த எழுத்த னைத்தும்
 பசுந்தமிழுக் காணிவேர் ஆகி நிற்கும்"[28]

என்று பாவாணர் குறித்தும்,

"சமயமெனக் கடவுளெனப் பேர்கள் சொல்லித்
 தழைத்துவரும் போலகளைக் கடியும் கூர்வாள்:
தமிழரிடைப் படர்ந்துவரும் சாதித் தீமைச்
 சழக்குகளை வேரொடுசுட் டெரிக்குஞ் செந்தீ!
இமயமலை தந்தபொது மொழியீ தென்றே
 இந்திவரின் தடுத்தொழிக்குக் கேட யங்காண்.,
நமதினத்தை விழிப்புறுத்தும் வெற்றிச் சங்கம்
 நாளெல்லாம் அவனெழுதித் தந்த நூல்கள்"[29]

என்று மறைமலையடிகள் குறித்தும் பாடியிருக்கும் கவிதைகள் வாயிலாக முடியரசனின் தமிழ்ப்பற்றும் சமூகப் பார்வையும் தெற்றெனப் பனிச்சிடுவதைக் காணமுடிகிறது.

**நெஞ்சிற் பூத்தவை:**

> "உணர்ச்சிக் நான் ஆட்படும் பொழுதெல்லாம், அவ்வுணர்ச்சியை வெளிப்படுத்தித் தீரவேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்படுவதுண்டு. அதன் வெளிப்பாடே இத்தொகுப்பிற் காணப்பெறும் கவிதைகள்"[30]

என்ற முன்னுரையோடு தொடங்கும் இந்நூல் தமிழ் வாழ்த்து, வாளென் செயும், தமிழே வா!, என்னுயிர்க் காதலி, பைந்தமிழ்க் காதலி, கருத்தற் கலந்த கழகம், எனது வாழ்க்கை, எனது வாழ்வில், சின்னந்தவிர்ந்தேன், நாத்திகனா? ஆத்திகனா?, பாரதிதாசன் என் அரசன், நினைந்து மகிழ்கிறேன், தலை நண்பன், என்னெதிர் நில்லேல், புகழ்ச்சியின்

பயன், அன்றும் இன்றும், புறமும் அகமும், நகைதரு செயல், வாழ்க தமிழரசு, தன்னம்பிக்கை, சேரிடம் அறிந்து சேர், புகையும் மனத்தன், புகைப்புராணம், களிதரு சுரும்பு, கல் சொன்ன கதை, கடலின் பெயர்கள், மலையிற் பிறந்த மகள், வான்மழையே வா!, உயிர்ப்பொம்மை, நெஞ்சிற் புகுந்த வேல், ஆசையெனும் ஆழ்கடலில், எத்தனைப் பாடல்கள், வாழ்க்கைப் போராட்டம், காலம் வரும், நேரம் வரும், அவள்தான் பாடவைத்தாள், புதிய உலகம், பனிபொழியும் நிலவில், அவர் வரவில்லை, இசை மாறிய வீணை, காதலர் சொல்லாடல், பருவப்பேச்சு, காவிய மேடையில், உவமையறியாக் கவிதை, அதுவா இதுவா?, இரண்டு குழந்தை, பள்ளிக்கு அழைத்தவள், சிரித்த முகம், சீரழிந்து போகாதே, பொய்மைகள் மாயும், மையல் தீர, முகக் கண்ணாடி, பேதமேது, சிரிப்பதேனடி, உதவுவையே, நல்குன் அருள் முதலான 55 தலைப்புகளில் பாடிய கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூலின் தொடக்கத்தில் அமைந்திருக்கும்,

“இடர்பல சூழ்ந்த போதும்
என்னுடன் தளர்ந்த போதும்
மிடியெனைத் தின்ற போதும்
விழியொளி குறைந்த போதும்
கடமையில் தவறேன் அம்மா
கனிந்துனைப் பாடிப்பாடி
இடுபணி புரித லன்றி
இனியெனக் கென்ன வேலை?[31]

என்னும் தமிழ் வாழ்த்துப் பாடலைப் பயில்வார் நெஞ்சம் கசிந்துருகும். முன்னுரைக்கு அடுத்தாற்போல் கவிஞர் இறுதியாக இயற்றிய கவிதையாக அமையும்,

“வாளால் பிளப்பினும் வாழ்நாள் இழப்பினும் வஞ்சமனக்
கேளார் குழுமிக் கெடுதிகள் சூழினும் பூமியில்வாழ்
நாளெலாம் வாட்டும் நலிவே உறினும் நற்றமிழே
ஆளாதல் திண்ணம் அடியேன் நினது மலரடிக்கே”[32]

என்னும் கவிதை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

**தாய்மொழி காப்போம்:**

தமிழுக்கும் தமிழருக்கும் நலம் சேர்க்க வழிகாட்டும் 52 கவிதைகளை உள்ளடக்கிய இந்நூலிற்குப் 'போராட்ட உணர்வு வேண்டும்' என்ற முன்னுரையையும் எழுதியுள்ளார் முடியரசன். தமிழ் வணக்கம், மூன்று தமிழ் தோன்றியது, தமிழ் காப்போம், கனன்றெழுக, உயிர் கொடுப்போம், சாவுக்கும் அஞ்சோம், வாகை கொள்வோம், இனி விடோம், மாவீரர் பலருண்டு, தமிழோடிணைந்தாய், தமிழே வெல்லும், செல்லடி செல்லடி இந்திப் பெண்ணே, ஒன்றே நினைப்பீர், பிரிந்து போ, சட்டம் செய்க, பொய்த்த வாய்மொழி போதும், விடைகொடு தாயே, முழங்கட்டும் போர்ப்பாறை, வாளேந்தி வா மகனே, போர் தொடுப்பாய், போருக்கு வா, வாகை சூடு, வெறி வேண்டும், அந்த நாள் வந்தே தீரும் வாழ்வா? சாவா?, தாய்மொழிப்பற்று, உறங்குந்தமிழ் மகன், தமிழர் போக்கு, என்று தணியும்?, எக்காலம், தமிழனா நீ?, சமயத்தில் நட்டதமிழ், கோவிலுக்குள் கொடுமை, திரும்பி விட்டேன், எது கவிதை, ஆணா பெண்ணா, ஐக்கூ அடிமை, அதன் பெயர் என்ன?, கற்றாழை வேண்டுகிறேன். பட்டஞ் சூட்டுக, தமிழ்ச் சான்றோரைப் போற்றுக, உளங்கவர் புலவர், இளங்கோவடிகள், புரட்சிப் பாவலன், ஞாயிறு போற்றுதும், மீண்டது பொற்காலம், வாழ்க முச்சங்கம், தமிழின் செம்மை, தமிழில் மறுமலர்ச்சி, செந்தமிழ்ச் செல்வி, காப்புப் பருவம், பாடிக் கொண்டேயிருப்பேன் என 52 தலைப்புகளைக் கொண்டு அமைந்திருக்கும் இந்நூலின் தொடக்கத்தில் உள்ள,

''முத்தமிழே உனை எப்பகை யாகினும்
முற்றிட முன்வருமேல்
எத்தடை மோதினும் அப்படை யாவையும்
எற்றிமு ருக்கிடுவேன்
எத்துயர் நேரினும் அத்தொழில் ஆற்றிட
எப்பொழு தும்தவறேன்
மத்தக யானையைச் செற்றிடும் ஏற்றரி
வல்லமை தந்தருள்வாய்''[33]

என்னும் தமிழ் வணக்கம் தமிழ் நலங்காக்கத் தமிழரை அணிதிரட்டும் வல்லமை உடையதெனில் தகும்.

''இனமும் மொழியும் ஏற்றம் பெறுமிடத்தே தான்,
பொதுமையோ புதுமையோ நிலைத்தவையாக -

உண்மையானவையாக மிளிர இயலும். இன்றேல் பொதுமையும் புதுமையும் வெறுமையாகும். ஆதலின் மொழியுணர்வு கொள்க. மொழித் தொண்டு புரிந்தோரைப் போற்றி இனவுணர்வு கொள்க… ஏய்ப்பும் எதிர்ப்பும் தடுப்பும் மறுப்பும் ஏற்படுங்கால் அஞ்சலும் துஞ்சலும் கெடுத்து மயக்கமும் தயக்கமும் விடுத்து, ஆண்மையும் வாய்மையும் கொண்டு, அவற்றை எதிர்த்துத் தகர்த்தல் வேண்டும். தன்னிலை மறந்து தமிழ் மகன் மெய்ந்நிலை பெறுதல் வேண்டும். இத்தகு போராட்டவுணர்வு ஒன்றுதான் இன்று தேவை”[34]

என்று இந்நூலின் முன்னுரையில் முடியரசன் குறிப்பிட்டுச் செல்வதில் தாய்மொழி காப்பதில் அவருக்கிருக்கும் போர்க்குணம் மிளிர்வதோடு, அக்கடமையில் ஒட்டுமொத்தத் தமிழ்ச் சமுதாயத்தை இணைத்திடும் முனைப்பும் புலனாகிறது.

**புதியதொரு விதி செய்வோம்:**

தமிழ், தமிழர் வளர்ச்சிக்கும், சமுதாயச் சீர்த்திருத்தத்திற்கும் வழிகோலும் வகையில் தமிழ் வாழ்த்து, ஏடெடுத்தேன் பாட்டெழுத, புதியதொரு விதி செய்வோம், பகடைக்காய், ஏர் நின்றால், பொதுமை காண்போம், பூக்கட்டும் பொதுமை, யாவும் பொதுமையடா, உலகை மாற்றுவோம், துன்பத் துடிப்பு, தீ பரவட்டும், தமிழர் திருநாள், திரும்பிப்பார் அந்நாள் எந்நாள்?, சிறுத்தையே விழித்தெழு, தமிழின வரலாறு, இன்றைய நாடு, ஆரியப்பேரரசு, தமிழக அரசு, ஒருமைப்பாடு, ஒற்றுமையும் ஒருமையும், ஒற்றுமை உருப்படுமா?, எங்கே தமிழன்? தமிழனா? இந்தியனா?, என் குறிக்கோள், ஏற்றம் பெறுமா இந்தியா, கண்ணீர்ப்பொங்கல், பொங்கல் விழா, தீப்பொறி, நீர்ப்பானை ஓட்டையானால்?, விண்வெளிப் போருக்கா விஞ்ஞானம்?, சான்றோர் செய்த பிழை, தேர்தல் நினைவு, விழா மட்டும் போதுமா, நன்றி காட்டுக, கண்ணீரை யார் துடைப்பர்?, இன்பம் எது? முதலான தலைப்புகளில் பாடப்பெற்ற கவிதைகளின் தொகுப்பாக விளங்குகிறது இந்நூல்.

“போராடும் உலகத்தைச் சாய்க்க வேண்டின்
    புதியதோர் உலகத்தைப் படைத்தல் வேண்டும்.
நீரொடு நிலம்நெருப்பு வானம் காற்று
    நிறைபொருள்கள் தனியுடைமை ஒருவர்க் கென்றால்
வேரோடு சாய்க்கின்ற துணிவு வேண்டும்:

விளையாட்டுப் பேச்சாலே பயனே இல்லை:
யாரோடும் பகை வேண்டாம் ஒன்று பட்டால்
யாவுமிங்குப் பொதுவாகும் புதுமை பூக்கும்"[35]

என்று இந்நூலில் முடியரசன் பாடியிருப்பது,

"புதியதோர் உலகம் செய்வோம் - கெட்ட
போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்
பொதுஉடைமைக் கொள்கை திசையெட்டும் சேர்ப்போம்
புனிதமோ டதை எங்கள் உயிரென்று காப்போம்
இதயமெலாம் அன்பு நதியினில் நனைப்போம்
'இது எனதன்'னுமோர் கொடுமையைத் தவிர்ப்போம்
உணர்வெனும் கனலிடை அயர்வினை எரிப்போம்
'ஒருபொருள்தனி' எனும் மனிதரைச் சிரிப்போம்!"[36]

என்னும் பாவேந்தர் பாரதிதாசன் கவிதையோடு ஒப்புநோக்கத்தக்கது.

**வள்ளுவர் கோட்டம்:**

உலகப்பொதுமறை எனப் போற்றப்படும் திருக்குறளைப் பரப்பும் நோக்கில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

"நம் மறைகூறும் நெறிமுறைகள் நாடெங்கும் பரவவேண்டும்
என்னும் ஆர்வத்தால் இந்நூல் வெளியிடப்பெறுகிறது"[37]

என்று இந்நூலின் முன்னுரையில் முடியரசன் கூறியிருப்பதன் வாயிலாக நூலின் நோக்கத்தைத் தெளிவாக அறிய முடிகிறது. திருக்குறளைப் பரப்பத் துணை செய்யும் வகையில் முப்பால் அமுது, குறளிநெறிக் கொற்றம், ஏன் சிரித்தான்?, சாதிப்போர், கனவின் நிழல், இன்பமா துன்பமா?, திருக்குறள் நம் மறை, பொதுநூல், இம்மைநலம் துய்ப்போம், அறத்தின் வழிகாட்டி, சுவையோ சுவை, குறள் மனிதன் குறிக்கோள், வள்ளுவர் கண்ட உடைமைகள், மானங்காப்போம், குடும்பமும் குறளும், சிரிப்பும் அழுகையும், வாழ்க்கைக்குத் தலைவன், வள்ளுவர் இன்று வந்தால்?, நடை பயல்வோம் வள்ளுவன் அறநெறி ஆசான், தில்லியில் வள்ளுவர், வள்ளுவர் வழி, நல்ல குடும்பம், குறளும் ஏசுவும், எந்நாளோ, வள்ளுவர் கோட்டம், உய்யுமோ தமிழர் நாடு, வள்ளுவர்

உலகில் என ஏழு தலைப்புகள் வாழ்க அவ்வுலகம், வள்ளுவம் பகைமைக்கு மருந்து, நமது கடமை முதலான தலைப்புகளில் பாடப்பெற்ற கவிதைகள் அமைந்துள்ளன. நூலின் இறுதியில் அமையும்,

"உலகவர லாறுரைக்கும் சுவடிக் குள்ளே

ஓரேடு தமிழினத்தின் வரலாறாகச்

சொலமறைநூல் தந்தானை, பண்பா டெல்லாம்

தொகுத்தெடுத்து மொழிந்தானை எங்கள் செந்நாப்

புலவனென்னும் பெயரானை, சிறிய பாட்டால்

புதுமையுற உலகினையே அளந்து காட்டிக்

குலவுபுகழ் கொண்டானை வணங்கி நின்று

கொள்கை வழி நடப்பதுநம் கடமை யாகும்."[38]

என்னும் கவிதையில், உலகப்பொதுமறையாம் குறள்வழி நிற்பதே தமிழ்மக்கள் அனைவரது கடமையாகும் என்பதைத் தெளிவுபடுத்துவது போற்றுதற்குரியது.

**ஞாயிறும் திங்களும்:**

தந்தை பெரியார், அறிஞர் அண்ணா ஆகியோர் குறித்து முடியரசன் பாடிய பாடல்களுள் சிலவற்றைத் தொகுத்து இந்நூல் உருவாக்கப்பெற்றுள்ளது. வேலைச் சுழற்றுங்கள்! வேதனையை நீக்குங்கள், தமிழினத்தின் தனித்தலைவர், தன்மானப் புத்தகத்தை மூடமாட்டோம், புத்துலகச் சிற்பி இயற்கைப்பெரியார், இனத்தலைவர், தட்டி எழுப்பினார், உடைத்தெறிந்தார், தண்டூன்றும் பெரியார், சங்கே முழங்கு, ஆதவன், வெண்தாடி வேந்தர், போராட்ட வீரர், பகலோன் வாழ்க, தொண்டுக்கிலக்கணங்கண்டவர், இன்றைய நாடு, ஒன்றா இரண்டா?, எப்படிப் பெரியார் வாழ்வார்?, பல்லாண்டு பல்லாண்டு, காஞ்சிக்கதிரவன், தமிழ்காத்த தலைவர், புரட்சித்தலைவன், தமிழ்நாட்டுப் பேரரண், எழுத்தும் பேச்சும், கழகம் வென்றது, அரசு நாட்டினான், தலைவா வருக, காக்குங் கைகள், தாய்மொழிக் காவலர், காக்குந்தொழில் வல்லான், ஆழம் அறியா அன்புள்ளம், அண்ணா வருக!, யாழ் உடைந்தது, அடக்கத்தை அடக்கப் செய்தோம், நெஞ்சும் நெஞ்சுருகும், பண்பு மலர், அண்ணா பேசினார், அண்ணா வழியில் அயராதுழைப்போம், வெற்றிமலர் சூடுங்கள், தொடர்ந்து செல்வேன் ஆகிய நாற்பது தலைப்புகளில் பாடப்பெற்ற கவிதைகள் இந்நூலில் அடங்கியுள்ளன. திராவிட இயக்கத்தின் இரு

பெருந்தலைவர்களான பெரியாரையும், அண்ணாவையும் அவர்தம் செயல்பாடுகளையும் ஏற்றிப் போற்றும் இக்கவிதைகள் சிறப்பிற்குரியன.

இந்நூல் கவியரசன் முடியரசன் அவைக்களத்தால் 1999-இல் முதலில் வெளியானது, அப்பதிப்பின் அணிந்துரையில்,

> “தமிழ்ச் சமுதாயம் மேன்மை எய்துவதற்குத் தேவையான கருத்துகளைத் தந்தை பெரியார் அவர்கள் வன்மையாகவும் பேரறிஞர் அண்ணா அவர்கள் மென்மையாகவும் கூறிய பாங்கினை எண்ணி அப்பெருமக்களின் கோட்பாடுகளை வளியுறுத்திடும் கவிதைகளடங்கிய இந்நூலிற்கு ‘ஞாயிறும் திங்களும்’ எனப் பெயர் சூட்டியிருப்பது மிகவும் பொருத்தமானதும் போற்றத்தக்கதும் ஆகும்.”[39]

என அன்றைய முதலமைச்சர் கலைஞர் மு.கருணாநிதி கவிஞர் முடியரசனின் பாட்டுத்திறத்தைப் பாராட்டிக் குறிப்பிட்டுள்ளார்.

முடியரசன் பாடிய கவிதை நூல்களைத் தொடர்ந்து பூங்கொடி, வீரகாவியம், ஊன்று கோல் ஆகிய காப்பியங்கள், இளம்பெருவழுதி என்னும் நாடகக் காப்பியம் ஆகியவற்றின் கதைச் சுருக்கம் மட்டும் அறிமுக நிலையில் சுட்டப்பெறுகிறது.

**பூங்கொடி:**

மணிமேகலைக் காப்பியத்தை அடியொற்றி முடியரசன் பூங்கொடிக் காப்பியத்தைப் படைத்துள்ளார் விழாவயர் காதை முதலாக விடுதலைக் காதை ஈறாக முப்பத்தோரு காதைகளையும் 5243 அகவலடிகளையும் கொண்டு இக்காப்பியம் விளங்குகிறது.

வடிவேலின் மகள் பூங்கொடி தன் தந்தை இறந்த கவலையை மறக்க அல்லியுடன் பூங்காவிற்குச் சென்றாள் அங்கிருந்து நூலகம் செல்லும் வழியில் கோமகன் என்பவன் அவனைப் பின் தொடர்ந்தான் அவனிடமிருந்து தப்பிக்கத் தாமரைக்கண்ணி, முத்தக்கூத்தன் கல்லறை வழியாக அனுப்பி வைத்தாள்.

பூங்கொடி கடல் நகரில் தாமரைக் கண்ணியிடம் தொல்காப்பியத்தையும் நாவலரிடம் திருக்குறளையும் கற்றுத் தேர்ந்தாள் நாவலூர் அமுதத்திடம் இரு இசைச் சுவடிகளைப் பெற்றாள். மீனவரிடம் அச்சுவடி குறித்த செய்திகளைத் தெரிந்து கொண்டாள். கூத்தனைக் கலப்புத திருமணம் செய்து கொண்ட எழிலியிடம் இலக்கணம் கற்றுக் கொண்டாள். கோமகனின் காதலைத் தவிர்க்கப் பூங்கொடி பெருநிலக் கிழாரைச் சார்ந்தான் அவர் அவளுக்கு நூல் நிலையம் ஒன்றை அமைத்துக் கொடுத்தார்.

இந்நிலையில் கோமகன் கொலை செய்யப்பட்டதால், கொலைப்பழி சுமத்தப்பட்ட பூங்கொடி சிறைப்பட்டு மீண்டாள்.

ஏலங்குழலி என்பாள் பெருநிலக் கிழாரின் மனைவி என்பதை அறிந்த அருண்மொழியும் பூங்கொடியும் மகிழ்ந்தனர். மயில்வாகனர் தான் ஆராய்ந்து எழுதிய யாழ்நூலைப் பூங்கொடிக்குப் பதிலாகத் தந்தார். பூங்கொடி சன்மார் கபிலர் உருதீன் ஆகிய நாடுகளுக்குச் சென்று, அம்மொழிகளைக் கற்று அவற்றின் மூலம் அங்கும் தமிழைப் பரவச் செய்தாள். மீண்டும் தமிழகம் வந்து தமிழ், பொருளியல், அறிவியல் முதலான துறைகளில் பல நூல்களும் படைத்தாள். சொற்போரும் அறப்போரும் நடத்திய பூங்கொடி மீண்டும் சிறைப்பட்டாள் அங்கு அவள் இவ்வுலகை விட்டு விடுதலையடைந்தாள்.

> “மணிமேகலையின் தொண்டுள்ளமும் துறவுள்ளமும் என் அடிமனத்தைத் தொட்டன. சமைய வாழ்வுக்காக இல்லற வாழ்வைத் துறந்திடும் பெண்ணொருத்தி வேண்டுமோயன ஏங்கினேன். ஏக்கம் செயற்படத் தொடங்க ஒருத்தியைப் படைத்து அவளைத் தலைவாயிலாக்கிக் காப்போம். எழுதினேன். என் காலத்தில் தமிழ்த்தொண்டாற்றிய பற்பல சான்றோரை மாற்றிருவில் உரலவ விட்டேன். தமிழுக்காக உயிரீகம் செய்த தொண்டர்களையும் சேர்த்துக் கொண்டேன். என் மகளுக்குச் சூட்ட எண்ணியிருந்த ‘பூங்கொ’ யென்ற பெயரை அவருக்குச் சூட்டினேன். உலகமெலாஞ் சுற்றிவரச் செய்தேன் திருமணம் செய்து வைக்காமலேயே தமிழ்த்தொண்டாற்ற வைத்தேன். தமிழுக்காகச் சிறைபுகவைத்தேன். இறுதியில் என் இனிய கற்பனை மகளை இறக்க வைத்தேன்!”[40.]

எனத் தன் வாழ்க்கை வரலாற்று நூலில் முடியரசன் பூங்கொடிக் காப்பியம் குறித்துப் பதிவு செய்துள்ளமை இங்குக் குறிக்கத்தக்கது.

### வீரகாவியம்:

மாத்யூ அர்னால்டு என்பார் கவிதை வடிவில் ஆங்கிலத்தில் எழுதிய பாரசிகக் கதையொன்றைத் தழுவி எழுதப்பெற்றதே இக்காப்பியமாகும். இந்நூலை வள்ளுவர் பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இந்நூல் தமிழக அரசின் பரிசு பெற்றுள்ளதென்பது குறிப்பிடத்தக்கது. காட்சிப்படலம், திருமணப்படலம், மகப்பெறு படலம், படையெழுச்சிப் படலம், போர்ப்படலம் ஆகிய ஐந்து படலங்களையும், நூற்றிப்பதினெட்டு இயல்களையும் நானூற்றி எழுபத்தாறு எண்சீர் விருத்தங்களையும் தன்னகத்தே கொண்டமைகிறது, இந்நூல்.

மூவகத்தின் படைத்தலைவன் மாவேழன். அவனைப் போரில் வெல்வது அரிதான செயலாகும். அவனை ஏளனப்படுத்தியதால் காற்றை விஞ்சும் பரியோடு அரசன் மதலைக்கோவை விட்டு வெளியே வந்தான். மரத்தடியில் குதிரையைக் கட்டிவிட்டு அயர்ந்து தூங்கினான். கண்விழித்தபோது குதிரையைக் காணவில்லை. காவலரும் ஏவலரும் இல்லாமல் தனிமையில் வீதிவழியே நடந்தான். வஞ்சகமாய் வயந்த நகரத்தரசன் வயத்தரசன் மாவேழனைத் தன்வயப்படுத்த எண்ணியபோது, அவன் மகள் வேல்விழி மீது காதலுற்றுத் திருமணம் செய்து கொண்டான். மாற்றான்மேல் போர் தொடுப்பதற்காகக் கருவுற்றிருந்த மனைவியிடம் மாவேழன் விடைபெற்றுச் சென்ற பின்னர் பாலகன் பிறந்தான்.

ஆண்மகன் பிறந்ததைக் கூறினால் அவனைப் போருக்கு அழைத்துச் செல்வான் எனக்கருதிய வேல்விழி கணவனுக்குப் பெண்மகவு பிறந்ததாகச் செய்தி அனுப்பினாள். வளர்ந்து வரும் முறுவலனை வீரத்தலைவனென இளைஞர் தேர்ந்து கோளரி என அழைத்தனர்.

தந்தை மாவேழனின் சிறப்பையும் தன்னைப் பெண் மகவு எனத் தந்தையிடம் பொய் கூறியுள்ளதையும் அன்னை வேல்விழியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான் முறுவலன். மூவகத்தை முறியடிக்கத் தாயின் மூலம் மாவேழனின் புரவிக்குப் பிறந்த புரவியைப் பெற்றுக் கொண்டான். போரில் கோளரி வெண்கோடனைத் தோற்கடித்தான். அவ்வெண்கோடனே மாவேழனை அழைத்து மூவகத்துக்குப் போருக்கு அனுப்பினான்.

கோளரி மதலைக்கோவின் பாசறையைச் சிதறடித்ததை அறிந்த மாவேழன் தன் மகனென அறியாமல் போருக்குச் சென்றான். தந்தையும் மகனும் போரிட்டனர். மாவேழன் யார் எனக்கேட்ட மகனிடம் உண்மையை மறைத்தான் வேழன். மாலையில் இன்று போரை முடிப்போம் எனக் கூறிய வேழனிடம் கோளரி இன்று போய் நாளை வா எனக் கூறினான். மூன்றாம் நாள் முழு வலிமையுடன் போர் செய்தனர். போரின் போது மகிழ்ச்சியுடன் பெருங்களிறன் என்பான் மாவேழா எனக் கூவினான். தந்தையின் பெயர் கேட்ட கோளரி மலைத்து நின்றான். அச்சமயத்தில் மாவேழன் கோளரியைக் கொன்றான். கொல்லப்பட்டவன் தன் மகன் என்ற உண்மையை அறிந்த மாவேழன் அலறி வீழ்ந்து இறந்தான். கணவனும் மகனும் மாண்டதால் வேல்விழியும் உயிர் துறந்தாள். 'காதல் வீரம் கையாற்றவலம் - முப்பெருஞ்சுவையும் இப்பெருங்காவியத்தில் முகிழ்த்து நிற்கும். காதலும் அவலமும் கரையென நிற்க வீரப் பேராறு வீறிட்டுப்பாயும். காவியம் எங்கும் கன்னல் தமிழே மேவிடும்' என்று இந்நூலின் மேலிட்டையினால் பதிப்பகத்தார் தந்துள்ள குறிப்பு முற்றிலும் பொருந்துவதாக அமைகிறது.

**ஊன்றுகோல்:**

பண்டிதமணி கதிரேசச் செட்டியாரின் வாழ்க்கை வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட இக்காப்பியம் ‘கதிரெழு காதை’ முதலாக ‘சிலைகாண்காதை’ ஈறாகப் பதினேழு காதைகளையுடையதாய் விளங்குகிறது. வ.சுப.மாணிக்கனாரின் சிறப்புப் பாயிரமுமம் தமிழண்ணலின் அணிந்துரையும் காப்பியத்திற்குச் சிறப்புச் சேர்க்கின்றன.

> “தமிழ்ச்சான்றோர் ஒருவரது வாழ்க்கை வரலாற்றைப் புனைவுக் கூறுகள் மிகுதியின்றி அவ்வாறே காப்பியமாகப் படைக்க முடியும் என்பதற்கு முடியரசனின் ‘ஊன்றுகோல்’ தக்க ஒரு சான்றாகத் திகழ்கின்றது”[41]

என்னும் கூற்றும் இங்குச் சுட்டத்தக்கது.

பண்டிதமணியின் பிறப்பு, இளம்பிள்ளை வாதம், பள்ளிப்படிப்பு, தமிழும் சமஸ்கிருதமும் கற்றமை, கொடைச்சிறப்பு, திருமணம், நகைச்சுவை உணர்வு, அரசஞ் சண்முகனார், சீர்காழி சம்பந்தன், குன்றக்குடி அடிகளார, விபுலானந்தர், கிண்ணுமடல் கந்தசாமி, ந.மு.வேங்கடசாமி நாட்டார், சோமசுந்தர பாரதியார் முதலானாரோடு கொண்ட நட்பு, சிதம்பரநாதர், கா.சு.பிள்ளை, வ.சுப.மாணிக்கம் ஆகியோருக்கு ஆசிரியராயிருந்தமை, பேராசிரியர் பணி, சொந்த ஊரில் அஞ்சலகம், கல்வி நிலையம், சாலை, பாலம், கொப்பனாப்பட்டியில் கல்லூரி நிறுவியமை எனப் பொதுப் பணி புரிந்தமை, பட்டங்கள், நோயுறல், இறப்பு, சிலையெடுத்தல் எனக் காப்பியக் கதை புனையப்பெற்றுள்ளது.

**இளம்பெருவழுதி:**

‘உண்டாலம்ம இவ்வுலகம்’ எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடலைப் பாடிய கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி குறித்து முடியரசன் 1948-ஆம் ஆண்டு போர்வாள் என்னும் தலைப்பில் சிறுகதை ஒன்றைப் படைத்துள்ளார். அதனை அடிப்படையாகக் கொண்டு 1985-ஆம் ஆண்டு இளம்பெருவழுதி என்னும் பெயரில் காப்பிய நாடகமாகப் படைத்துள்ளார்.

> “மதுரை-காமராஜர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் தமிழண்ணல் தம் முயற்சியால் அங்குள்ள தமிழியற்புலத்தில் ஓராண்டு ஒப்பந்த அடிப்படையில் என்னைப் பணியில் அமர்த்தினார். அப்பணியேற்றுக் காப்பிய நாடகமொன்று எழுதித் தந்தேன். கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி பற்றி நான் எழுதிய

புனைகதையைக் கருவாகக் கொண்டு எழுதப் பட்டது. அந்நூல் போர் மறுப்பை மையமாகக் கொண்டது: சற்று அரிய நடையில் அமைந்தது"[42]

என்று இந்நூலின் தோற்றம் குறித்து முடியரசன் தன் வரலாற்று நூலில் பதிவு செய்திருப்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

பழங்கோட்டை ஒன்றில் உள்ள ஓவியம், சிற்பம் ஆகியவற்றைப் பற்றி முதியவர் ஒருவர் இளைஞனுக்கு விளக்கிக் கூறுகிறார். அப்போது அங்கு இருந்த சிலை ஒன்றைக் காட்டி இளைஞன் வினவியதற்கு, இது கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியின் சிலை எனக் கூறி அவன் கடலுள் மாய்ந்த வரலாற்றைக் கூறத் தொடங்குகிறார்.

பாண்டியன் மகன் வழுதியும் வெல்போர்க்கடம்பன் என்ற படைத்தலைவன் தங்கை சுரும்பார் குழலியும் வெண்டலை நாகனார் என்ற அவைக்களப் புலவரிடம் கல்வி கற்றுப் பாடலியிற்றும் ஆற்றல் பெற்றனர். வழுதி கோட்புலி மறவனிடம் போர்க்கலைப்பயிற்சி பெற்றான்.

வழுதியும் சுரும்பார் குழலியும் காதல் கொண்டனர். வலந்தரு பாண்டியன் பிறந்த நாளன்று பன்னாட்டின் புடைசூழத் தன் அரசியுடன் பாவலர் முதலியோர்க்குப் பரிசில் நல்கினர். அவைக்களப்புலவர் வெண்டலை நாகனார் வழுதியின் பாடல் திறத்தைப் போற்றி 'இளம்பெருவழுதி' என்னும் விருது வழங்கினார்.

பிறந்தநாள் விழாவில் கலந்துகொண்ட சேரமன்னன் மலைக்கோன் மனத்தில் சுரும்பார் குழலியின் புலமையும் எழிலும் இடம்பெற்றன. அவ்வுணர்வுடன் நாடு திரும்பிய மலைக்கோன் பாண்டிய நாட்டுடன் போர் தொடுக்க எல்லையில் பாசறை அமைத்தான். இதனையறிந்த பாண்டியன் மலைக்கோன் மீது படையெடுக்கப் பணித்தான். படைத் தலைமையேற்க வழுதி விரும்பினாலும் அவையோரின் இசைவிற்றேப்பக் கடம்பனே படையெடுத்துச் சென்றான்.

போரில் கடம்பன் தோல்வியுற்றான். அமைச்சரும் புலவரும் ஆறுதல் கூறினர். மீண்டும் வழுதி தலைமையில் புறப்பட்ட படை வெற்றி கண்டு வஞ்சி நாட்டுப் படைத்தலைவன் விறல்வேளைச் சிறை செய்து பாண்டியன் முன் நிறுத்தியது. படையின் நடவடிக்கைகளைப் புரோகிதன் கணியன் நம்பி காட்டிக் கொடுத்ததை அறிந்த மன்னன் அவனை நாடு கடத்துகிறான். குழலியை வழுதிக்கு மணம் முடிக்கக் கடம்பனிடம் பாண்டியன் இசைவு பெறுகிறான்.

இந்நிலையில் கடாரத்து அரசன் சீயன், திறைகொடுக்க மறுத்துப் போருக்கெழுந்த செய்தி பாண்டியனுக்கு எட்டியது. சினம் கொண்ட பாண்டியன் வழுதி, கடம்பன் இருவரையும் கடாரத்தின் மீது படையடுக்கச் செய்தான். சீயனோடு போரிட்டு வென்று திரும்புகையில் கடலிடைப் பெரும்புயலெழுந்து தாக்கியதால் கலம் கவிழ்ந்ததால் இளம்பெருவழுதி கடலுள் மாய்ந்தான். இச்செய்தி பாண்டியனைக் கவலையில் வீழ்த்தியது. பாண்டிமா தேவியை நலிய வைத்தது. குழலியின் உயிரைக் கவர்ந்தது. தங்கையின் பிரிவால் கடம்பனையும் நோயில் வீழ்த்தியது.

பெருங்கவலையிலிருந்த பாண்டியனுக்கு நாகனார் நிலையாமையை எடுத்துக் கூறி ஆற்றுவித்துப் போரின் விளைவுகளையும், கொடுமைகளையும் விளக்கிக் கூறியதோடு போர் ஒழிந்த புத்துலகம் காணும் வழிகளையும் கூறினார். பாண்டியனும் இசைந்து அதற்குரிய நெறிகளைப் புலவரிடம் கேட்டறிந்து போரை ஒழிக்க முயன்றான்.

எஞ்சிய நூல்களான உரைநடையிலமைந்த சிறுகதை மற்றும் கட்டுரை நூல்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பெறாமையால் இங்கு இடம்பெறவில்லை.

## தொகுப்புரை:

பாவேந்தர் பாரதிதாசன் பரம்பரையில் தோன்றிய மூத்த கவிஞர் முடியரசன், தான் ஏற்றுக்கொண்ட கொள்கையில் இறுதிவரை கிஞ்சிற்றும் சமரசம் செய்து கொள்ளாத கவிஞர். தமிழ், தமிழர் நலன், சமுதாயச் சீர்திருத்தம் ஆகியவற்றை முன்னிறுத்திக் கவிதை பாடியுள்ள முடியரசனின் வாழ்க்கை வரலாறு, படைப்புகள், நாடகம் மற்றும் திரைப்படத்துறைத் தொடர்புகள், படைப்புகளுக்கு அவர் பெற்ற பரிசுகள், விருதுகள், பாராட்டுகள் ஆகியவை குறித்து ஆய்வில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

ஆய்வு மேற்கொண்டுள்ள முடியரசனின் கவிதைத் தொகுப்புகள், காப்பியங்கள், காப்பிய நாடகம் ஆகியவற்றின் சுருக்கம் மட்டும் அறிமுக நிலையில் சுட்டப்பெற்றுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. தமிழண்ணல், ‘பாடிப்பறந்த பறவை’, தினமணி, நாள்: 05.12.1998, ப.6
2. முடியரசன், பாடுங்குயில், ப.55
3. முடியரசன், பாட்டுப்பறவையின் வாழ்க்கைப் பயணம், ப.101
4. மேலது., ப.11
5. மேலது., பக்.11-12
6. மேலது., ப. 12
7. மேலது., ப. 13
8. மேலது., ப. 13
9. மேலது., ப. 14
10. மயிலை சிவமுத்து, முடியரசன் கவிதைகள் - முதல் தொகுதி, ப.6
11. முடியரசன், காவியப்பாவை – முன்னுரை, ப.4
12. மேலது., ப.8
13. முடியரசன், கவியரசன் முடியரசன் படைப்புகள்-2, ப.116
14. மேலது., ப. 117
15. மேலது., ப.118
16. மேலது., ப.127
17. மேலது., ப.128
18. பாரதியார், பாரதிபாடல்கள் (ஆய்வுப்பதிப்பு), ப.544

**19.** முடியரசன், பாட்டுப்பறவையின் வாழ்க்கைப் பயணம், ப. 185

**20.** மேலது., ப.13

**21.** முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - தொகுதி 3, ‘தமிழ் முழக்கம்’, ப.137

**22.** முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் தொகுதி4, நெஞ்சக்குமுறல், ப.5

**23.** மேலது., ப. 8

**24.** மேலது., ப. 10

**25.** மேலது., ப. 100

**26.** மேலது., ப. 106

**27.** மேலது., ப. 196

**28.** மேலது., ப. 199

**29.** மேலது., ப. 203

**30.** முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் தொகுதி -1, ப.197

**31.** மேலது., ப. 199

**32.** மேலது., ப. 198

**33.** முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் தொகுதி – 5, ப.7

**34.** மேலது., ப. 5-6

**35.** மேலது., ப. 114

**36.** பாரதிதாசன், பாரதிதாசன் பாடல்கள், ப.138

**37.** முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் தொகுதி-6, ப.3

**38.** மேலது., ப.106

**39.** முடியரசன், ஞாயிறும் திங்களும், கலைஞர் - அணிந்துரை, ப.3

**40.** முடியரசன், பாட்டுப்பறவையின் வாழ்க்கைப்பயணம், ப.152

**41.** இரா.மோகன், முடியரசன், ப.32

**42.** முடியரசன், பாட்டுப்பறவையின் வாழ்க்கைப்பயணம், பக்.155-156

# இயல் - 2

# முடியரசன் கவிதைகளில் உத்திகள்

## முன்னுரை

பாரதிதாசனின் பரம்பரையுள் மூத்த தலைமகனாக அடையாளப்படுத்தப் பெற்றவர் கவிஞர் முடியரசன். தமிழ், தமிழ் நலனுக்காகக் கவிதை, காப்பியம், நாடகக் காப்பியம், சிறுகதை, கட்டுரை எனப் பலவகை இலக்கியப் படைப்புகளைத் தந்துள்ளார். இவ்வாறு மக்களுக்காக, மக்களுக்குரிய வகையில் படைப்புகளை வெளிக்கொணர்ந்ததும் ஒரு வெளிப்பாட்டு நுணுக்கமே ஆகும். இலக்கியக் கூறுகளுள் உத்தி முக்கிய இடம் பெறுகிறது. படைப்பாளன் தன் கருத்தை வெளியிடப் பயன்படும் ஒவ்வோர் உத்தியும் அவனது தனித்தன்மையையும் ஆற்றலையும் வெளிப்படுத்துவதாக அமையும். கவிஞர்கள் தான் கூற விரும்பும் கருத்துகளைப் படிப்போர் மனத்தில் பதியவைப்பதற்காக, ஆர்வத்தைத் தூண்டும் வகையில் சில நுணுக்கங்களைப் பயன்படுத்துவதுண்டு. இதனை உத்தி என்றும் கூறுவதுண்டு. அந்த வகையில் முடியரசன், தன் படைப்பை வெற்றிபெறச் செய்யப் பயன்படுத்தியுள்ள உத்திகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

## உத்தி – விளக்கம்:

ஒரு கவிஞர் தன் கருத்தைச் செம்மையாக வெளியிடுவதற்குப் பயன்படுத்தும் நுணுக்கமே உத்தியாகும்.

> "உத்துதல், பொருந்துதல் என்ற வினை அடிப்படையில்,
> பாடுபொருளைக் கவிஞன் பொருத்தமுற வெளியிடும் பாங்கு
> அல்லது முறை உத்தி"[1]

என்னும் கருத்து உத்தியினைத் தெளிவாக விளக்கிச் செல்கிறது. மேலும்,

> "இலக்கியத்தில் உத்தி என்பது, கூறவிரும்பும் பொருளை
> நேரடியாகக் கூறாது, அதனை விளக்குதற்குப் பொருத்தமான
> அல்லது இணையான மற்றொரு பொருள் மூலம் பெறவைத்தல்
> எனக் கொள்ளலாம்"[2]

என்னுங் கருத்தும் இங்குச் சிந்திக்கத்தக்கதாகிறது.

இலக்கிய உத்திகளில் பொருட்கூறு மட்டுமல்லாது, ஏதேனும் ஒரு நோக்கமும் அமைந்திருக்கும். படைப்பாளன் ஏதேனும் ஒரு நோக்கம் குறித்து ஒரு சொல், ஒரு தொடர்

பொருண்மை, கருத்து, பொருள், உணர்வு, பாத்திரம், செயல், நிகழ்ச்சி, இடம், காலம், கனவு, கடிதம், வருணனை, விளக்கம், ஆடல், பாடல், காட்சி, நிறம் என ஏதாவது ஒன்றினைக் கையாளும் போது அதில் உத்தி காணப்படுகிறது."[3] இக்கூற்றின் வாயிலாக, உத்தி என்பது செய்தியினை வெளிப்படுத்தக் கையாளும் நுணுக்கக்கூறு என்பதோடு உத்தியின் நோக்கம் வெளியீடே என்பதையும் உத்தி, இலக்கியத்தில் பயன்படுத்தப்படவேண்டிய இன்றியமையாத கூறு என்பதோடு, மிகவும் பயன்பாடு உடையது என்றும் கூற முடிகிறது.

## உத்தியின் இன்றியமையாமையும் பயன்பாடும்:

கவிஞர் சமுதாயத்தின் நிலையை ஒருவனுக்குக் கூறவிரும்புகிற போது, எளிமையாகக் கூறிவிடாமல், ஒரு நுணுக்கத்தோடு கூற வேண்டும். அப்போதுதான் அவன், தன்னோடு வாழ்கின்ற மனிதனின் நிலையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்குகிறான். எனவே, படைப்பில் கவிஞன் தன் கருத்துக்களைத் கூறி மனிதனைச் சிந்திக்கத் தூண்டுவதற்கு உத்தி இன்றியமையாததாகத் தோன்றுகிறது. இலக்கியப்படைப்பின் சிறப்பிற்குக் காரணமாக அமையும் உத்தி, சில பயன்பாடுகளும் கொண்டது என்பதும் புலனாகிறது.

> "நாவலாசிரியர் எவ்வளவு மேதையாக இருந்தாலும் அவருடைய படைப்பில் நல்ல உத்தி நுணுக்கங்கள் இல்லையென்றால் நாவல் சிறக்காது"[4]

என்னும் கருத்து இங்கு நோக்கத்தக்கது. வெளியாகும் கருத்து இன்றியமையாத தென்றாலும் அது மற்றவரைச் சென்றடையும் வகையில் அழகுறச் சொல்லப்படுவதற்குப் பயன்படுவது உத்தியாகும். சங்க இலக்கியம், காப்பியம் முதலானவற்றை நோக்குகையில், அவ்விலக்கியங்களைப் படைத்த கவிஞர்கள் தம் படைப்புகள் சிறப்படைய வேண்டும் என்ற நோக்கத்தோடு சில உத்திகளையும் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது. அத்தகைய உத்திகளே பின்னர், தூது, பரணி, உலா, அந்தாதி போன்ற தனிவகை இலக்கியங்களாகத் தோற்றங்கண்டன.

> "உத்திகள் பலவகைப்படுகின்றன இவை அந்தாதி. வருக்கமாலை, அடி முதல் முடிவரை வருணித்தல், பதிகம், சதகம், உலா, தூது, ஆற்றுப்படை என்பன போன்ற இலக்கிய வகைகள் தோன்றுவதற்கும் அடிப்படைக் காரணமாய் அமைந்துள்ளன"[5]

என்ற கூற்றின் வாயிலாகச் சங்க இலக்கியம், காப்பியம் போன்றவற்றின் உத்தி, பிற்காலத்தில் சிற்றிலக்கியத் தோற்றத்திற்கு வழிவகுத்துள்ளது என்று கூறுவது பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

இலக்கியத்தின் இன்றியமையாத கூறுகளுள் ஒன்றாகவும், பயன்பாடு உடையதாகவும் அமைகின்ற உத்தி பல்வேறு வகைகளைக் கொண்டதாக அமைகின்றது.

**உத்தி வகைகள்:**

எல்லாவகை இலக்கியங்களுக்கும் பொதுவானவை என்றும், குறிப்பிட்ட இலக்கியங்களுக்கு மட்டும் உரியவை என்று அமையும் உத்திகள், பல்வகைப் பிரிவுகளில் அடங்குகின்றன. ஒலி உத்தி, சொல் உத்தி, பொருள் உத்தி, தொடர் உத்தி, கூற்று உத்தி, வெளியீட்டு உத்தி, அணி உத்தி, வடிவ உத்தி, அமைப்பு உத்தி, நடை உத்தி எனப் பல வகைகளாக உத்தி அமைகின்றன. இவ்வகையில் அமையும் முடியரசனின் கவிதை உத்திகள் இங்குக் குறிக்கத்தக்கவை.

**முடியரசனின் கவிதை உத்திகள்:**

படைப்பாசிரியர் முடியரசன் தம் கவிதைகளில் கருத்து வெளியீட்டிற்காகவும் காப்பியங்களைப் கதைப் போக்கிற்காகவும் பல்வேறு உத்திகளைக் கையாண்டுள்ளார். ஒலி உத்தி, சொல் உத்தி, பொருண்மைநிலை உத்தி, தொடரமைப்பு உத்தி, வெளியீட்டு உத்தி, அணிநிலை உத்தி, வடிவநிலை உத்தி முதலான பலவகை உத்திகள் முடியரசனின் படைப்புகளில் அமைந்துள்ளன.

**ஒலி உத்திகள்:**

இலக்கியத்தில் சொற்பொருளுக்கும், உணர்வு வெளியீட்டிற்கும் ஏற்பக் கவிஞர் ஒலியைப் பயன்படுத்தும்போது ஒலி நிலை உத்திகள் உருவாகின்றன. ஒலிக்குறிப்புச் சொற்களைப் பயன்படுத்தல் ஒரு வகை ஒலி உத்தியாகும். சான்றாக, “பொற்புடன் படைத்த அற்புதப் பொருளெலாம்”[6]

என்றும்,

“சொற்றனர் எனச்சில கற்றோர் செப்பினர்
நற்றரு மரபினர் கற்பறி யாரோ?”[7]

என்றும்,

“வந்தோடி முத்தம் தந்தானடி – தோழி

அந்தமிகுந்த என்றன் சிந்தை மகிழ்ந்தவீரன்"[8]

என்றும்,

"சோலையிலே பலநாள் மாலையிலே வருவான்"[9]

என்றும்,

"'அன்னம் தளர்ந்திட முன்னம் நடந்தவள்'

'கொண்டை முடித்திரு தண்டை ஒலித்தெழில்'

'சூதறி யாதவள் வாதறி யாதவள" [10]

என்றும் அமையும் கவிதைப் பகுதிகளைச் சுட்டலாம். மேலும்,

"கடல்சுமந்தாள் மலைசுமந்தாள் கான்சு மந்தாள்

கால்நடைகள் பல சுமந்தாள் மாந்தர் என்ற

உடல் சுமந்தாள் வயல் சுமந்தாள் நதிசு மந்தாள்

ஊர்சுமந்தாள் நகர் சுமந்தாள் செடிசு மந்தாள்"[11]

என்றும்,

"மண்ணுரிமை வேண்டுமெனில் பெண்ணுரிமை வேண்டுக நீர்"[12]

என்றும் அமையும் கவிதைப்பகுதிகளும் ஒலிக்குறிப்புச் சொற்களுக்குச் சான்றுகளாகும்.

"உடையார் அறிவுப் படையார் ஒருவர்"[13]

எனவும்,

"ஆற்றுக தொண்டே ஆற்றுக தொண்டே"[14]

எனவும்,

"கண்டின் சுவையைத் தொண்டிலே கண்டனர்"[15]

எனவும்,

"நற்பொருள் உணர்ந்த பொற்கொடி குறளின்"[16]

எனவும் அமையும் கவிதைப் பகுதிகளை ஒலிக்குறிப்புச் சொற்களுக்குச் சான்றுகளாகக் கொள்ளலாம். மேலும்,

"வளர்ச்சி நாடிக் கிளர்ச்சிகள் செய்தனர்"[17]

என்றும்,

"வல்லமை பயிற்றினள் நல்லவள் அதன்றலை"[18]

என்றும்,

"குற்றமில் மீனவன் நற்றமிழ்ச் சுவடியின்"[19]

என்றும்,

"முனைப்பாலும் நினைப்பாலும் பகைமை விஞ்சி"[20]

என்றும்,

"வழியின்மேல் விழிசெலுத்தி வரவு நோக்கி"[21]

என்றும் அமையும் பகுதிகளும் ஒலிக்குறிப்புச் சொற்களுக்குச் சான்றுகளாகும்.

"தென்பொதியத் தென்றலென மெல்லப் பேசி"[22]

எனவும்,

"கற்பன கற்பேன் காப்பன காப்பேன்"[23]

எனவும்,

"நறைகமழ் தொடையோய் முறைமுறை யாகக்
குறைவற நிறைவுறுந் திருவுளக் குறிப்பே"[24]

எனவும் அமையும் கவிதை வரிகளையும் ஒலிக்குறிப்புச் சொற்களுக்குச் சான்றுகளாகச் சுட்டலாம்.

**ஒலியிசை:**

மென்மையான உணர்வுகளை மெல்லொலியுடனும் வன்மையான உணர்வுகளை வல்லொலியுடனும் இணைத்து உருவாக்கப்படும் ஒலியிசை என்பதும் உத்தியாகக் கொள்ளத்தக்கதாகும். சான்றாகச் சிலவற்றைச் சுட்டமுடிகிறது.

“அழும்ஒலி போல அவலம் பாடி

இழுமெனும் ஒலியால் இயங்கியது ஆறே”[25]

என்னும் பாடிலடிகளும்,

“அஞ்சுதல் ஒழிந்தார் நெஞ்சினில் இன்பம்

விஞ்சுதல் உறுதியில் விளக்கமும் பெற்றேன்”[26]

என்னும் பாடலடிகளும் ஒலியிசை உத்தியின்பாற்படும்.

“வஞ்சகர் செயல்கள் வாழ்ந்ததும் இல்லை

வாய்மைகள் என்றும் மாய்ந்ததும் இல்லை”[27]

என்றும்,

“வறுமை எனும் பிணியே – கொடிதே

வறுமை எனும் பிணியே”[28]

என்று அமையும் கவிதைகளும் ஒலியிசை உத்திக்குச் சான்றுகளாகும்.

“அருளும் தவமும் ஆண்டவன் வரமும்

பொருளும் புகழும் பிறவும் பெறினும்

செருக்கும் தருக்கும் சேரின்

ஒறுக்கும் ஒறுக்கும் உண்மை அறமே”[29]

என்னும் பாடலடியும் இதற்குச் சான்றாக அமைகிறது.

இந்தியை எதிர்த்துக் களம் கண்ட தமிழரின் குரலாக முடியரசன் ஒலிக்கும்,

“நில்லடி நில்லடி இந்திப் பெண்ணே – உன்

நெஞ்சினில் என்ன துணிச்சலடி!

செல்லடி செல்லடி இந்திப் பெண்ணே - இதைச்

சிந்தையில் வைத்திரு சென்றபின்னே”[30]

என்ற கவிதை அடிகளும்,

“படை வரும் தடை வரும் அறிவோம் - அது

பாதியில் உடைபடும் தெரிவோம்'' [31]

என்று பாடும் இந்தி எதிர்ப்புப் போர்ப் பரணிப் பாடலடியும் ஒலியிசை உத்திக்குச் சான்றுகளாக அமைகின்றன.

‘‘அரிவை யிகழ்ந்தனை! அறிவை யிகழ்ந்தனை!

தெரிவை விரைவினில் தெரிவை திறமெலாம்''[32]

என்னும் கவிதை வரிகளும்,

‘‘கொண்டொழுகும் பண்பாட்டில் இனிமை யுண்டு

கொழித்து வரும் நன்பாட்டில் எளிமை யுண்டு

தண்டமிழில் நீங்காத நெஞ்சம் உண்டு

தருபொருளை வாங்காத கையும் உண்டு''[33]

என்னும் பாடல்களும் ஒலியிசை உத்தியாக அமைகின்றன.

## சொல்நிலை உத்திகள்:

சொல்லாட்சி, சொற்பயிற்சி, சொற்றிறன் ஆகியவற்றின் அடிப்படையில் அமைவது சொல்நிலை உத்தியாகக் கருதப்படுகிறது. அடைச்சொற்கள், தொன்மைச்சொல், பல்பொருள் உடைய ஒரு சொல் ஆகியன சொல்நிலை உத்திகளாக அமைகின்றன.

## அடைச்சொற்கள்:

மனிதர் அல்லது ஒரு பொருளின் குறிப்பிட்ட குணப்பண்பு நிலையைச் சுட்டும் பெயரடையாக இது அமைகின்றது.[34] குழந்தையின் பாதத்தைப் பற்றிக் கூறப் புகுந்த கவிஞர் ‘‘தளிரடியால் எனை மிதித்தாய் தோற்று விட்டேன்''[35] எனப்பாடுகிறார். இதில் தளிரடி என்ற சொல்லில் ‘அடி' என்பதின் குணத்தைக் குறிக்கும் வகையில் ‘தளிர்' என்னும் சொல் அடைச்சொல்லாக அமைந்துள்ளது. தன் ஆவி கலந்த அழகியினைப் பற்றிக் கவிஞர் கூறுமிடத்தில் ‘குவளை அவள்கண் குளிர்தேன் பார்வை'[36] எனக் குறிப்பிட்டுச் செல்கிறார். அழகியின் கண்ணுக்குக் குவளை அடைச் சொல்லாகவும், அவளது பார்வைக்குக் குளிர்தேன் அடையாகவும் அமைந்திருப்பது சிறப்பாக உள்ளது. நாவன்மை மிக்க முன்னால் அமைச்சர் நெடுஞ்செழியனைக் குறிக்கும், ‘‘நாவலராம் எங்கள் தோழர்''[37] என்னுமடியில் ‘நாவலர்' என்னும் அடைச்சொல் அமைந்து சிறக்கிறது. பூங்கொடி காவியத்தில் வரும் எழிலி குறித்துக் கூறுமிடத்தில் ‘அறமனச்செல்வி'[38] எனக்

குறித்துக் சென்றுள்ளார். எழிலியின் மனப்பண்பைக் குறிப்பிடும் வகையில் அறம் அடைச் சொல்லாக அமைந்துள்ளது. அறிவுக்கூர்மையைக் குறித்திடுமாறு, 'நுண்மதி'[39] என்னும் சொல்லாட்சி பயின்று வந்துள்ளது. நுண்மை என்னும் பொருள் தரும் 'நுண்' என்பது அடைச்சொல்லாகும். மேலும் 'நன்மா மேனி'[40] என்றும், 'பொன்மணிமார்பம்'[41] என்றும் அமையும் சொற்கள், கவிஞர் பயன்படுத்தியுள்ள சொல் உத்திகளுள் ஒன்றான அடைச்சொற்களுக்குச் சான்றுபகர்வனவாகும்.

**தொன்மைச் சொல்:**

படைப்பாளன் தன் விருப்பத்தின் காரணமாகப் பழஞ்சொற்களைப் பயன்படுத்தும் கவிதை முறை, இலக்கிய நடையில் பின்பற்றப்படும் உத்தியாகக் கருதப்படுகின்றது. முடியரசன் 'புகன்றது'இ[42] 'புகன்றதும்'இ[43] 'புகலுதல்'இ[44] 'புகலம்மா'இ[45] 'புகன்றிடுவீர்'இ[46] 'புகலுங்கால்'இ[47] 'புகல்கின்றார்'இ[48] 'புகலுகின்றீர்'இ[9] 'புகலும்'இ[50] முதலான தொன்மைச் சொற்களைப் பல படைப்புகளில் பயன்படுத்தியிருப்பதையும் காண முடிகிறது. மேலும் 'இளிவரல்'[51] என்னும் சொல்லாட்சி இருவிடங்களில் பயின்று வந்துள்ளது.

**பல்பொருளுடைய ஒரு சொல்:**

ஒரு சொல், ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களில் ஓரிடத்தில் பயன்படுத்தப்படுவதும் உத்தி முறையாகிறது. 'குடந்தாங்கும் இடைஆட'[52] என்னும் பாடலடியில் பயின்று வரும் 'குடம்' என்னும் சொல் தண்ணீர்க்குடத்தையும் மார்பகத்தையும் குறிப்பதாக அமைகிறதெனலாம். 'விளம்பி'[53] என்னும் சொல் சொல்லி என்னும் பொருளையும், விளம்பி ஆண்டு என்னும் பொருளையும் தருவதாக அமைகிறது. 'விடுதலை'[54] என்னும் சொல் சிறையிலிருந்து பெறும் விடுதலையையும் உயிர் பிரிந்ததையும் குறிப்பதாயிற்று.

**பொருண்மைநிலை உத்தி:**

சொல் கொள்ளும் பொருண்மை காரணமாக அமையும் உத்தி இத்தன்மையதாகும். முரண், எதிர்மறை, பொருள் மயக்கம், சிலேடை, அங்கதம், குறிப்பு எனப் பொருண்மைநிலை உத்தி அமைகின்றது.

**முரண்:**

முரணான அல்லது எதிரான இரு கருத்துகளை அருகருகே கூறும் உத்திமுறை இதுவாகும்.[55] திரு.வி.க. பற்றிப் பாடிய கவிதையில், அன்பு மொழி பேசினாலும் கருத்து வேறுபாடு காணுகையில் இடித்துரைக்கவும் தயங்கமாட்டார். நெஞ்சில் வன்மை இல்லை

என்றாலும் உறுதி கொண்டவர். ஆசை அற்றவர் - ஆனாலும் துறவி அல்லர் எனத் தம்முள் எதிரெதிரான இரு கருத்துகளை இணைத்துப்பாடும்,

"இன்புமொழி பேசினுமே கருத்து வேறு

காணுங்கால் இடித்துரைக்கத் தவறார், நெஞ்சில்

வன்பில்லார் எனினும்நல்ல உறுதி கொண்டார்,

வரும் ஆசை அற்றார்தாம் துறவி அல்லர்"[56]

என்னும் கவிதையை முரண் உத்திக்குச் சான்றாகச் சுட்டலாம். மேலும் ஒரு சான்றாக

"உறவா பகையா கேட்டு வருவாய் - வரும்

உளமா இலையா பார்த்து வருவாய்

இரவா பகலா இந்தப் பொழுதே

இடரே மிகலால் கண்கள் ஆகுமே!

ஒலியா இருளா இந்த மனையில்

உருவா நிழலா என்றன் விழியில்

விழியா கணையா அந்த விழிகள்

வெயிலா நிழலா கொள்ள மொழிகள்!"[57]

என்னும் கவிதையையும் குறிப்பிட முடிகிறது. முடியரசன் தன் மகனைப் பிரிந்த துயரம் தீரப் பாடிய 'இரண்டும் உண்டு' என்னும் கவிதையில் இடம்பெறும்,

"இன்பம் ஒருகரை துன்பம் ஒருகரை

இரண்டும் கொண்ட ஆறடா:

வரவும் உண்டு செலவும் உண்டு

வாழ்க்கை என்ற ஏட்டிலே:

இரவும் பகலும் இரண்டும் ஒன்றாய்

இணைந்த தேஒரு நாளடா"[58]

என்னும் வரிகள் முரண் உத்திக்குச் சான்றுகளாகும்.

"உண்மையும் உண்டாம் பொய்ம்மையும் உண்டாம்

உன்புகழ் பாடும் பாடலிலே”[59]

என்றும்,

புகழ்ந்திடும் மொழியோ இகழ்ந்திடும் மொழியோ
பொதுப்பணி புரிவோன் ஒன்றெனவே
அகந்தனில் உடையான் புறந்தனில் உடையான்
அவனே தலைவன் மன்றினிலே”[60]

என்றும் அமையும் கவிதை வரிகளும் முரண் உத்தியின்பாற்படும்.

“இரவும் இல்லை பகலும் இல்லை
இணைவிழி தாமோ உறங்கவும் இல்லை
உறவும் இல்லை பகையும் இல்லை
உளமொரு கடலோ? கரையே இல்லை”[61]

எனவும்,

“முந்திக்கொண் டிங்கெழுந்து காலைப் போதில்

முனைப்போடு கடைவிரித்தார், மாலை எனும்

அந்திக்குள் திறந்தகடை மூடி விட்டார்

அவைகொள்வா ரில்லாத காரணத்தால்”[62]

எனவும் அமையும் பாடற்பகுதிகளும் முரண் உத்திக்குச் சான்றுகளாகும். மேலும் ஆங்காங்கே சில முரண் உத்தித் தொடர்களும் காணப்பெறுகின்றன. ‘அல்லும் பகலும்’இ[63] ‘அகத்தும் புறத்தும் அல்லும் பகலும்’இ[64] ‘முதலும் முடிவும்’இ[65] ‘கீழ்மேலாய் மேல்கீழாய்ச் சுழலும் நாடே’[66] முதலானவற்றைச் சான்றுகளாகச் சுட்டமுடிகிறது.

**எதிர்மறை:**

ஒன்றினைக் கூறுவதால் அதற்கு மாறான பொருள் தோன்றும் எதிர்மறை உத்தி முடியரசன் படைப்புகளில் பரவலாகக் காணப்படுகிறது. சட்டத்தை இயற்றவும், செயற்படுத்தவும் உரிய இடமாக அமைந்துள்ள சட்டமன்றம், இன்று நேர்மாறாக இயங்குகிறது என்னும் பொருண்மையளித்தலான எதிர்மறை உத்திக்கு.

“கொள்ளைகள் கொலைகள் செய்வோர்

பதுங்கிடும் கூடாரம்போல்

உள்ளதே சட்ட மன்றம்”[67]

என்னும் பகுதியைச் சுட்டலாம்

**பொருள் மயக்கம்:**

பொருள் கொள்வதில் தெளிவின்மை காரணமாக அமைவது பொருள் மயக்கமாகும். படைப்பாசிரியர் முடியரசன் படைப்புகளில் இவ்வுத்தி சிலவிடங்களில் காணப்பெறுகிறது. சான்றாகச் சில இடங்களைச் சுட்ட முடிகிறது.

“முகமதிய ரானவர்தாம் கைலி என்று

மூட்டிவைத்த ஆடைகளை உடுத்திக் கொள்வர்

முகமதிய ரானவரும் பயிலும் போது

முற்போக்கென் றதனைத்தான் உடுத்து கின்றார்”[68]

என்னும் கவிதையில் முகமதியர் என்னும் சொல் இஸ்லாமியச் சமூகத்தாரையும், முகம் மதியர் எனப் பிரித்துப் பொருள் கொள்ளும்போது மதிபோன்ற முகமுடைய மகளிரும் எனவும் பொருள் கொள்ள முடிகிறது. பிரித்துப் பொருள் கொள்ளாமல் நேரடியாப் பொருள் கொள்வதில் மயக்கம் தென்படுவதால் இது இவ்வுத்தியின்பாற்படும் எனக் கொள்ளலாம்.

"பாருலகில் இவ்வையம் தோன்றி விட்டால்

பாழ்படுமே இவ்வையம் என்ப தோரான்"[69]

என்னும் கவிதையிலும் இவ் ஐயம் என்றும் இவ்வையம் என்றும் பொருள் கொள்ளாவிடில் பொருள் மயக்கம் தோன்றுகிறது.

"உறிஞ்சிவரும் இரும்புகளை அதனிற் காயச்சிச்

சரிவுபடாப் பொதுவுடைமைச் சங்கம் என்ற

சம்மட்டி யாலடித்தால் உருவ மாகும்"[70]

என்னும் பகுதியில் உறிஞ்சி வரும் இரும்புகள் என்பதற்குப் பிறருழைப்பை உறிஞ்சும் இரும்பு போலும் மனமுடையார் என அடிக்குறிப்பில் காணப்படும் குறிப்பு இல்லாவிடில் பொருள் தெளிவு கிடைக்காது. எனவே இப்பகுதியை இவ்வுத்தியின்பாற்படும் என்று கூறலாம்.

'சாவில் வருமானம் ஒன்றே சரியென்பான்'[71]

என்னும் தொடரிலும் இறந்தால் மானம் வரும் என்னும் குறிப்பே பொருள் மயக்கத்தைத் தெளிவுபடுத்துகிறது. எனவே இத்தொடரையும் பொருள் மயக்க உத்தியாகக் கொள்வதில் தவறில்லை. உண்மைக் காதலை விரும்புவோர் உடம்பைக் காதலிக்க விரும்பார் எனப் பொருள்பட அமையும்,

"பொற்பாரும் மெய்க்காதல் விழைவ ரன்றி

புனைந்து வரும் மெய்காதல் கருத மாட்டார்"[72]

என்னும் பகுதியையும் இவ்வுத்திக்குச் சான்றாகச் சுட்டலாம். பெரியாரைப் பற்றிய கவிதையொன்றில் வெங்காயம் என்பதற்கு, விரும்பத்தக்க உடம்பு என்னும் அடிக்குறிப்பே பொருட் தெளிவை ஏற்படுத்துகிறது. இதனை உணர்த்திடும்,

"வெங்காயம் தளர்ந்தாலும் ஓய மாட்டேன்

வென்றிடுவேன் என்றெழுந்த பெரியார் போல"[73]

என்னும் பகுதியைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

**சிலேடை:**

ஓரொலியமைப்பும் இரு பொருளமைப்பும் உடையதாகச் சிலேடை உத்தி அமையும்.

“வஞ்சி எனநான் வாய்விட் டழைத்தால்

வஞ்சியேன் வஞ்சியேன் என்றுளந் துடிப்பாள்”[74.]

என்னும் கவிதையில் வரும் வஞ்சி என்னும் சொல், பெண் என்னும் பொருளையும் வஞ்சித்தல் என்னும் பொருளையும் தருவதால் இதனைச் சிலேடை உத்திக்குச் சான்றாகக் குறிப்பிடலாம்.

சட்டமன்றத்திலே உறுப்பினர்கள் சண்டையிட்டுக் கொள்ளும் நிலை குறித்து வரும்,

“சாதிப்போர் வேண்டுமலால் சாதிப்போர்

தேவையிலை சட்ட மன்றில்”[75]

என்ற கவிதையில் சாதிக்கக் கூடியவர் என்னும் பொருளையும், சாதிச் சண்டை என்னும் பொருளையும் தரக்கூடியதாகச் ‘சாதிப்போர்’ என்னும் சொல்லாட்சிச் சிலேடை உத்தியாக அமைந்து பொருள் சிறக்க உதவுகிறதெனலாம். மேலும் ‘நாணயத்தைக் கூட்டுதற்கு நாணயத்தை விற்றுவிட்டார்’[76] என்னும் தொடரும் இவ்வுத்திக்குச் சான்றாக அமைகிறது.

“எம்மொழி யாயினும் எம்மொழி என்றதை

நம்பும் இயல்பினர் நாங்கள்”[77]

எனவும்,

“ஆறுதலை வைத்தானைப் பரவும் அன்பர்

ஆறுதலைப் பெற்றவராய்ப் பேச லுற்றார்”[78]

எனவும் அமையும் கவிதைப் பகுதிகளையும் சான்றாகக் குறிப்பிட முடிகிறது.

**அங்கதம்:**

அறங்கூறும் இயல்பும் சீர்திருத்த நோக்கும் கொண்டு உத்தி நிலை பெறுகின்றது, அங்கதம்.[79] தமிழ்நாட்டுக் கச்சேரிகளில் தமிழ்மொழியை விடுத்துத் தெலுங்கு மொழிப்பாடல்கள் பாடப்பெற்றதைக் குறித்துப் பாடிய கவிதையில் வரும்,

"வேற்கருவி எடுத்துவிளை யாடுந் தோள்கள்

வீறிழந்து சீரிழந்து தமிழன் என்ற

பேர்க்குரிமை பூண்டின்னும் வாழு கின்றேன்

பிறப்படிமை யானவற்கேன் பட்டுக் குஞ்சம்"[80]

என்னும் பகுதி, அங்கத உத்திக்குச் சான்றாக அமைகிறது. பூங்கொடி காவியத்தில் கதைத் தலைவி பூங்கொடி தமிழின் பெருமை குறித்து உரையாற்றச் சென்றவிடத்தில் கல்லடி பட்டபோது அதனைத் தாங்கிக்கொண்டு நீண்டதோர் உரை நிகழ்த்துகின்றார். அப்போது இடம் பெற்றுள்ள,

"நன்றி கொன்றிடும் நல்லதோர் உயர்குணம்

இன்றுநம் மிடையே இறுகப் பிணைந்தது"[81]

என்னும் பகுதியையும் சான்றாகச் சுட்டலாம்.

**குறிப்பு உத்தி:**

குறிப்பாகப் பொருளுணர்ந்தும் சொற்களைப் படைத்துக் கவிதை பாடுவது இவ்வுத்தியாகும். பெண்ணின் மார்பகத்தைக் குறிப்பால் உணர்த்தும் வகையிலமையும்,

"-தனம்

விந்தை தரும் வகையில் - இரு

பந்தென விம் முகிறாள்!"[82]

என்னும் கவிதை, குறிப்பு உத்திக்கு உரிய சான்றாக அமைந்துள்ளதெனலாம்.

இளம்பெருவழுதி காவியத் தலைவன். வழுதி, மலைக்கோனைப் போரில் வெற்றி கண்டு வந்த பிறகே திருமணம் என்று கூறியபோது பாண்டியன் அவைக்களப் புலவர் வெண்டலை நாகனார், திருமணத்திருநாள் கண்டு வாழ்த்த விரும்பினேன். எனக்கு வாய்ப்பில்லை என்று கூறுவது குறிப்பு உத்தியாகும்.

"எவர்நிலை எதுவென எவர்தாம் அறிவர்?
திருமண மாலை இருவருஞ் சூடி
ஒருமன மாகும் பெருநாள் கண்டு
வாழ்த்த விழைந்தேன் வாய்ப்பெமக் கிலையே
தாழ்த்த லின்றித் தாங்குக போரே"[83]

என்னும் பகுதியைச் சான்றாகக் குறிக்கலாம்.

### தொடரமைப்பு உத்திகள்:

தொடரமைப்பு அடிப்படையில் விளி, கேள்வி, இணைத்தொடர், பழமொழி எனப் பலவகைகளாக உத்தி விரிகின்றது. படைப்பாசிரியர் முடியரசனின் படைப்புகளிலும் இத்தகைய உத்திகள் பரவலாக இடம்பெற்றுள்ளன.

### விளித்தொடர் :

முன்னிலை மொழிகளும், படர்க்கை மொழிகளுமாக விளித்தொடர்கள் வாழ்வில் அமைவது போன்று இலக்கியத்திலும் அமைகின்றன. இவற்றில் சிறிது மாறுபட்டு இலக்கியத்தைப் படைத்து வரும் ஆசிரியர் அக்கூற்றுப் போக்கிலிருந்து மாறி, இல்லாதவரையோ, இறந்தவரையோ, பிற பண்புப் பொருள்களையோ விளித்து மொழியும் நிலை காணப்படுகிறது. இதனை உத்தியாகக் குறிப்பர்.

"வாழ்வினைப் பாராய் நீ – தமிழர்
வாழ்வினைப் பாராய் நீ"[84]

என வரும் பகுதி, முன்னிலை விளித்தொடர் உத்திக்குச் சான்றாக அமைந்துள்ளது.

தாயகத்தை வாழ்த்திப் பாடும் கவிதையில் வரும்,

"உயிர் நீ, உடல் நீ, உளம் நீ வளம் நீ
பயிர் நீ பயன்நீ பயன்தரு பொருள் நீ
வெயில் நீ மழை நீ விழி நீ மணி நீ
பயில் தரு சுவைநீ பழகிய மொழிநீ"[85]

என்னும் பகுதியையும் விளித்தொடர் உத்திக்குச் சான்றாகச் சுட்டலாம். மேலும் 'வஞ்சீ'[86], 'விறலீ'இ[87] செல்வீ'[88] என அமைவனவும் விளித்தொடர்களே யாகும். 'தொழுதகு

பெரியீர்',[89] 'வண்டமிழ்ப் பெரியீர்'[90] என வரும் தொடர்களும் இவ்வுத்தியின்பாற்படும். முன்னிலை விளித்தொடர் உத்தியன்றி, இல்லாதவரையோ, இறந்தவரையோ, பண்புப் பொருள்களையோ விளிக்கும் வண்ணம் அமையும் விளித்தொடர் உத்தி முடியரசனின் படைப்புகளில் இடம் பெறவில்லை.

**கேள்வித் தொடர்:**

கேள்வித் தொடர்களும் உத்தியாக அமைகின்றன. முடியரசன் படைப்புகளில் இத்தகைய கேள்வித் தொடர் உத்திகளும் இடம்பெற்றுள்ளன. சான்றாகச் சில இடங்களைச் சுட்டலாம்.

"ஐம்பூதத் தொன்றான காற்றிலையேல்

அம்புவியில் இயக்கம் ஏது?

தெம்பேது மக்களுக்கு"[91]

என்னும் பகுதியும்,

"இருண்ட வாழ்வுதான் ஏகுவ தென்றோ?

பூனைகள் தொலையும் பொழுதுதான் என்றோ?"[92]

என்ற பகுதியும் கேள்வித் தொடர் உத்திகளாக அமைகின்றன. மேலும்

"அள்ளித் தந்திட நின்னை அழைத்தேன்

ஆகும் பருவம் எத்தனையோ"[93]

என்றும்,

"காவிய மேடையில் பாவலன் பாடிய

காரிகை இவள் தானோ?[94]

என்றும் கேள்வித்தொடர் உத்திகள் அமைந்துள்ளன.

"கண்ணெதற்குக் காட்சிகளைக் காண அன்றோ?

காணாமற் கண்மூட விழைதல் நன்றோ?"[95]

என்பதும் கேள்வித்தொடர் உத்தியே. பறம்புமலையில் நடைபெற்ற பாரிவிழாவில் பறம்புமலை குறித்தும் பாடிய கவிதையில் வரும்,

“பல்வளமும் நிறைந்திருந்து நலமே செய்த

பறம்புதனைக் கொடுங்குன்றும் என்ற தேனோ?

சொல்வளமும் பொருள் வளமும் அமைந்த பாடல்

சொலும்புலவர் பலர் வளைத்து நின்ற தாலோ?

மல்வளமும் வில் வளமும் கொண்ட வேந்தர்

மனம்புழுங்கிப் படை வளைத்து நின்ற தாலோ?”[96]

என்னும் கவிதைப் பகுதியும் கேள்வித்தொடர் உத்திக்குச் சான்றாக அமைவதைக் காணலாம்.

“நாயினுங் கீழென வாழ்வதுவோ – திரு

நாட்டின் பெரும்புகழ் சாய்வதுவோ?

ஈயென எங்கணுந் தோய்வதுவோ? – மனம்

ஈனத் தனித்தினிற் பாய்வதுவோ?”[97]

என்பதும்,

“கொடுத்துவைத்த பொருளிருந்தும் ஏனடா பஞ்சம்?

குறுக்குவழி நடப்பதனால் என்னடா மிஞ்சும்?”[98]

என்பதும் கேள்வித்தொடர் உத்திக்குச் சான்றுகளாகும்.

“ஞாலந்தான் இவரக்குரிமைச் சொத்தா என்ன?

நமக்குமதில் உரிமையிலை என்றா எண்ணம்?

கோலந்தான் கலையாதோ? இவர்கள் செய்யும்

கொட்டந்தான் அடங்காதோ?”[99]

என்னும் பகுதியும்,

“மீன் புனல் வாழ வெறுப்பதும் உண்டோ?

ஏன் உனக் கையம்”[100]

என்ற பகுதியும் கேள்வித்தொடர் உத்திக்குச் சான்றுகளாக அமைகின்றன.

**இணைத்தொடர்:**

இணைத்தொடர்களும் உத்தியாகக் கருதப்படுகின்றன. முடியரசனின் படைப்புகளில் இவ்வுத்தி மிகவும் அருகியே காணப்படுகிறது.

''மலையிடைப் பிறவா மணியே என்கோ

அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ''[101]

எனக் கண்ணகியைக் கோவலன் பாராட்டுவதில் பாடலடிகளிடையே இணைமை புலப்படுவதைப் போல, முடியரசனின் கவிதையில் வரும்,

“பிழியா நறவோ குறையா மதியோ

பிணையோ யாழில் பிறவா இசையோ

எழுதாக் கிழியோ பொளியாச் சிலையோ

எதுதான் இணையோ நிகர்தான் இலையோ”[102]

என்னும் பகுதியில் தொடர் இணைமை அமைவதைக் காணமுடிகின்றது.

“இழிவும் ஏசலும் ஆடவர்க் கில்லை

பழியும் நலிவும் பாவையர் தமக்கே”[103]

என வரும் பாடலடிகளிலும்,

“பெண்மையின் உருவே! கண்ணின் மணியே!

புண்ணிய மகளே! பூங்கொடி அன்னாய்!”[104]

என்றமையும் பாடற்பகுதியிலும் தொடர் இணைமை காணப்படுகின்றது.

“மெல்லியல் நவின்றதும் மெய்யுணர் வாகும்

சொல்லுமென் மொழியும் மெய்யுணர் வாகும்”[105]

என்னும் பகுதியும்

“வெய்மை கருமை விரவிய நரையினர்

வெண்மை ஒன்றே மேவிய நரையினர்”[106]

என்ற பகுதியும் தொடர் இணைமை கொண்டமைந்துள்ளன.

"அறிவுத் தெளிவின் ஆன்றோய் போலவும்

செறியும் ஆண்மைத் திண்ணியோய் போலவும்

அரும்பெறற் சால்பின் அமைந்தோய் போலவும்

நிறைதரும் அமைதியில் உறைவோய் போலவும்

முகத்தெழில் காட்டும்"[107]

என்னும் கவிதையில் பாடலடிகளிடையே இணைமை புலப்படுகிறது.

"பூப்பன யாவும் காயப்பன அல்ல

காய்ப்பன யாவும் கனிவன அல்ல"[108]

என்னும் பகுதி, எதிர்பொருள் இணைத் தொடர்க்குச் சான்றாக அமைகிறது.

**பழமொழி:**

தொடர் உத்திகளுள் பழமொழியும் ஒன்றாகும். வெளியீட்டு முறை, பொருட் தெளிவு, கருத்தழுத்தம் ஆகியவற்றைக் கொண்டமையும் பழமொழி சிறப்புப் பெறும்.

"உழுதொழிலில் கழிக்கின்றோன் கணக்குப் பார்த்தால்

உழக்கேனும் மிஞ்சாதென் றுலகஞ் சொல்லும்

பழமொழியைக் கேட்டதனிப் போதும் போதும்"[109]

என்னும் பகுதியில், 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கும் மிஞ்சாது' என்ற பழமொழியின் ஆட்சி புலப்படுகிறது. 'தை பிறக்க வழிபிறக்கும் என்பர் மேலோர்'[110] என்பதும் பழமொழி ஆட்சியின் பாற்படும். 'கிட்டாதாயின் வெட்டென மரத்தலை',[111]

"உறுகேழ் வரகினில் ஒழுகும் நெய்யெனில்

கேட்பவர் மதியும் கேடுறின் நம்புவர்"[112]

என்னும் பகுதிகளிலும் பழமொழியின் ஆட்சி மிளிருகிறது. 'குன்றில் இடு விளக்கின் ஒளிபோல',[113] 'கனியிருக்கக் காய் கவர்தல் மடமை யன்றோ?'[114] முதலான தொடர்களிலும் பழமொழியின் ஆட்சி தெற்றெனப் பளிச்சிடுகிறது.

**வெளியீட்டு உத்திகள்:**

கவிஞன் இலக்கியத்தை அளிக்கும் முறையில் வருணனை, கற்பனை, காட்சி போன்ற பல கூறுகள் உத்தியாகக் கருதத்தக்கன.

**வருணனை:**

படைப்பிலக்கியத்தில் இடம்பெறும் உத்திகளுள் வருணனையும் குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைகிறது.

> "வருணனை, என்பது குறுகியதாகவும் இயல்பான நிலையில் அமைவதாகவும் இருக்க வேண்டும் படித்து முடித்தபின் ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் தகவல்களை ஒரு மையப்புள்ளியில் தாமே வந்து குவிந்து படிப்போரின் மனக்கண்முன் ஒரு படத்தைத் தானாகவே வைத்து உருவாக்கி விட வேண்டும்"[115]

என்பர் ஆண்டன் செக்காவ். இக்கூற்று வருணனை எவ்வாறு அமைதல் வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது.

> "ஒரு சொல் அல்லது தொடர் மூலம் படிப்போரின் கண்முன் காட்சிப்படுத்திக் காட்டும் வகையில் விரிவான விளக்கமே வருணனையாகும். இது இட வருணனை, பொழுது வருணனை, செயல் வருணனை, உருவ வருணனை, பண்பு வருணனை எனப் பலவகைகளாகப் பயன்படுத்தப்படுகிறது"[116]

என்னும் கூற்று வருணனையையும் அதன் வகைகளையும் தெளிவுபடுத்துகிறது. இடம், பொழுது, செயல், உருவம், பண்பு என அமையும் வருணனை உத்தி ஆய்விற்கு எடுத்துக்கொண்ட முடியரசனின் படைப்புகளுள் பூங்கொடி, வீரகாவியம், ஊன்றுகோல் முதலான காப்பியங்களிலும், இளம்பெருவழுதி என்ற கவிதை நாடகத்திலும் பரவலாக இடம்பெற்றுள்ளது.

காவியத்தில் கதை நிகழும் இடத்தைச் சரியாகப் புரிந்து கொண்டாலன்றி கதை சுவை தராது, எனவே படைப்பாசிரியர் கதைக்களத்தைப்பற்றி வருணிக்கும்போது இந்த இடத்தில் இருக்கிறோம் என்ற உணர்வை வாசகன் பெறும் வகையில் அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகையில் பூங்கொடி காவியத்தில் வரும்,

> "ஓங்ககல் நெடுந்தெரு வேங்கைமா நகருள்
>
> நிலவொளி வீசும் நெடுநிலை மாடம்

பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்

மாளிகை புகுந்து மகிழ்வுடன் தங்கி

மீளி மீனவன் மீட்டநற் சுவடியின்

துணையோடு தோன்றித் தொழுதவண் இருந்தே"[117]

என்னும் இட வருணனை குறிப்பிடத்தக்கது. பூங்கொடியில் இடம்பெறும் பெருநிலக் கிழாரின் மாளிகை குறித்து வரும்,

"கண்கவர் வனப்பிற் கைவினை முற்றிய

விண்தவழ் முகப்பும் வியின்பெரு வாயிலும்

வெண்சுதைப் பாவை விளங்கிடும் அரணும்

ஒள்ளிய சாந்து வெள்ளிய நிலவொளி

அள்ளி இறைக்கும் அழகுறு மதிலும்

திரள்பெருந் தூணிற் செய்வினைப் போதிகை

மருள்படச் செய்யும் மனங்கவர் சித்திர

விதானப் பரப்பொடு விளங்குநல் மண்டபத்து"[118]

என்ற இடவருணனையும் குறிக்கத்தக்கது. இவ்வகையில் வீரகாவியத்தில் வரும்,

"விஞ்சுமெழிற் கட்டிலிவெண் துகில்வி ரித்து

விரையலகின் புகைநிறைத்துத் தோர ணங்கள்

துஞ்சும்அறை எங்குமெழில் விளங்கப் பண்ணித்

துய்யமணி ஒளிவிளக்குத் தொங்கக் கட்டி"[119]

என்னும் இட வருணனையும் சுட்டத்தக்கது. இவ்வாறே 'ஊன்றுகோல்' காவியத்தில் இடம்பெறும்,

"தெருவிடை மணல்பரப்பித்

தெள்ளிய நீர்தெளித்தும்

அரிசியிற் திரித்த மாவால்

அணிபெறக் கோல மிட்டும்

வருபவர் உள்ள மெல்லாம்

மகிழ்வினிற் குளிரும் வண்ணம்

அரிவையர் கோலஞ் செய்ய

அழகினாற் பொலிந்த தவ்வூர்!"[120]

என்னும் இடவருணனையும் மணங்கொளத்தக்கது.

காவியத்தில் அடுக்கடுகான நிகழ்ச்சிகள் அமைவதால் படிப்போருக்கு மயக்கத்தை ஏற்படுத்தாமலிருக்கப் பொழுது வருணனை அமைவது இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. வீரகாவியத்தில்,

"மாயிருநீர்க் கடற்பரப்பில் உருவு காட்டி

வருவதுபோற் செங்கதிரோன் கீழை வானில்

ஞாயிறென முகங்காட்டித் தோன்றி வந்தான்"[121]

என்று காலைப்பொழுதின் வருணனை இடம்பெறுகிறது. பூங்கொடியின் இடம்பெற்றுள்ள,

"எரிகதிர்ச் செல்வன் ஒளிமுகங் குன்றி

வருந்தி குடதிசை மறைந்தன னாகச்

சுருள்படு பழுதை விரிபட அரவென

மருள்படச் செய்யும் மாலைந் துற்றது"[122]

என்னும் மாலைப்பொழுதின் வருணனையும் இங்குச் சுட்டத்தக்கது.

பாத்திரங்களின் செயல்கள் படிப்போருக்குத் தாக்கத்தை ஏற்படுத்துவனவாக அமைவதுண்டு. படிப்போரின் நெஞ்சில் இடம்பெறும் வகையில் வருணித்துக் கூறும்போது தான் அது சிறப்புப்பெறும். வீரகாவியத்தில் இத்தகைய வருணனை இடம்பெற்றுள்ளது.

"தரியலர்க்குக் கூற்றாவோன் பரிமா வேறித்

தனிமையொடு கடிநகரின் நீங்கிச் சென்றான்"[123]

எனவரும் பகுதியில் செயல் வருணனை தெற்றெனப் பளிச்சிடுகிறது.

படிப்போரின் மனத்தில் பாத்திரம் எப்போதும் நிலைத்து நிற்பதால், அதன் உருவம் பற்றிய வருணனை தெளிவாக அமைதல் வேண்டும்.

"கதை வளர்ச்சியில் வரும் மாந்தர்களை அறிமுகப்படுத்தும் பொழுது அப்பாத்திரங்களைப் பற்றிய தொடக்க வருணனையை ஆசிரியர் அளிப்பர் என்பர் ஃபிலிப் பிராயிண்ட்."[124]

பூங்கொடியில் ஒன்றும், வீரகாவியத்தில் மூன்றும், இளம்பெருவழுதியில் ஒன்றும் என ஐந்து உருவ வருணனைகள் முடியரசன் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன. வீரகாவியத்தில் அமையும் வருணனை சான்றாகச் சுட்டத்தக்கது.

"அக்காலை மூவகத்தின் படைந டாத்தும்
ஆணழகன் பலகளிற்றின் வலிமை மிக்கான்
எக்காலும் போர்க்களமே இருப்பாக் கொண்டான்
ஏறனையான் மாவேழன் எனும்பேர் பூண்டான்"[125]

என உருவ வருணனை அமையும் போது பாத்திரம் வாசகரின் நெஞ்சில் பதிகிறது. ஒரு பாத்திரத்தின் தன்மையை அறிந்து கொள்ள அதன் பண்பு வருணனையே துணை செய்கிறது. இளம்பெருவழுதி நாடகத்தில் வரும் கடம்பன் என்ற பாத்திரத்தின் பண்பு வருணனையைச் சான்றாகச் சுட்டலாம்.

"நடையில் நல்லன் நாட்டின் அன்பன்
விழுப்புண் வேட்டு வெஞ்சமம் புக்கு
வழுத்தும் புகழ் பெறூஉம் வாய்வாட் சமரன்
ஏற்புடை வகையில் நாற்படை நடாத்தித்
தார்ப்படை தாங்கும் தலைமகன் ஆவன்
எழிலும் அறிவும் பழுநிய சுரும்பார்
குழலி உடன்பிறப் பாகிப் புரக்கும்
விழுமியன் அவன்றான் வெல்போர்க் கடம்பன்"[126]

என்னும் வருணனையில் பாத்திரத்தின் பண்பு வெளிப்படுகிறது. 'ஊன்றுகோல்' காவியத்தில் பண்டிதமணி கதிரேசன் என்ற பாத்திரத்தின் பண்பு குறித்தமையும்,

"வடித்தெடுத்த சொல்புகல், நீற ணிந்த

வடிவழகர், இருமொழியும் சொன்ன நூல்கள்

படித்தெடுத்த வாயழகற் சான்றோர் கூட்டம்

பழகவரும் நட்பழகர் . ”[127]

என்ற வருணனையும் இங்குச் சுட்டத்தக்கது.

ஆய்விற்கு எடுத்துக்கொண்ட முடியரசனின் படைப்புகளுள் மூன்று காவியங்களிலும், ஒரு கவிதை நாடகத்திலும் இத்தகைய வருணணைகள், ஆங்காங்கே சிறப்பாக இடம் பெற்றுள்ளன. விரிவான விளக்கமாக அமையும் வருணனையைப் போன்று, கற்பனையும் காவியத்தின் சிறப்பிற்குத் துணைபுரியகத் கூடிய உத்தியாகும்.

**கற்பனை:**

காவியச் சிறப்பிற்குக் காரணமாக அமையும் கற்பனை உத்தி குறிக்கத்தக்கது.

“……… …….. இராவனும்

ஓவியின், மாதர் ஒளிமுகந் தீட்ட

நீல வான நெடுந்திரை தன்னில்

கோல வட்டம் குறித்தனன், அதனை

ஞாலம் நிலவென நவின்று மகிழ்ந்தது”[128]

என அமையும் நிலவு குறித்த கற்பனை ஈண்டு சுட்டத்தக்கது.

**காட்சி**

படிப்போரின் மனத்தை இழுத்துப் பிடித்து நிறுத்தும் தன்மையதான இவ்வுத்தி, சில விடங்களில் இடம்பெற்றுள்ளது. ‘உணர்ச்சிக் கனிவான இடங்கள், சிக்கல் நிறைந்த கட்டங்கள் கதையின் உச்சநிலைப் பகுதிகள் முதலியனவும் ஆர்வம் ஊட்டக்கூடிய நிகழ்ச்சிகள், முன்னரே அறிந்து கொள்ள முடியாத செய்திகள் போன்றவையும் காட்சியாகச் சித்திரிக்கப்படும். இது கதைப் போக்கு, குணநல வெளிப்பாடு ஆகியவற்றிற்கு உதவும் வகையில் இடம் பெறுவதோடு படிப்போரின் மனத்தை இழுத்துப் பிடித்துச் செய்தியின் மீது குவியச் செய்யவும் உதவுகிறது’[129] என்னும் கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது. முடியரசனின் படைப்புகளில் உணர்ச்சிக் கனிவான இடங்களும், ஆர்வம் ஊட்டக்கூடிய நிகழ்ச்சிகளும் சிலவிடங்களில் சிறப்பாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. சான்றாகச் சிலவற்றைச் சுட்ட முடிகிறது. இளம்பெருவழுதி நாடகத்தில் நால்வகைப்படை குறித்துக் கூறமிடத்து அவற்றைக் கண்முன்னே

காட்சிப்படுத்துவது சிறப்பிற்குரியது. போர்க்களத்தில் இயங்கும் நாற்படைகளையும் உணர்ச்சிகளைக் காட்சிப் படுத்தியுள்ளார். சான்றாக,

"பண்ணோடு மணிபாடப் படர்வானிற் கொடியாடப்
பரியோடு வந்து பொருதேர்
நண்ணாரின் உயிராட நடைவீரர் உடலாட
நடுவாகச் சென்று வருமே"[130]

எனவரும் பகுதியைக் குறிப்பிடலாம்.

"செங்கதிரோன் கீழ்வானில் முகத்தைக் காட்டிக்
செவ்வொளியால் உலகுக்கு வண்ணம் பூசிப்
பொங்கி வரும் பேரெழிலைப் படைக்கும் போது
பொதியத்து மலைச்சாரல் கண்டு நின்றேன்:
அங்கிருக்கும் அழகெல்லாம் விழியா லுண்டேன்"[131]

என்னும் பகுதி, கிழக்கில் உதிக்கும் சூரியனைக் காட்சிப்படுத்துகிறது. இது ஆர்வம் ஊட்டக்கூடிய வகையில் நிகழ்ச்சியைக் காட்சிப்படுத்துவதாக அமைகிறது.

**அணிநிலை உத்திகள்:**

அழகு, விளக்கம், தெளிவு, நயம் முதலான பன்முகப் பயன்பாட்டில் அமையும் உவமை, உருவகம், சுவை, மேற்கோள் ஆட்சி போன்றவை அணிநிலை உத்திகளாகின்றன.

**உவமை:**

பயில்வோரின் நெஞ்சங்களை ஈர்ப்பதற்காகப் படைப்பாளி பல உத்திகளைப் பயன்படுத்துகின்றான். அவற்றுள் பழமையானதாகவும், கூறக்கருதிய பொருளை விளக்கப்பயன்படுகிற உத்தியாகவும் உவமை அமைகின்றது. இரு வேறுபட்ட பொருள்களை ஒப்புமைப்படுத்திக் காட்டுவது உவமையாகும். தொல்காப்பியம், தண்டியலங்காரம் போன்ற இலக்கண நூல்கள் உவமை குறித்துத் தரும் விளக்கம் குறிப்பிடத்தக்கது.

**உவமையின் இலக்கணம்:**

பொருள், நிகழ்ச்சி, கருத்து, தன்மை போன்றவற்றிற்கிடையே சொல் ஒப்புமை தோன்றச் செப்புவதே உவமையாகும். உவமையின் இலக்கணத்தை,

"பண்பும் தொழிலும் பயனுமென் றிவற்றின்

ஒன்றும் பலவும் பொருளோடு பொருள்புணர்த்து

ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை"[132]

எனத் தன்டியலங்காரம் குறிப்பிட்டுச் செல்கிறது. இதன் மூலம் உவமையின் அடிப்படை ஓர் ஒப்புமை என்பதை அறியமுடுகிறது.

**உவமையின் பயன்பாடு**

புரியாத கருத்தைச் சுவையோடு புரியவைப்பதற்கும், தெரிந்ததைப் பயிலவோருக்கு அழகுபடுத்திக் காட்டும் நோக்கிலும் உவமை பயன்படுகிறது.

"இதனாற்பயன் என்னை பயப்பதோ எனின் புலனல்லாதன புலனாதலும்

அலங்காரமாகிக் கேட்டாருக்கு இன்பம் பயத்தலும்"[133]

என இளம்பூரணர் தரும் விளக்கம் உவமையின் பயன்பாட்டைத் தெளிவுபடுத்துகிறது. பொருள்களை ஒப்புமைப்படுத்திக் காட்டும் உவமையைத் தொல்காப்பியர் பாகுபடுத்துவதும் இங்குக் குறிக்கத்தக்கது.

**உவமையின் பாகுபாடுகள்:**

புரியாத ஒன்றைப் புரியவைப்பதற்காகக் கையாளப்பெறும் கலை நுணுக்கத்திறனான உவமை, பல கூறுகளைக் கொண்டு விளங்குகிறது. உவமை என்பது எடுத்துக்கொண்ட பொருள், அதனை ஒத்தபொருள், இரண்டிற்கும் இடையே உள்ள பொதுத்தன்மை, இவ்விரண்டையும் இணைப்பதற்குப் பயன்படும் சொல் என்னும் உவம உருபு என நான்கு கூறுகளைக் கொண்டது. இதனைத் தொல்காப்பியர் வினை உவமம், பயன் உவமம், மெய் உவமம், உரு உவமம் என நான்காகப் பாகுபாடு செய்கிறார்.

"வினைபயன் மெய்உரு என்ற நான்கே

வகைபெற வந்த உவமத் தோற்றம்"[135]

என்னும் நூற்பா, உவமை பற்றிய தொல்காப்பியரின் பாகுபாட்டை விளக்குகின்றது. இவ்வாறமையும் உவமையின் இலக்கணம், பயன்பாடு, பாகுபாடு ஆகியவற்றின் அடிப்படையில் முடியரசன் படைப்புகளில் இடம் பெற்றுள்ள உவமைகள் நோக்கப் பெறுகின்றன.

**முடியரசன் படைப்புகளில் உவமைகள்**

முடியரசன் படைப்புகளில் பல உவமைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் வினையை மையமிட்டதாக அமையும் உவமைகள் குறிக்கத்தக்கன.

**வினை உவமைகள்:**

முடியரசன் படைப்புகளில் வினையை மையமிட்ட உவமைகள் பல இடம்பெற்றுள்ளன. தமிழாலும், செம்மையான அரசாட்சியாலும் உலகாண்ட தமிழர்கள், கண்மூடித்தனமான மூடப்பழக்கத்தால் தடுமாறிப் போயிருக்கும் நிலை கண்டு நெஞ்சம் நொந்து தமிழ்ச்சமுதாயத்தைச் சீர்திருத்த வந்த தந்தை பெரியாரைப்பற்றி “பொங்கி எழுந்தரியேற்றைப் போல வந்தார்.”[136] என்று உவமையாகக் கூறும்போது, தந்தை பெரியார் எந்தச் சூழ்நிலையில் எப்படி வந்தார் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. பொங்கியெழுந்த ஆண்சிங்கம் எவ்வாறு வருமோ அதுபோலப் பெரியார் வந்தார் என்று கூறும்போது அச்செயலை ஆசிரயிர் வெளிப்படையாக விளக்கத் தேவையில்லை. பெரியாரின் செயலை வாசகர்களால் உணர்ந்து கொள்ள முடியும். இது போன்று வினையை விளக்கிக்காட்ட

“விழிசிவப்பா தணல்சிவப்பா என்று நம்மை
வியப்புறுத்தும் உலைக்களத்தில் பற்றும் செந்தீ
குழிவயிற்றின் பசிக்கனல்போல் எரிய அங்கே
கொல்லனவன் உலைத்துருத்தி ஊதுங் காற்று”[135]
தொழில்புரிவோர் பெருமூச்சுப் போல வீச”[137]

என்ற உவமையையும் படைத்துள்ளார். கொல்லன் உலைக்களத்தில் எரியும் தீ, பசித்தவனின் வயிற்றுத் தீ போலவும், உலைத்துருத்தியில் ஊதும் காற்று, பசியோடு வேலை செய்யும் ஒருவனின் வெப்பப் பெருமூச்சாக வருவதைப் போன்றது என்றும் கூறுவது வாசகர் நெஞ்சில் பதிகிறது.

காரைக்குடி அழகப்பா கலைக்கல்லூரியில் நடைபெற்ற கவியரங்கில் ‘எழில்’ என்னும் தலைப்பில் பாடிய கவிதையில்,

கடன்பட்ட மாந்தரிடம் வட்டி கேட்கக்

கடைதோறும் புகுந்துவரும் கணக்க னைப்போல்

இடம்விட்ட மலர்தோறும் சென்று தேனை

இனிதுறிஞ்சி இசைபாடிச் செல்லும் தும்பி”[138]

என்ற உவமையும், புதுமைப்பெண் என்ற கவிதையில்,

“காய்ச்சும் இரும்பும் கவர்ந்திட்ட நீர்போல

ஆச்சுதடி என்மனம் அன்பர் அவரிடத்தே”[139]

என்னும் உவமையும், கண்ணீர் என்னும் கவிதையில்

“மத்திட்ட தயிர்போல நெஞ்சு டைந்து

வாழ்வின்றிக் கண்ணீரைச் சிந்து கின்றார்”[140]

என்ற உவமையும் வினை உவமைக்குச் சான்றுகளாகும். மேலும் “புள்ளிமயில் நடையாள்”.[141] என்னும் உவமையும்,

“அணுவெடுத்துத் துணையிட்டுக் கடல்கள் ஏழும், அதனுள்ளே புகவிட்ட செய்கைபோல, மணிநிகர்த்த குறட்பாவில் உலக மெல்லாம், மடுத்துவைத்த வள்ளுவன்றன் ஆற்றல் தன்னை”[142] என்னும் உவமையும், “கணமாக வந்தென்னை எறும்புபோலக் கடித்தார்கள்” [143] என்னும் உவமையும்,

“ஓலையிலே விழுந்த புனல்போல அங்கும் ஒட்டாமல் ஓடிடுவார்”[144]

என்ற உவமையும்,

“வலைக்கோட்டு மானினம்போற் சிக்கிக் கொண்ட வஞ்சியரும் தறிகெட்டு திரிதல் கண்டேன்”[145] என்னும் உவமையும், “தூங்குகிற தமிழ்ப் புலியை இடறிவீழ்ந்த துணைவிழிகள் இல்லாதான் நிலைமை போல “ஏங்குகிற வடவர்தமக் கொன்று சொல்வேன்”[146] என்ற உவமையும்,“கொல்லரவு நச்சுமிழ்தல் போல நீயும் கொடுமொழியால் இசைபாடி எனை வதைத்தாய்”[147] என்னும் உவமையும்,

"எய்யாமல் வளர்மதிபோல் வளரக்கண்டேன்"[148]

என்ற உவமையும் வினையை மையமிட்ட உவமைகளாகத் தோற்றங்கண்டுள்ளன.

முடியரசன் படைப்புகளில் இடம்பெறும் பயன் உவமைகளும் இங்குக் குறிப்பிடத் தக்கவையாகும்.

**பயன் உவமைகள்:**

ஏதேனும் ஒரு பயனை மையமிட்டதாக அமையும் உவமைகள் முடியரசனின் படைப்புகளில் பரவலாக இடம்பெற்றுள்ளன. பூங்கொடி காவியத்தில் பொதுப்பணி ஆற்றுவோர் தாய்மைப் பண்போடு இருத்தல் வேண்டும் என்பதைக் கூறக்கருதிய கவிஞர்,

"சேய்நலங் கருதியதாய் மருந் துணல்போல்
உலகம் நலம்பெற உறுதுயர் வரினும்
விலகா ததனை விழைந்திடல் வேண்டும்"[149]

என்று உவமை கூறும்போது உடல் நலங்குன்றிய குழந்தைக்காகத் தாய் மருந்து உண்பதைப் போலப் பொதுப்பணியை உலகத்திற்காக எதுவந்தாலும் கலங்காது செய்ய வேண்டுமென்பதை விளக்க, இப்பயன்பாட்டு உவமையைப் பயன்படுத்திப் படிப்போரைச் சிந்தித்துச் சுவைக்கச் செய்கிறார் இவை போன்ற பயன் உவமைகளை,

"உருக்குலைய உழைத்துழைத்துச் செல்வம் இல்லா
    உழைப்பாளர் வாழ்வினைப்போல் வறண்டு தோன்றும்
பெருக்கில்லாக் காட்டாறு"[150]

எனவும்,

"மழைத்துளியால் வளர்பயிர்போல் நும்மு ழைப்பால்
வாழ்கதமிழ் ஆட்சிபெற்று வாழ்க"[151] எனவும்,

"துணைவனங்குத் தோன்றியதும் புதையல் கண்ட
மிடிபிடித்தோன் உள்ளம்போல் துள்ளித் தாவும்"[152] எனவும்,

"கண்ணிருந்தும் குருடாகிக் கண்ணீர் சிந்திக் கயிறில்லாப் பம்பரம்போல் பாழாய் நின்றாள்[153] எனவும், "வீடுதோறும் நெல்விளையும் கழனிகள் போல் விளைந்து நிற்க

நெருக்கடியை ஆக்கி விட்டான்"[154] எனவும், 'விளைந்தெழு பயிர்போல் விம்மிதம் கொண்டனர்"[155] எனவும், "மழைத்துளி கண்ட வான்பயிர் போல முளைத்ததோர் உணர்ச்சி"[156] எனவும், 'மடைதிறந்த வெள்ளமென இன்பம் பாய'[157] எனவும் அமையும் உவமைகள் பயனை மையமிட்டதாகத் தோற்றமளிக்கின்றன.

**மெய் உவமைகள்:**

படைப்புகளில் இடம்பெறும் உவமைகளுள் வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு அமையும் உவமைகள் மெய் உவமைகளாகக் கருதப்படுகின்றன. இவை ஏதேனும் ஒரு வடிவத்தை அல்லது உறுப்பினை மையமிட்டும் அமைவதுண்டு. படைப்பாசிரியன் ஒரு பொருளின் வடிவத்தைத் தம் படைப்பில் சாதாரணமாக விளக்கிச் செல்வது வாசகருக்கு மகிழ்வூட்டுவதாக அமையாது. ஆனால், வாசகர் முன் ஒரு காட்சியை அமைத்து விளக்கிக் காட்டும்போது அப்பொருளின் தன்மை புரிவதோடு படைப்பாசிரியர் திறனுக்கும், வாசகரின் மகிழ்சிக்கும், நடையின் சிறப்பிற்கும் சான்று பகர்வதாய் அமைகிறது. அவ்வகையில் சான்றாக அமைந்து விளங்குவது மெய் உவமையாகும். முடியரசன் தம் படைப்புகளில் பரவலாக இவ்வமையைப் பயன்படுத்தியுள்ளார்.

பிறை நிலவின் வடிவத்தை வெளிப்படுத்த எண்ணிய படைப்பாசிரியர் முடியரசன்,

"விண்ணிடத் தெறிந்த வெள்ளைப்
பூசணிக் கீற்றோ என்ன
எண்ணிடப் பிறங்கும் நல்ல
இளம்பிறை நிலவே!"[158]

என்ற உவமையைச் சுட்டிச் செல்கின்றார். இதனை நோக்கும்போது வெள்ளைப் பூசணிக்கீற்றின் வடிவத்தை அனைத்து மக்களும் அறிவர். எனவே அனைவரும் அறிந்த ஒன்றைக் கொண்டு பிறை நிலவின் வடிவத்தை அழகாகப் படம் பிடித்துக் காட்டிவிட்டார் என்று கூறலாம். இவை போன்று, 'வீழ்ந்த வெள்ளித் தட்டாமென்ன நிலவு தோன்றும்',[159] 'உடலால் சுமைபோல் வளர்ந்து விட்டாய்',[160] 'மாமயில் போலொரு மங்கையினாள்',[161] 'ஏறெனப் பொலிவுறும் இளைஞன் அழகன்',[162] 'ஊடல் கொண்ட ஒண்டொடி முகம் போல் வாடிக் கவிந்த மலர்களும்',[163] 'வேலெனும் விழியாள்',[164] உலைவாய்ப்பட்ட இரும்பென உருகி வளைந்து நெளிந்து வாழ்தல் வேண்டும்'[165], 'கடன்காரன் இரக்கமிலார் நடுவில் நின்று கலங்குதல் போல் அப்பரிமான் கலங்கக் கண்டார்'[166], 'தூமலரின் பஞ்சணைவீழ்

கொடிபோல் ஆனாள்’[167] ஆகிய உவமைகளும் வடிவத்தை மையமிட்டனவாகப் படைக்கப்பட்டுள்ளன.

**உரு உவமைகள்**

ஏதேனும் ஒரு நிறத்தை மையமிட்டதாக அமையும் உவமைகளை உரு உவமைகள் என்று கூறலாம். எனவே, நிறத்தை இயல்பாகக் கூறாது அவற்றிற்கு அடைமொழி கொடுக்கும் போதுதான் அந்த நிறமே சிறப்புத்தன்மை பெறுகிறது. அவற்றோடு அந்நிறத்தின் தன்மையையும் வாசகரால் முழுமையாக அறியமுடிகிறது. யானையின் நிறத்தை விளக்க வந்த ஆசிரியர் ‘கருமுகில் வந் தமர்ந்ததுபோற் கிடந்த யானை’[168] என்று கூறுகிறார். இவ்வுமை மூலம் யானையின் நிறத்தைத் தெளிவாக விளக்கிவிட்டார். இருப்பினும் யானை கருப்பாக இருந்தது என்று கூறியிருந்தால் அந்தக் கருப்பு நிறத்தின் தன்மையை வாசகர்கள் அனுபவத்திருக்க முடியாது. எனவே வாசகர்கள் யானையின் நிறத்தைக் கூட வாசித்துப் படிக்க வேண்டும் என்பதற்காகக் கருமுகில் போன்று கருப்பாயிருந்தது என்று கூறுகிறார். இவைபோன்று ‘தளிர்போலும் குழவி’,[169] ‘மண்டு வெள்ளிக்காசுகள் போல் வான்வெள்ளிக் கூட்டங்கள்’,[170] ‘புகைபடிந்த ஓவியம்போல’,[171] ‘செங்கையில் இலங்குமலர்த் தாமரையை நோக்கு வான்போல்’[172] ஆகிய உரு உவமைகளும் இடம்பெற்றுள்ளன.

**உருவகம்**

உவமானம், உவமேயம் ஆகிய இரண்டையும் வேறுபடுத்திக் கூறாமல் உவமானத்தின் தன்மையை உவமேயத்தில் ஏற்றிக் கூறுவது உருவகமாகும். வடமொழி மரபில் உருவகம் தனி அணியாகத் தொன்று தொட்டுக் கருதப்படுகிறது. தொல்காப்பியர், ‘பொருளே உவமம் செய்தனர்’[173] என்னும் நூற்பா மூலம் உருவகத்தை உவமையின் மாற்று வடிவமாகக் கூறியுள்ளார். ஆய்விற்கு எடுத்துக் கொண்ட முடியரசன் படைப்புகளில் சில உருவகங்கள் ஆங்காங்கே தென்படுகின்றன.

பூங்கொடி காவியத்தில் பூங்கொடியின் அழகைப் பற்றி வருணிக்கிறார் ஆசிரியர் அப்போது, ‘பிறையெனும் நெற்றியிற் புருவம் வில்லினை நிகர்க்கும்’[174]என்று புருவத்தை வில்லாக உருவகப்படுத்தும் ஆசிரியரின் திறம் போற்றுதற்குரியது. ‘முகத்தாமரை’,[175] ‘கஞ்சமலர்’[176], ‘விழிமலர்’,[177] ‘நிலாமுகம்’[178], ‘முகமலர்’[179] முதலான உருவகங்களும்

பயின்று வந்துள்ளன. ‘விழிமலர்’ என்னும் உருவகம் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

**சுவை**

எந்தவகை இலக்கியமெனினும் சுவை வெளிப்பாடு, குறிப்பிடத்தக்க ஒன்றாகக் கருதப்படுகிறது.

“நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப”[180]

என்னும் தொல்காப்பிய நூற்பா, சுவையின் வகைகளைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றது. எல்லாப் படைப்புகளிலும் சுவை இடம்பெறும். ஆனால் அதனை எங்கே, எப்போது வெளிப்படுத்துவது என்று சிந்தித்து அமைப்பது, ஆசிரியரின் திறமையைப் பொறுத்தது. ஆசிரியர் முடியரசன் தம் படைப்புகளில் சுவைகளைத் திறம்பட வெளிப்படுத்திச் செல்கிறார். சிவகங்கை வள்ளுவர் பேரவையில் பாடிய கவிதையின் தலைப்பு ‘சுவையோ சுவை’ என்பதாகும். இக்கவிதையில் எண்வகைச் சுவை குறித்துப் பாடியுள்ள திறம் போற்றதற்குரியது.

“தோற்றுசுவை எட்டென்றுஞ் சொன்னால் அவன்பெற்ற
ஆற்றலினைக் காணின் அடடா ஓ! என்று
மருட்கைச் சுவை தோன்றும்.
.... ...... ....
எத்திசையும் பேர்மணக்க ஏற்றமுடன் வீற்றிருந்தே
ஆண்ட தமிழ்வேந்தர் ஆட்சியையுங் காணுங்கால்
மீண்டும் பெருமிதமே மேலோங்கும்.....
..... ....... .....
வாளேந்தி வாழ்ந்தோர் வறுமைக் கிலக்காகித்
தாளேந்தி இவ்வண்ணம் தாழ்வதுவோ என்று

கவலை மிகவாகிக் கண்கணீர் சிந்த
அவலச் சுவை நம்மை ஆட்டிப் படைத்து விடும்.
காட்டிக் கொடுக்கும் கயமைக் குணமிந்த
நாட்டில் உலவிவரல் நமக்கெல்லாம் இளிவரலே:
…… …… …..
கொள்கைப் பிடிப்பின்றிக் கோணற் சிறுமதியால்
எள்ளுந் தொழிலால் இருப்போரைக் காணுங்கால்
தோன்றும் நகைச்சுவையே….
கேடு விளைக்கின்ற கீழோரைக் காணுங்கால்
பாடுகின்ற பாடலிலும் பாயும் பெருவெகுளி.
எங்கள்திரு நாட்டின் எதிர்காலம் என்னாமோ?
வெந்தே உரிமை விழலாகிப் போய்விடுமோ?
அந்தோ! எனமயங்க அச்சச் சுவைதோன்றும்
செக்கச் சிவந்து வரும் செங்கதிரைக் காணுவதால்
உள்ளங் களித்தே உவகைச் சுவை தோன்றும்”[181]

என்னும் கவிதையில் எண் சுவையும் தோன்றப் பாடியுள்ள திறம் சிறப்பாகக் குறிக்கத்தக்கது. மேலும் சிவகங்கை மன்னர் துரைசிங்கம் கல்லூரியில் போலிக்குடும்பம் என்ற தலைப்பில் பாடியுள்ள கவிதையில் மது குடிப்பதால் ஒரு குடும்பத்தில் ஏற்படும் அவல நிலையை,

“பாழுங் குடியாற் பழுதுபடும் அக்குடும்பம்
நாளும் இளிவரலால் நைந்துவிடும்: அவ்வில்லில்
வீரம் இருக்கும் வெகுளி உடனிருக்கும்
நேரஞ் சிறிதானால் நீள் அழுகை தானிருக்கும்
அச்சம் இருக்கும் அடுத்து நகையிருக்கும்
மெச்சும் உவகையதும் மேவிக் கலந்திருக்கும்”[182]

எனப் பாடியுள்ளமை இங்குக் குறிக்கத்தக்கது.

பண்டிதமணியின் வரலாற்றைக் கூறும் ஊன்றுகோல் காவியத்தில் பண்டிதமணி ஒரு கூட்டத்தில் உரையாடிக் கொண்டிருந்த போது பெண்கள் பகுதியில் சலசலப்புக் கேட்டது: அப்போது பண்டிதமணி கூறியதை நகைச்சுவையோடு,

"மண்டியவர் மனமகிழ மணியார் ஓர்நாள்

மாமுகில்போற் சொன்மழையைப் பொழியுங் காலை

பெண்டிர்சிலர் பேசியிடை யூறு செய்யப்

பேரவையிற் சிலரெழுந்து தடுத்துப் பார்த்தார்

கண்டஇவர் 'பெண்மணிகள் அவர்பே ராகும்

கலகலவென் றம்மணிகள் ஒலியெ ழுப்பிக்

கொண்டிருத்தல் இயல்பன்றோ எனவு ரைத்தார்

கையொலிகள் அடங்கியபின் அமைதி கண்டார்"[183]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். இந்தி எதிர்ப்புப் போரில் எரியூட்டிக்கொண்ட சின்னசாமி பற்றி,

"பிறப்போர்தாம் இறப்பதுவே இயற்கை என்ற

பேருண்மை உணரந்தொருவன் எரியை யூட்டி

வரப்போகும் இந்திக்கோர் செவ்வி ளக்காய்

மறக்கோலங் கொண்டுடலம் வெந்து நின்றான்

அறப்போரில் நிற்பவர்க்கோர் சின்னம் ஆனான்

ஆண்மையுளோர் வணங்குகிற சாமி ஆனான்"[184]

எனப் பெருமிதம் தோன்றப் பாடியுள்ளார்.

இந்தியாவின் மீது பாகிஸ்தான் தொடுத்த போரில் இந்தியா வெற்றிபெற்றதைக் குறித்துப் பாடிய,

"குண்டொன்று தலைவீழக் குருதி வெள்ளம்

கொட்டிடவும் வானத்தில் பகைவன் ஊர்தி

கண்டெங்குச் சுட்டெரித்து வீழ்த்தி விட்டுக்

கண்மலர முகமலர அதனைப் பார்த்துக்

கொண்டுயிரை விட்டானே எனது நாட்டுக்

கொற்றவனாம் ஆறுமுகம் அவனைப் போன்றோர்

மண்டமரில் திறங்காட்டப் பாகித் தான

மாவீரர் புறங்காட்ட வெற்றி கண்டோம்"[185]

என்னும் கவிதையில் வீரச்சுவை வெளிப்படுகிறது. இளம்பெருவழுதி நாடகத்தில் படைத் தலைவன் வெல்போர்க் கடம்பன் குறித்துப் பழி சுமத்திய போது விறல்வேள் இடைமறித்து,

"இடைமறித் தும்மிடை இயம்புதல் பொறுக்க

படையில் தலைவன் பகையெமக் கெனினும்

நல்லோன் அவன்றான் நாட்டுணர் வுடையோன்

பொல்லா மொழிகள் புகுத்தேல் அவன்பால்"[186]

எனக் கூறுவதில் வெகுளி வெளிப்படுகிறது. எனவே, முடியரசன் இத்தகைய சுவைகளை வெளிப்படுத்தும்போது பயில்வோரையும் அச்சுவையோடு கலந்துவிடும் நிலையை உருவாக்கியுள்ளார் என்றே கருத முடிகிறது.

**மேற்கோள் ஆட்சி**

தமிழில் தோன்றியுள்ள பண்டைய இலக்கியங்களின் பாடல்களையோ அல்லது கருத்துகளையோ தம் படைப்பில் மேற்கோள் காட்டிச் செல்லும் போக்கு முடியரசனிடம் காணப்படுகிறது. பேராசிரியர் தமிழண்ணலுக்கும் அடைக்கம்மை என்ற சிந்தாமணிக்கும் நடைபெற்ற திருமண வாழ்த்தில்,

"அனிச்சத்தின் மலர்மோப்பக் குழையும் என்பர்

அன்பன்முகம் உளம்திரிந்து நினைத்தால் வாடும்"[187]

என்று பாடியுள்ளார். இதில் எடுத்தாளப்பட்டிருக்கும் திருக்குறட்பகுதி பொருத்தமாக அமைந்துள்ளது. 'தமிழில் பாடு' என்னும் கவிதையில்,

"நன்மைகள் செய்ய முயன்றிடுவாய் - இன்றேல்

நலிவுகள் செய்திட முனையாதே

என்னும் மேலோர் அறவுரையை — நல்ல

எழிலொடு காதலை வீரமதை”[188]

என்று பாடிச்செல்வதில்,

“நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்

அல்லது செய்தல் ஓம்புமின்” (புறம்: 195:6-7)

என்னும் புறநானூற்றுப் பாடற்கருத்து மிளிருவதைக் காண முடிகிறது.

காரைக்குடி கம்பன் திருநாளில், ‘கம்பன் கண்டபடி — ஆடவர்’ என்னும் தலைப்பில் பாடிய கவிதையில் இராவணனிடம் கும்பகர்ணன் கூறுவதாகப் பாடிய,

“அஞ்சேன்: உன் பகைவர்தமை நண்ணேன்: நீதான்

பிழைசெய்தாய்: அண்ணனென இடித்து ரைத்தேன்:

செஞ்சோற்றுக் கடன் கழிப்பேன்: சேரார் தம்மை

சேர்ந்துளவு சொலமாட்டேன் வேந்தே! இன்றே

வெஞ்சேனை கொண்டெழுவேன் யானோர் வீரன்

வீணனலேன் என்றெழுந்தான்”[189]

என்னும் கவிதையில் காவிய ஆட்சி மிளிருகிறது. மேலும் ‘கவவுக் கைகள் ஒன்றுதலில் ஞெகிழாமல் அறுக தீதென்றுரை மொழியை எதிர்மறையால் மொழிந்து நின்றார’[190] என்னும் பகுதியில் சிலப்பதிகார மேற்கோள் இடம்பெறுகிறது.

பூங்கொடி காவியத்தில் தமிழிசையின் சிறப்புக்குறித்துப் பேசுமிடத்தில்,

“மாசில் வீணையும் மாலை மதியமும்

வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்

மூசு வண்டறை பொய்கையும் போன்றதே

என்றுளம் அன்பால் இளகிட மொழிந்தனள்”[191]

என்று பாடியிருப்பதில் பக்தி இலக்கியப் பகுதியான தேவார ஆட்சி இடம் பெறுகிறது. இவ்வாறு சங்க இலக்கியம், திருக்குறள், பக்தி இலக்கியம் பாரதி பாடல்கள் எனப் பல

இலக்கியப் பகுதிகளைத் தம் படைப்புகளில் பரவலாக மேற்கோளாகப் பயன்படுத்தியுள்ளார் முடியரசன்.

**வடிவ நிலை உத்திகள்**

பாடு பொருளின் ஆக்கத்திற்குரிய அருள்வேண்டல், பின்னோக்கு, மறைநிலை முதலான உத்திகள் வடிவ நிலை உத்திகளாகும்.

**அருள் வேண்டல்:**

எல்லா வகை இலக்கியத்திலும் இறை வாழ்த்துத் தொடக்க நிலையாக அமைதல் உண்டு. படைப்பாசிரியர் முடியரசன் பகுத்தறிவுச் சிந்தனையாளரென்பதால் தமிழ் வாழ்த்தைத் தொடக்கமாக வைத்துக் காவியப்பாவையின் அருளை வேண்டுகிறார். சான்றாகச் சில இடங்களைச் சுட்டலாம்.

“நீதருங் கலியால் நெகிழ்ந்ததென் நெஞ்சம்
நினையே நினைந்து நினைந்துளம் கெஞ்சும்
பாதருங் காவியப் பாவையே நீயே
பரிவுடன் கடைக்கண் பார்த்தருள் வாயே”[192]

எனவும்,

“பாமிகும் காவியப் பாவையே தாயே!
பணிந்தோம் கடைக்கண் பார்த்தருள் வாயே!”[193]

எனவும் அமையும் அருள் வேண்டல் இங்குக் குறிக்கத்தக்கது.

பூங்கொடி காவியத்தின் தொடக்கத்தில் தமிழ்த்தெய்வ வணக்கம் பாடி அருள் வேண்டுகிறார்,

“தென்பால் உகந்தாளும் தெய்வத் திருமகளே
என்பால் அரும்பி எழுமுணர்வை – அன்பால்
தொடுத்தே அணிதிகழச் சூட்டினேன் பாவாய்
அடிக்கே எனையாண் டருள்”[194]

என்னும் பகுதியைச் சான்றாகச் சுட்டலாம். வீரகாவியத்தின் தொடக்கத்திலும் அருள் வேண்டலாகத் தமிழ் வாழ்த்தே இடம் பெற்றுள்ளது. இதனை,

"பாவிலுறும் சொல்லிலெம் எழுத்தி லெலாம்

பாட்டுவெறி யூட்டியருள் அன்னாய் நன்றே"[195]

எனவரும் பகுதியில் அறியலாம்.

**பின்னோக்கு:**

கதையின் போக்கையோ பாத்திரத்தின் தன்மையையோ அதன் வாழ்க்கை வரலாற்றையோ தொடர்ச்சியாகக் கூறுவது என்பது கதையிலக்கியத்தின் போக்காக இருப்பினும், அவற்றில் சில மாற்றங்களைப் படைக்க எண்ணும்போது படைப்பாசிரியன் சில உத்திகளைக் கையாளுகின்றான். அவற்றுள் ஒன்றே பின்னோக்கு உத்தி என்று கூறலாம். முன்னிகழ்வைப் பின்னர் தேவைப்படுமிடத்தில் கூறுவதாக அமைவது பின்னோக்கு உத்தியாகும். இதன் இயல்பையும் பயன்பாட்டையும் 'நடந்த நிகழ்ச்சிகளை அவ்வப்போது கூறாது பிறகு ஒரு கட்டத்தில் பின்னோக்கு முறையில் காட்டப்படும் முறை பின்னோக்கு உத்தியாகும். தமிழ்க்காப்பியங்கள் முதல் இக்காலச் சிறுகதை, புதினம் வரை இவ்வுத்தி காணப்படுகிறது. இவ்வுத்தி படைப்பின் கட்டமைப்பிற்குப் பெரிதும் உதவுவதாக உள்ளது'[196] என்னும் கருத்துத் தெளிவுப்படுத்துகிறது. அவ்வகையில் முடியரசன் படைப்புகளுள் 'பூங்கொடி' காவியத்திலும், 'இளம்பெருவழுதி' கவிதை நாடகத்திலும் இவ்வுத்தி இடம் பெற்றுள்ளது. பூங்கொடி காவியத்தில் இடம்பெறும் அருள்மொழி என்ற பாத்திரத்தின் முந்தைய வரலாறு பின்னோக்கு உத்தி முறையில் சுட்டப்படுகிறது. சான்றாக,

"ஆருயிர்த் தோழி! அந்நாள் வடிவேற்

பேருடைச் செம்மலைப் பேணிஎன் காதற்

கொழுநர் என்று கொண்டபின் ஊரார்

இழிசொல் எத்துணை ஏசினர் அறியாய்?[197]

எனத் தொடங்கித் தன் முந்தைய வரலாறு முழுவதையும் தேன்மொழிக்கு அருள்மொழி கூறுவதைக் குறிப்பிடலாம்.

இளம்பெருவழுதி நாடகம் முழுமையும் பின்னோக்கு உத்திமுறையில் கூறுவதாக அமைகிறது. முதியவர் ஒருவர் இளம்பெருவழுதியின் சிலையைக் காட்டி அவன் கடலுள் மாய்ந்த வரலாறு சொல்வதாகக் கதை தொடங்குகிறது.

"இளைஞன் பெருமையன் இளம்பெருவழுதி

கடலுள் மாய்ந்தான் காளை யிவனே"[198]

எனச் சிலையைக் காட்டிக் கூறிப் பின்,

"பருவரல் தவிர்க பைந்தமிழ் வீரன்

பெருவர லாறு பேசுக பெரியீர்"[199]

என இளம்பெருவழுதி கதை முடிவதாகக் கூறுவதைச் சான்றாகச் சுட்டலாம்.

**மறைநிலை:**

நாடகத்தின் இன்றியமையாக் கூறாக அமையும் இவ்வத்தி, பிறகதைப் புனைவுகளிலும் இடம்பெற்றுள்ளது. வீரகாவியத்தில் மாவேழன் என்பான் தன் பெயர் மறைத்துப் போரிடுதல் மறைநிலை உத்தியின்பாற்படும். சான்றாக,

"முனைவேழன் எனப்படுவோன் நீயோ? இன்றேல்

முதுமையுறும் நின்பெயர்தான் யாதோ? வீணில்

புனைபேரால் ஏமாற்ற முனையேல்? உண்மை

புகலுதியேல் வீண்போரே நமக்குள் இல்லை

தினையேனும் பகையின்றி நண்ப னாவேன்

செப்புதி நீ யாவனென வணங்கிக் கேட்டான்"[200]

என்னும் பகுதியைக் குறிப்பிடலாம். இளம்பெருவழுதி நாடகத்தில் கடலுள் மாய்ந்த காரணம் கூறப்படுவது மறைநிலையாகும். அதே போன்று, கடலுள் மாய்ந்த காரணந் தான் என்? என்னும் வினாவுக்கு முதியோர் அளிக்கும் பதில் மறைநிலையாக அமைகிறதெனலாம்.

**தொகுப்புரை**

படைப்பிலக்கியத்தின் பல்வேறு கூறுகளுள் ஒன்றான உத்தி என்பது, படைப்பாளர் தான் எண்ணிய கருத்தை வெளிப்படுத்தப் பயன்படுத்தும் நுணுக்கம் என்று ஆய்வில் காட்டப்பட்டுள்ளது. உத்தியின் இயல்பு வெளியீடே என்பதைப் பெற முடிகிறது.

ஒலிக் குறிப்புச்சொல், ஒலியிசை முதலான ஒலி உத்திகள், அடைச்சொற்கள், தொன்மைச்சொல், பல்பொருளுடைய ஒரு சொல் முதலான சொல் நிலை உத்திகள், முரண், எதிர்மறை, பொருள் மயக்கம், சிலேடை, அங்கதம், குறிப்பு என அமையும்

பொருண்மை நிலை உத்திகள், விளித்தொடர், கேள்வித் தொடர், இணைத்தொடர், பழமொழி என அமையும் தொடரமைப்பு உத்திகள், வருணனை, கற்பனை, காட்சி முதலான வெளியீட்டு உத்திகள், உவமை, உருவகம், சுவை, மேற்கோள் ஆட்சி என அமையும் அணி நிலை உத்திகள், அருள் வேண்டல், பின்னோக்கு, மறைநிலை என அமையும் வடிவ நிலை உத்திகள் முதலானவை ஆய்வில் சான்றுகளுடன் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. முடியரசன் படைப்புகளில் அமையும் இவ்வுத்திகள் குறித்துத் திறனாய்வு செய்யப்பெற்றுள்ளது.

# சான்றெண் விளக்கம்

1. ச.வே.சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.38

2. இரா.தமிழரசி, தமிழ் இலக்கிய உத்திகள்- ஓர் அறிமுகம், Papers on Tamil Studies, ப. 44

3. ச.வே.சுப்பிரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், ப.6

4. மேலது., ப.67

5. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.146

6. முடியரசன், கவிரயசன் முடியரசன் படைப்புகள்-1, ப. 18

7. மேலது., ப. 158

8. முடியரசன், கவியரசன் முடியரசன் படைப்புகள் - 2, ப.48

9. மேலது., ப.48

10. மேலது, பக்.54-55

11. முடியரசன், கவியரசன் முடியரசன் படைப்புகள் - 4, ப.149

12. மேலது., ப.175

13. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-7, ப.63

14. மேலது., ப. 64

15. மேலது., ப. 66

16. மேலது., ப. 67

17. மேலது., ப. 114

18. மேலது., ப. 122

19. மேலது., ப. 123

20. மேலது., ப. 259

21. மேலது., ப. 295

22. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப. 87

23. மேலது., ப. 182

24. மேலது., ப.254

25. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப. 28

26. மேலது., ப. 66

27. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப 42

28. மேலது., ப.102

29. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -3, ப. 14

30. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப.31

31. மேலது., ப. 41

32. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -7, ப.173

33. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப.108

34. ச.வே.சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.43

35. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-1, ப.93

36. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-2, ப.53

37. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-3, ப.3

38. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-7, ப.109

39. மேலது., ப.262

40. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப.220

41. மேலது., ப.221

42. முடியரசன், கவியரசர், முடியரசன் படைப்புகள்-1, ப.147

43. மேலது., ப.167

44. மேலது., ப.209

45. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப.164

46. முடியரசன், கவியரசர், முடியரசன் படைப்புகள் -3, ப.68

47. மேலது., ப. 117

48. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, ப.82

49. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -6, ப.48

50. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப. 192

51. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப. 179, படைப்புகள் -6, ப.35

52. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 57

53. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -3, ப.66

54. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 249

55. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 44

56. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-1 ப. 139

57. மேலது., ப.266

58. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 87

59. மேலது., ப. 108

60. மேலது,, ப. 109

61. மேலது., ப. 193

62. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 28

63. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 24

64. மேலது., ப. 41

65. மேலது., ப. 75

66. மேலது., ப. 259

67. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4 ப. 50

68. மேலது., ப.23

69. மேலது., ப.181

70. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள -5 ப.113

71. மேலது., ப.136

72. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 6, ப. 96

73. மேலது., ப. 132

74. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப.254

75. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.54

76. மேலது., 130

77. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-7, ப.114

78. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப. 140

79. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.47

80. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-5, ப.51

81. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.57

82. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.141

83. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - -8, ப. 291

84. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 38

85. மேலது., ப. 43.

86. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 141

87. மேலது., ப.146

88. மேலது., ப.164

89. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப.79

90. மேலது., ப.204

91. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப. 50

92. மேலது., ப.106

93. மேலது., ப. 262

94. மேலது., ப.263

95. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள -3, ப.23

96. மேலது., ப.171

97. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, ப.9

98. மேலது., ப.74

99. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப. 12

100. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் -7, ப. 88

101. சிலம்பு -2: 77-78

102. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் - 2 ப.-53

103. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் - 7 ப.-29

104. மேலது., ப.157

105. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் - 8 ப.-218

106. மேலது., ப.221

107. மேலது., ப.234

108. மேலது., ப.301

109. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் -5, ப.115

110. மேலது., ப.127

111. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் -7, ப.151

112. மேலது., ப.182

113. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள் -8, ப.57

114. மேலது., ப.120

115. மேற்கோள், மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம் - ப.107

116. ச.முருகேசன், எசு.எசு.தென்னரசு புதினங்கள்-ஆய்வு, மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பட்ட வெளியிடப் படாத எம்பில் பட்ட ஆய்வேடு, ப. 51

117. முடியரசன், கவியரசா் முடியரசன் படைப்புகள — 7, ப.135

118. மேலது., ப.154

119. மேலது., ப.275

120. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப.134

121. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -7, ப.324

122. மேலது., ப.188

123. மேலது., ப.263

124. மேற்கோள். கலா.கே. தாக்கர், கல்கி – முன்ஷி வரலாற்று நாவல்கள் ஓர் ஒப்பீடு, ப. 254

125. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -7, ப.260

126. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப.229

127. மேலது., ப.138

128. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -7, ப. 45

129. மா. இராமலிங்கம், நாவல்கள் இலக்கியம், பக். 124-126

130. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -8, ப.194

131. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, ப.110

132. தண்டியலங்காரம், பொருளணியியல், நூ:5

133. தொல்.பொருள். இளம். ப.395

134. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், ப. 92.

135. தொல். பொருள். நூ. 272

136. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.154

137. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப. 113

138. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப. 44

139. மேலது., ப. 76

140. மேலது., ப.172

141. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 141

142. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப. 94

143. மேலது., ப. 107

144. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.107

145. மேலது., ப.157

146. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப.19

147. மேலது., ப.163

148. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 6, ப.101

149. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 7, ப.82

150. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.54

151. மேலது., ப.142

152. மேலது., ப.170

153. மேலது., ப.171

154. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.144

155. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.54

156. மேலது., ப.246

157. மேலது., ப.270

158. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.73

159. மேலது., ப.47

160. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப.106

161. மேலது., ப.131

162. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.29

163. மேலது., ப.31

164. மேலது., ப.35

165. மேலது., ப.73

166. மேலது., ப.266

167. மேலது., ப.296

168. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.56

169. மேலது., ப.46

170. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப.108

171. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப.123

172. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 7, ப.305

173. தொல். பொருள. செய்யுளியல். நூ.9

174. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.27

175. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.44

176. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப.58

177. மேலது., ப.97

178. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.46

179. மேலது., ப.169

180. தொல். பொருள். நு. 247

181. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, பக்.34-36

182. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.152

183. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப.94

184. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப.27

185. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.119

186. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப.284

187. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.148

188. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப.8

189. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப.17

190. மேலது., பக்.151-152

191. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.134

192. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.201

193. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப.5

194. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.15

195. மேலது., ப.256

196. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப.70

197. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -7, பக்.22-23

198. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப.184

199. மேலது., ப. 186

200. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.435

## இயல் - 3

## முடியரசன் கவிதைகளில் தமிழியல் சிந்தனை

**முன்னுரை**

கவிதை, காப்பியம், கவியரங்கக் கவிதை, இசைப்பாடல், கடித இலக்கியம், கதை, கட்டுரை எனப் பல வடிவங்களில் தன் இலக்கியப் புலமையை வெளிப்படுத்தியவர் கவிஞர் முடியரசன். இருப்பினும் அவருடைய படைப்பாற்றலைக் கவிதை வடிவங்களிலேயே பெரிதும் வெளிப்படுத்தியுள்ளார். முடியரசன் கவிதைகளில் அவரது தமிழ் உணர்ச்சியும், தமிழ்ப்பற்றும் ததும்பி நிற்கும் பான்மையைக் காணமுடிகிறது. அறிஞர் அண்ணாவின் உரையைக் கேட்டதும், 'துரைராசு' என்றிருந்த தன் இயற்பெயரை 'முடியரசன்' என மாற்றிக் கொண்டவர். பாவேந்தர் பாரதிதாசனின் மேடைப்பேச்சைக் கேட்டபோது, நாடு, மொழி, இனம் காக்கப் பாடவேண்டும் என்று உறுதி பூண்டவர். தன் இறுதி மூச்சு வரை அக்கொள்கை நெறியில் நின்று வாழ்ந்த கவிஞர் முடியரசன் கவிதைகளில் வெளிப்படும் தமிழியற் சிந்தனைகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**தமிழ் வாழ்த்து:**

முடியரசன் கவிதைகள், காவியப்பாவை, கவியரங்கில் முடியரசன், பாடுங்குயில், நெஞ்சு பொறுக்கவில்லையே, மனிதனைத் தேடுகின்றேன். தமிழ் முழக்கம், நெஞ்சிற் பூத்தவை, ஞாயிறும் திங்களும், வள்ளுவர் கோட்டம், புதியதொரு விதி செய்வோம், தாய்மொழி காப்போம், மனிதரைக் கண்டு கொண்டேன் ஆகிய பதின்மூன்று கவிதைத் தொகுதிகளும் தமிழ்மண் பதிப்பகத்தால் ஆறு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுள் நெஞ்சிற் பூத்தவை, பாடுங்குயில், தமிழ்முழக்கம், புதியதொரு விதி செய்வோம், மனிதனைக் கண்டு கொண்டேன் ஆகிய ஐந்து தொகுதிகளிலும் தமிழ் வாழ்த்து இடம் பெற்றுள்ளது. இவற்றில் பீறிட்டுக் கிளம்பும் முடியரசனின் தமிழ் உணர்ச்சி, பயில்வோரையும் வயப்படுத்துவதாக அமைவதைக் காண முடிகிறது. சான்றாக,

"செந்தமிழே என்னுயிரே புலவர் நெஞ்சில்
சேர்ந்தாடும் எழில் மயிலே என்னுட்பொங்கி
உந்திவரும் உணர்வதனால் கூவிக்கூவி
உவகை தரும் பூங்குயிலே மொழிக் குலத்தில்
முந்திவரும் தெய்வமே என்னைச் சூழ்ந்து
மொய்த்துவரும் துன்பமெலாம் நீக்கி யின்பம்

தந்துவரும் ஆரணங்கே அன்பே நின்றன்

தாள்வணங்கி நிற்கின்றேன் அருள்வாய் அம்மா”[1]

என்னும் பாடலைச் சுட்டலாம். இக்கவிதை உந்திவரும் முடியரசனின் தமிழ் உணர்வை வெளிப்படுத்துவதாக அமைகிறது. தமிழ் முழக்கத்தில்,

“எழுத்தின் வகையெலாம் இயம்புவாய் போற்றி!

பழுத்த சொற்றிறம் பகர்வாய் போற்றி!

பொருள்கள் பற்பல அருள்வாய் போற்றி!

யாப்பெனும் அருங்கலன் இசைப்பாய் போற்றி!

அணிகள் எழிலுற அணிவாய் போற்றி!

போற்றி ஐந்திறம் புகலும் தாயே!”[2]

என்ற கவிதை, தமிழ்வாழ்த்தாக இடம் பெற்றுள்ளது.

“இடர்பல சூழ்ந்த போதும்

என்னுடல் தளர்ந்த போதும்

மிடியெனைத் தின்ற போதும்

விழியொளி குறைந்த போதும்

கடமையில் தவறேன் அம்மா:

கனிந்துனைப் பாடிப் பாடி

இடுபணி புரித லன்றி

இனியெனக் கென்ன வேலை?”[3]

என்னும் கவிதைவழி, எந்நிலையிலும் தமிழுக்குத் தொண்டு செய்து கிடப்பதே என் பணி என்று முடியரசன் குறிப்பிடுவதை அறியமுடிகிறது. ‘நெஞ்சு பொறுக்கவில்லையே’ என்னும் கவிதைத் தொகுதியில் தமிழ்த்தாய் வணக்கம் முதலில் இடம் பெற்றுள்ளதனைக் காண முடிகிறது.

“கல்லுக்குள் தீயை வைத்தாய்

கனலுக்குள் வெம்மை வைத்தாய்

வில்லுக்குள் வீரம் வைத்தாய்

வேலுக்குள் கூர்மை வைத்தாய்

செல்லுக்குள் இடியை வைத்தாய்

சிந்தைக்குள் பொங்கும் பாடற்

சொல்லுக்குள் அனைத்தும் வைப்பாய்

தொன்மைக்குள் தொன்மைத் தாயே”[4]

என்னும் பாடலின் மூலம் தமிழின் தொன்மை, தன்மை ஆகியவற்றைச் சுட்டி வணங்கும் பாங்கு புலனாகிறது. ‘தாய்மொழி காப்போம்’ என்ற கவிதைத் தொகுதியில் தமிழ் வணக்கம் அமைந்துள்ளது.

“முத்தமிழே உனை எப்பகை யாகினும்

முற்றிட முன் வருமேல்

எத்தடை மோதினும் அப்படை யாவையும்

எற்றிமு ருக்கிடுவேன்

எத்துயர் நேரினும் அத்தொழில் ஆற்றிட

எப்பொழு தும் தவறேன்

மத்தக யானையைச் செற்றிடும் ஏற்றரி

வல்லமை தந்தருள்வாய்”[5]

என்னும் கவிதையில் கவிஞர் முடியரசனின் தமிழ் காக்கும் போர்க்குணம் பளிச்சிடுவதைக் காண முடிகிறது.

‘காவியப்பாவை’ என்னும் தொகுதியில் ‘காவியப்பாவை’ என்ற தலைப்பிலேயே தமிழ்த்தாயை வாழ்த்தும் கவிதையொன்று இடம் பெற்றுள்ளது. கவியரங்கில் முடியரசன்

என்னும் தொகுதியில் ‘தமிழ்வாழ்வு’ என்னும் தலைப்பில் கவிதை ஒன்றும், மனிதனைத் தேடுகிறேன் என்னும் தொகுதியில், ‘நந்தா விளக்கே’ என்னும் தலைப்பில் தமிழ்த்தாயை வாழ்த்தும் கவிதை ஒன்றும் இடம்பெற்றுள்ளன.

“எங்கள் தமிழ் மொழியே! – உயிரே!
இங்குள்ள நாங்கள் இகழ்ந்த னாலே
இழிநிலை அடைந்தோம் உரிமையும் இழந்தோம்
பூமியில் மானிடர் தோன்றிய நாளே
பூத்தனை தாமரைப் பூவினைப் போலே
பாமிகும் காவியப் பாவையே தாயே!
பணிந்தோம் கடைக்கண் பார்த்தருள் வாயே
இயலிசை கூத்தென இயங்கிடு வாயே
எமதுயிர் உணர்வுகள் யாவையும் நீயே
மயலெமை நீங்கிட மதியருள் வாயே
மைந்தரைக் காத்தருள் செந்தமிழ்த் தாயே”[6]

என்னும் கவிதை மூலம் தமிழை உயிராகவும், உணர்வாகவும், கொண்டு இயங்கும் போக்குப் புலனாகிறது. முடியரசன் கவிதைகள் என்ற தொகுதியில் தமிழ் உலகம் என்ற பகுதியில், மொழியுணர்ச்சி, அவளும் நானும், துயில் கலைந்தது, தமிழ்க்காதலி, தமிழ்தான் என்பேர், துறைதோறும் தமிழே காண்பீர், உறுதி கொள்வீர் ஆகிய ஏழு தலைப்புகளில் கவிதைகள் அமைந்துள்ளன. தமிழ் மொழி உணர்ச்சிப் பொங்கிப் பிரவாகமெடுத்தோடுவதற்குச் சான்றாக,

“தமிழ்காக்கப் போர்செய்ய உணர்வு வேண்டும்
    தமிழ்கொன்று வாழ்கின்ற கயமை வேண்டாம்
தமிழ்காக்கப் போர்செய்யப் புலிகள் வேண்டும்
    தடுமாறி ஓடிவிடும் எலிகள் வேண்டாம்

தமிழ்காக்கப் போர்செய்ய சிங்கம் வேண்டும்

தாளமிடும் ஓலமிடும் நரிகள் வேண்டாம்

தமிழ்காக்கப் போர்செய்ய மானம் வேண்டும்

தாலமுத்து நடராசன் துணிவு வேண்டும்”7

என்னும் கவிதையைக் குறிப்பிடலாம்

முடியரசன் படைத்துள்ள காப்பியங்கள் பூங்கொடி, வீர காவியம், ஊன்றுகோல் என மூன்றாகும். அவற்றுள் பூங்கொடி என்னும் காப்பியம் மொழிவளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டு, இல்லறம் துறந்து, பொதுநலம் பேணித் தமிழுக்குத் தன் உயிரையே தரும் வல்லமை படைத்த பூங்கொடி என்பாரைக் காப்பியத் தலைவியாகக் கொண்டது. காப்பியம் முழுமையும் தமிழ் உணர்ச்சியும் தமிழ் வளர்ச்சியுமே விரவிக் கிடக்கின்றன. இதில் ‘தமிழ்த் தெய்வ வணக்கம்’ என்ற தலைப்பில் மூன்று பாடல்கள் அமைந்துள்ளன.

“தாயே உயிரே தமிழே நினைவணங்கும்

சேயேன் பெறற்கரிய செல்வமே – நீயே

தலைநின்றாய் இவ்வுலகில் தாள்பணிந்தேன் நீயிங்

கிலையென்றால் இன்பமெனக் கேது”8

என்ற பாடலில், ‘இருந்தமிழே உன்னால் இருந்தேன் யான்; நன்னிலை உனக்கெனில் எனக்கும் தானே’ என்னும் தமிழ்விடு துாதின் சாயல் தென்படுகிறது எனலாம். பாவேந்தர் பாரதிதாசனின் பரம்பரையைச் சார்ந்த முடியரசன் தமிழ் உணர்ச்சியோடு தமிழ் மொழிகாக்கப் பாடும் சிந்தனை கொண்டவர் என்பதை அவருடைய தமிழ் வாழ்த்துப் பாடல்களின் மூலம் அறியமுடிகிறது.

> “தமிழையும் தமிழனையும் உயர்த்துவதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்த பாவேந்தர் பரம்பரையின் தலைமகன் என்ற தகுதிக்கு மிகுதியும் உரியவர் தாமே என்பதைத் தம் எழுத்துகளால் எண்பித்தவர் முடியரசனார். முடியரசனார் முழுமையான தமிழ்ப்பற்றாளர்”[9]

என்னும் கூற்று பொருத்தமுடையதாகவே தோன்றுகிறது.

**பிறமொழி ஆதிக்க எதிர்ப்பு:**

நாடு, இன விடுதலைக்கும் மொழி உரிமைக்கும் உரத்தகுரல் எழுப்புவதுதான் இயற்கை நியதி. குறிப்பாகத் தன் தாய்மொழியின் மீது செலுத்தும் பிறமொழி ஆதிக்கத்தை எதிர்ப்பதென்பது ஒவ்வொருவரின் கடமை எனக் கருதப்படுகிறது. தமிழ் நாட்டில் இந்தியைத் திணிக்கப் பலமுறை முயற்சி நடைபெற்றது. அப்போதெல்லாம் தமிழர் ஒன்று திரண்டு போராடியதால் அது கைவிடப்பட்டதென்பது வரலாறு தரும் செய்தியாகும். அதற்குப் பல தலைவர்களின் பேச்சும் கவிஞர்களின் உணர்ச்சிப் பிழம்பான கவிதைகளும் காரணமெனலாம். அந்தவகையில் முடியரசனின் பூங்கொடி காப்பியமும் குறிப்பிடத் தக்க ஒன்றாகும் பிறமொழி ஆதிக்கத்தை எதிர்த்துத் தமிழ் வளர்ச்சிக்காகப் போராடித் தன் இன்னுயிரை ஈந்த ஒரு பெண்ணின் வரலாறாகப் பூங்கொடி படைக்கப்பட்டுள்ளது. இந்திமொழி ஆதிக்க எதிர்ப்புணர்வு காரணமாகப் பூங்கொடி காப்பியம் இயற்றப்பட்டிருந்தாலும், காப்பியத்தில் இந்தி என்ற சொல் எங்கும் இடம்பெறவில்லை. பிறமொழி, பிறர்க்கும் மொழி, அயன்மொழி முதலான சொற்களைக் காப்பியமெங்கும் பெய்துள்ளார். பிறமொழி ஆதிக்க எதிர்ப்பை,

“நமக்குள மொழியை நாடுதல் தவிர்த்துப்
பிறர்க்குள மொழியாற் பிதற்றுதல் உடையேம்”10

என்றும்,

“துறைதொறும் துறைதொறும் தூயநற் றமிழே
ஆட்சி புரியும் மாட்சிமை வேண்டும்
ஆட்சியின் பெயரால் அயன்மொழி புகுதலைச்
சான்றோர் வெறுப்பர் தமிழகம் மறுக்கும்”[11]

என்றும் அமையும் அடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.

இந்தி ஆதிக்கத்தை எதிர்த்துப் போராட்ட உணர்வோடு மக்கள் வெகுண்டெழ வேண்டுமென்பதற்காக இயற்றப்பட்ட நூலே ‘தாய்மொழி காப்போம்’ என்பது.

“ஏய்ப்பும் எதிர்ப்பும் தடுப்பும் மறுப்பும் ஏற்படுங்கால் அஞ்சலும் துஞ்சலுங் கெடுத்து, மயக்கமும் தயக்கமும் விடுத்து ஆண்மையும் வாய்மையும் கொண்டு அவற்றை எதிர்த்துத் தகர்த்தல் வேண்டும்”[12]

என்று ‘தாய்மொழி காப்போம்’ என்னும் நூலின் முன்னுரையில் ஆசிரியர் குறிப்பிட்டிருப்பது இங்கு இணைத்து நோக்கற்பாலதாகும். பலமுறை இந்தியைத் திணிக்க முற்பட்ட போதும், அதனையெதிர்த்துக் கிளர்ச்சி செயது வெற்றி கண்டது தமிழகம். இந்தியினால் விளையும் தீமையை உணர்ந்து தமிழர் அனைவரும் அணிதிரண்டு எதிர்க்க வேண்டுமென்பதை வலியுறுத்தும் வகையில்,

“நமக்குரிய தாய்மொழிக்கு வந்து விட்ட
நலிவகற்ற ஒருமுகமாய் எழுக! மற்றோர்
தமக்குரிய மொழிக்கெல்லாம் வரவு கூறித்
தலைவணங்கும் அருளினிமேற் போதும் போதும்!
சுமக்கின்ற பழிதவிர்க்கத் தொன்று தொட்டுத்
தொடர்ந்துவரும் தன்மானம் நிமிர வேண்டும்
நமக்கென்ன என்றிருக்கும் பொறைமை நீக்கி
நமக்குத்தான் பொறுப்பெனநாம் எழுதல் வேண்டும்”[13]

என்னும் கவிதை அமைந்துள்ளது. மேலும், இந்தியை எதிர்த்துக் களம் காணும் போரில் சாவதற்கும் அஞ்சோம் என்பதை இந்தியைத் திணிக்கும் ஆதிக்க மனப்பான்மை கொண்டோருக்கு உணர்த்தும் விதமாக,

“தூங்குகிற தமிழ்புலியை இடறி வீழ்ந்த
துணைவிழிகள் இல்லாதான் நிலைமை போல
ஏங்குகிற வடவர்தமக் கொன்று சொல்வேன்
என்னினத்தார் மொழிவெறியில் சளைத்தா ரல்லர்
வீங்குகிற தோளுக்கு விருந்து வைக்க
விழைவீரேல் மொழிப்போரைத் தொடர்க: போரைத்
தாங்குகிற வலிமையுண்டு வீரம் உண்டு
சாவதற்கும் அஞ்சாத துணிவும் உண்டு”[14]

என்ற கவிதையைப் படைத்துள்ளார். இவ்வாறு இந்தியை எதிர்க்க நடந்த போரில் பலர் தங்களைத் தியாகம் செய்துள்ளனர்; தீக்குளித்தும் மாண்டுள்ளனர். அவர்களுள் ஒரு வீரனான சின்னச்சாமியைப் பற்றி,

“பிறப்போர்தாம் இறப்பதுவே இயற்கை என்ற
பேருண்மை உணர்ந்தொருவன் எரியை யூட்டி
வரப்போகும் இந்திக்கோர் செவ்வி ளக்காய்
மறக்கோலங் கொண்டுடலம் வெந்து நின்றான்
அறப்போரில் நிற்பவர்க்கோர் சின்னம் ஆனான்
ஆண்மையுளோர் வணங்குகிற சாமி ஆனான்
மறக்காதீர் மறைக்காதீர்! இவனைப் போன்றோர்
மாவீரர் பலருண்டு தமிழைக் காக்க!”[15]

என்னும் கவிதை வழி அறியமுடிகிறது.

இந்தியெதிர்ப்புப் போரின் போது நஞ்சுண்டு மாண்ட விராலிமலை சண்முகம் குறித்துப் பாடியுள்ள முடியரசன், இந்தியை தமிழகத்தை விடுத்துச் செல்லுமாறும் பாடியுள்ளார். சான்றாக,

“நில்லடி நில்லடி இந்திப்பெண்ணே – உன்
நெஞ்சினில் என்ன துணிச்சலடி!
செல்லடி செல்லடி இந்திப்பெண்ணே - இதைச்
சிந்தையில் வைத்திடு சென்ற பின்னே”[16]

என்னும் கவிதையைச் சுட்டலாம். தமிழை ஒதுக்கி இந்திக்கு அடிபணிந்து வாழ்வதை விடச் சாவதே மேல் என்றும் வலியுறுத்தியுள்ளார்.

“அறிவுபெறச் சிந்திக்க ஆய்வு செய்ய
ஆதற்குரிய நூல்கற்க மேன்மை காணக்
குறியுடையோன் பள்ளிக்குட் செல்லுங் காலை
குலவவரும் இந்தியுடன் ஆங்கிலம் தான்
தெரிவுசெய்யும் மொழியென்பார்க் கடிப ணிந்தால்
தென்னாட்டு மொழியெதற்குத் தமிழைப் பேசித்
திரிகின்ற இனமெதற்கு? மான மின்றித்

தின்றலையும் வாழ்வெதற்கு? சாவே மேலாம்”[17]

என்னும் கவிதையின் வழி, மானத்தோடு இந்தியை எதிர்த்துப் போராடிச் சாவது மேல் என்னும் கருத்தை வலியுறுத்தியிருப்பதை அறிய இயலுகிறது. மேலும் ஒவ்வொரு மாநிலத்திலும் அந்த மாநில மொழியே ஆட்சி மொழியாக இருந்திடச் சட்டமியற்ற வேண்டும் என்பதையும் இதற்குத் தீர்வாக முன் வைத்துள்ளார். இக்கருத்து,

“எம்மொழியும் சமமாக இனியதொரு

வழிசெய்க இணைந்து வாழ்வோம்

நும்மொழிதான் கோலோச்ச நுழைப்பீரேல்

தனிநாடு நொடியில் தோன்றும்

நன்மையெனிற் கைகொடுப்போம் நலிவுதரிற்

போர்தொடுப்போம் நயச்சொல் பேசும்

எம்மொழியும் இனிவேண்டா எழுதுங்கள்

சட்டத்தில் இதுதான் நேர்மை”[18]

என்னும் கவிதையில் புலப்படுவதைக் காண முடிகிறது.

**தமிழின் சிறப்பு:**

உலக மொழிகளுள் மிகப் பழமையானது தமிழ்மொழி. இன்றுவரையிலும் செய்யுள் வழக்கும் உலக வழக்கும் பெற்று, இலக்கியச் சிறப்போடு என்றும் மாறாமல், காலத்தால் மூத்த மொழியாகத் திகழ்வது தமிழ் ஒன்றேயாகும்.

“பழமைக்கும் பழமையாய் இலக்கிய வளம் உடையதாய் நிற்பதோடு, புதுமைக்கும் புதுமையாய்க் கருத்துச் செல்வம் நிறைந்ததாய் என்றும் இளமைப் பொலிவுடன் விளங்குவது தமிழ்மொழியாகும்”[19]

என்னும் கருத்தும் ஈண்டுச் சுட்டத்தக்கது. இத்தகைய தொன்மை வாய்ந்த தமிழின் சிறப்பைப் பலரும் போற்றியுள்ளனர். ‘தமிழ் திராவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமுமாகும் எனத் தமிழின் சிறப்பைப் போற்றியுள்ளார் பாவாணர்’[20].

“யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்

இனிதாவ தெங்கும் காணோம்”[21]

என்று தமிழின் சிறப்பைப் பாரதியார் பாடியுள்ளார். மேலும், பாரதிதாசன்

“தமிழுக்கும் அமுதென்று பேர்! — அந்தத்

தமிழ் இன்பத்தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!”[22]

என்றும் தமிழின் சிறப்பினை விதந்தோதியுள்ளார். பாரதிதாசன் பரம்பரையின் தலைமகன் எனப் போற்றப்பட்ட முடியரசனும் தமிழின் சிறப்புக்களை எடுத்துரைத்துள்ளார். பூங்கொடி காப்பியத்தில் விழாவயர் காதையில் நடைபெறும் கலைநிகழ்ச்சியில் தமிழிசை பாடப்பட்டது குறித்து ‘தமிழே இனிமைத் தமிழே இசைத்தனர்’[23] என்று பாடியிருப்பது சுட்டத்தக்கது. மன்றத்தில் அயலிசை பாடுவோர் தமிழில் இசையில்லை என்று கூறுவதைக் கண்டித்துக் கூறுமிடத்தில்,

“இசைவளந் தமிழில் இலைஎனப் பிதற்றல்

வசையுமக் காகும்: வாய்மதம் ஒழிக!

முத்தமிழ் என்றொரு முறைவைப் புளதை

மெத்தவும் மறந்தீர்! மெய்ம்மையை இகழ்ந்தீர்!”[24]

என்று பாடியுள்ளதன் வழி, தமிழின் சிறப்பியல்பை அறியவியலுகிறது. மேலும் முடியரசனின் கவிதைத் தொகுதிகள் பலவற்றிலும் தமிழின் சிறப்புக் குறித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. சான்றாகச் சில இடங்களைச் சுட்ட முடிகிறது.

காரைக்குடி கம்பன் திருநாள் கவியரங்கில் ‘ஆறு’ என்னும் தலைப்பில் கவிதை ஒன்றைப் பாடியுள்ளார் முடியரசன். இக்கவிதை சாகித்திய அகாடமியால் இந்திய மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ள சிறப்பிற்குரியது. இதில் தனித்தியங்க வல்ல தமிழின் சிறப்பைப் பற்றி,

“சார்பற்றுத் தனித்தியங்க வல்லஎன் றன்

தமிழ்மொழியில் பிறமொழிகள் கலந்த போதும்

நேர்வுற்று மாசின்றி இயங்கும் பண்பை

நினைப்பூட்டும் ஆற்றுக்கு வாழ்த்துக் கூறு!”[25]

என்று பாடிச் சென்றுள்ளார். சங்க காலத்திற்குப்பின் அயலவர் தமிழ்நாட்டை ஆண்டபோது தமிழுக்கு எவ்வித ஆக்கமும் ஊக்கமும் தராத நிலையிலும் தமிழ் தன் நிலை தாழாமல் செம்மாந்து நிற்கும் தன்மையைக் குறித்து,

“மூவேந்தர் ஆட்சி முடிந்தபினர் யார்யாரோ
கோவேந்தர் என்றிங்குக் கோலேந்தி வந்தவர்கள்
அவ்வவர்தம் தாய்மொழிக்கே ஆக்கங்கள் தந்தாலும்
செவ்வியநல் லாற்றல் சிதையாமல் நிற்பவளே”[26]

என்று பாடிச்செல்வதில் தமிழின் சிறப்பியல்பு புலனாகிறது. ‘தமிழின் செம்மை’ என்னும் கவிதையில் இடம் பெற்றுள்ள,

“எண்ணி லடங்காத எத்தனையோ நன்மொழிகள்
எண்ணிற் பிறந்து வலிமையுறாக் காலத்தே
தன்வளமை காட்டித் தனிப்பெருமை கொண்டிலங்கிச்
சொன்மரபு மாறாமல் தூய நிலைநாட்டி
வாழ்க்கைப் பெருநிலத்தை வளமாக்கிச் செம்மைதனைச்
சேர்க்கப் பொருள்நூலைச் செப்பிப் பெருமையொடு
செப்பமுறச் செய்தமையால் செந்தமிழென் றோதினரோ?”[27]

என்னும் பாடலடிகளில் செம்மைத் தமிழின் சிறப்பு தெற்றெனப் பளிச்சிடுகின்றது. சான்றோர் பலரும் தமிழின் சிறப்பைப் புகழ்ந்துரைத்தனர் என்பதனை,

“காலத்தால் முந்துமொழி காப்பியங்கள் தந்தமொழி
ஞாலத்து மூத்தமொழி நல்லறங்கள் பூத்த மொழி
என்றெல்லாம் சான்றோர் இசைக்குமொழி செந்தமிழ்தான்”[28]

என்று பாடி வெளிப்படுத்தியுள்ளார். தனிமனிதனுக்குத் தனியுடைமையாகவும் உலகத்துக்கொரு பொதுவுடைமையாகவும் விளங்கும் வள்ளுவத்தை நெஞ்சில் இருத்தித் தமிழின்பம் சுவைக்க வாரீர் என்று திருக்குறள் விழாவில் ‘வள்ளுவர் கண்ட உடைமைகள்’ என்னும் தலைப்பில் பாடிய கவிதை மூலம் நாட்டுக்கு மக்களுக்கு விடுக்கும் அழைப்பில் தமிழின் சிறப்பு விளங்குகிறது. இதனை,

“வள்ளுவர்சொல் லுடைமையெலா மவ்வ வர்க்கு
வாழ்வளிக்குந் தனியுடைமை யாகுங் கண்டீர்!
வெள்ளமெனச் சேர்ந்துறையும் மன்பதைக்கு

விழவுதரு பொதுவுடைமை யாகுங் கண்டீர்

உள்ளமது குழைந்தும்மை வேண்டு கின்றேன்

ஒப்பரிய குறள்நெறியை உடைமை யாக்கி

அள்ளுதமிழ்ப் பாமொழியை நெஞ்சிற் றேக்கி

அளப்பரிய இன்பத்தில் திளைப்போம் வாரீர்!"[29]

என்னும் கவிதை வரிகளில் அறியலாம். இத்தகைய சிறப்பிற்குரிய தமிழைச் சுவாசிக்கும் தமிழரின் நிலையும் இங்குக் குறிக்கத்தக்கது.

**தமிழர் நிலை**

உலகின் ஆதிகுடியாகக் கருதப்படும் தமிழரின் நிலை குறித்தும் முடியரசன் தன் கவிதைகளில் சிறப்பாகப் பதிவு செய்துள்ளார். உலகில் முதலில் தோன்றிய மனிதன் தமிழன் என்பதையும், அவன் பேசிய மொழி தமிழே என்பதையும் முடியரசன் தன் கவிதையொன்றில் தெளிவாகக் குறித்துச் சென்றுள்ளார். இதனை,

"ஆதி மனிதனவன் அன்னான் கருத்துரைக்க

ஏதும் அறியாதான் எண்ணம் எடுத்தியம்பப்

பேசும் மொழியறியான் பிள்ளைநிலை யுற்றிருந்தான்.

….. …… ……. ……

….. ……. ……. …….

எண்ணுங் கருத்தை எடுத்துரைக்க அம்மாந்தன்

கண்ணசைத்தான் கையசைத்தான் காலங் கடந்துவரப்

பையஅவன் நாவசைத்தான்: பாலோ தெளிதேனோ

செய்யஒரு நற்கரும்பின் தீஞ்சாறோ என்னஒரு

சொன்மொழிந்தான் மீண்டுமதைச் சொன்னான், எதனாலோ

பன்முறையும் பன்னிப் பழகினான் அச்சொல்லை:

சொல்லிப் பழகுமொழி மெல்லத் தமிழாகி

இல்லைநிகர் என்ன இயலாய்க் கனிந்ததுகாண்:

இவ்வண்ணம் முத்தமிழாய் ஏற்றம் பெறுமொழியை

எவ்வண்ணம் ஏத்திப் புகழ்வோம் நாம்?"[30]

என்று பாடியிருப்பதன் வாயிலாக அறியமுடிகிறது. மக்கள் முதலில் தோன்றிய நிலப்பகுதி லெமூரியா என்பர். அது கடல்கோளால் அழிந்தபின் மக்கள் பல்வேறு திசைகளில் சிதறிச் சென்றனர். ஆங்காங்கே அவர்கள் குடியேறிய நாட்டுப் பெயரால் அழைக்கப்பட்டனர் என்பது ஹீராஸ் பாதிரியாரின் கருத்து, மக்கட்குல முறையான ஆராய்ச்சியால் மத்திய தரைக் குலத்தினருக்கும் அவர்களுக்கு வடக்கே உள்ள குலத்தினருக்கும் முன்னோர் தென்னிந்தியாவினின்றும் சென்றார்கள் என்று கூறுவது முடியாத காரியமல்ல என்று டாக்டர் மெக்லீன் கூறியுள்ளார். குல ஆராய்ச்சியின் பல தன்மைகளையும் நன்கு அறிந்த டாக்டர் பெர்கூசன், வரலாற்றுக் காலத்திற்கு மிக முன் தொட்டுத் திராவிட மக்கள் இந்தியாவில் வாழ்கின்றார்கள். அவர்கள் குடியேறும் பொருட்டு இந்திய நாட்டுக்கு வந்தார்களோ அல்லது வெற்றியாளராக வந்தார்களோ என்று நம்மால் அறிந்து கூற முடியவில்லை. இக்கருத்தைக் கொண்டே அவர்கள், இந்திய நாட்டின் பழங்குடிகள் எனக் குறிப்பிடுகின்றோம். அவர்களின் பிறப்பு தென்னாடு என்பதை அவர்கள் வரலாறுகள் நன்கு வெளியிடுகின்றன. அவ்வூர் தஞ்சாவூர் அல்லது மதுரைக்கு அதிக தொலைவில் போகாது. அங்கிருந்தே அவர்கள் வடக்கு நோக்கிப் பயணமானார்கள். அவர்களின் பிறப்பிடம் இந்தியாவிற்கு அயலிலுள்ளது. அல்லது அவர்கள் புதிதாக வந்து குடியேறினார்கள் என்று கூறுதற்கு யாதும் வரலாறு இல்லை. நாங்கள் அறியக் கூடிய அளவில் பழங்குடிகளாகவே இருக்கின்றனர் என்று குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.... எனவே லெமூரியாக் கண்டத்தில் தோன்றிய முதல் மக்களினமே தமிழகத்தின் ஆதி குடிகள் என்பதைப் பல ஆய்வாளர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர் எனக் கொள்வதே பொருத்தமுடையது"[31] என்னும் கருத்தும் இங்கு மனங்கொளத்தக்கதாகும்.

"தமிழ்காட்டும் பண்பனைத்தும் நாமே சொல்லித்

தற்பெருமை கொள்ளவில்லை உலக மெல்லாம்

இமைகூட்ட மனமின்றி விழித்து நோக்கி

எண்ணிய வியப்பெய்திப் போற்றக் கண்டோம்"[32]

என்னும் அடிகள் தமிழரின் நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. காடுகொன்று, குளம் தொட்டு வளம் பெருக்கி நாடாண்ட தமிழின வரலாறு குறித்தும் முடியரசன் தெளிவாகப் பதிவு செய்துள்ளார். கடல்கடந்து வாணிகம் செய்தும், பலருக்கும் ஈத்துவந்தும், அறச்செயல் பல புரிந்தும் வாழ்ந்த தமிழர் நிலை சிறப்பாக இருந்தது என்பதை,

"கல்லெடுத்து முள்ளெடுத்துக் காட்டும் பெருவெளியை
மல்லெடுத்த திண்டோள் மறத்தால் வளப்படுத்தி
ஊராக்கி ஓங்கும் நகராக்கி நாடென்ற
பேராக்கி வாழ்ந்த பெருமை அவன்பெற்றான்:
மாநிலத்தில் முல்லை மருதம் குறிஞ்சி நெய்தல்
நானிலத்தைக் கண்டபெரும் நாகரிக மாந்தனவன்:
…… …… ……. ……
காட்டைத் திருத்திக் கழனி எனவாக்கி
மேட்டைச் சமமாக்கி வேளாண் தொழில் புரிந்தான்
பாராளும் காவலர்க்கும் பாட்டாளும் பாவலர்க்கும்
ஏராளும் காராளன் செய்யுதவி ஏராளம்
சாவா மருந்தெனினும் தன்பால் இயைந்துவிடின்
ஆஆ இனிதென் றவனே தனித்துண்ணான்
…….. …… ……….. ………….
தன்னலம் ஒன்றைத் தவிர்த்திடுவான் மற்றவர்
தந்நலம் வேண்டித் தனிமுயற்சி மேற்கொள்வான்
யாதுமென் ஊரென்பான் யாவரும் கேளிரென்பான்
தீதறியேன் சூதறியான் சாதலும் கண்டஞ்சான்
……. . …….. ……… ……….
வாழ்ந்த தமிழினத்தின் வாய்த்த வரலாறு
சூழ்ந்து சொலக்கருதின் சொல்லில் அடங்காது"[33]

என்னும் அடிகள் வாயிலாக அறியலாம்.

"திங்களோடும் செழும்பரிதி தன்னோடும் விண்ணோடும் உடுக்களோடும் மங்கும் கடல் இவற்றோடும் பிறந்த தமிழுடன் பிறந்தோம் நாங்கள், ஆண்மைச் சிங்கத்தின் கூட்டமென்றும் சிறியோர்க்கு ஞாபகம் செய் முழங்கு சங்கே"[34]

என்னும் பாரதிதாசனின் கவிதையும் இங்கு நினைவுகூரத் தக்கது. இத்தகைய செம்மாந்த வரலாறு கொண்ட தமிழினம் வீழ்ந்த நிலை கண்டு அதனை மீட்டெடுக்கப் பல கவிதைகளைப் புனைந்துள்ளதும் குறிப்பிடத்தக்கது.

"வாழ்ந்த வரலாற்றில் வந்த சிலசொன்னேன்
வீழ்ந்த வரலாறு விண்டால் மனம்நோகும்
முச்சங்கம் கண்டு மொழிவளர்த்தோன் எப்பகையின்
அச்சங்க ளின்றி அமைதியில் நூல்படைத்தோன்
ஆங்கிலத்தால் ஆரியத்தால் ஆதிக்க இந்தியினால்
தீங்குவரு மோவென்று திண்டாடி நிற்கின்றான்
பண்படுத்தும் நூல்கள் பலதந்தோன் சான்றோரைப்
புண்படுத்தி மன்பதையின் பண்பழிக்கும் ஏடுகளே
இன்றுகுவிக் கின்றான்: இளையோர் உணர்வுகளைக்
கொன்று கெடுத்துவிட்டுக் கூசாமல் பேசுகின்றான்
காசுக்கும் மாசுக்கும் கண்டபடி எழுதும்
ஆசைக்குட் பட்டே அலைகின்றான் பாவிமகன்
நல்ல அரசியலில் நச்சைக் கலந்து விட்டான்
சொல்லும் மொழியெல்லாம் சூதன்றி வேறில்லை"[35]

என்னும் கவிதை, செம்மாந்த நிலையில் வாழ்ந்த தமிழனின் தடம்புரண்ட நிலையைப் படம் பிடித்துக்காட்டுகிறது. பாரதிதாசன் நூற்றாண்டுக் கொண்டாட்டத்தின் போது பாடிய கவிதையொன்றில்,

"சரிந்து விட்ட தமிழர்க்குத் தமிழியக்கம்
எனும் நூலைத் தந்து சென்றாய்
திருந்திவிட்ட தமிழரினிச் செயற்படுவர்
என்றிருந்தேன் தெளிய வில்லை
குருந்து விட்ட மழலையர்க்கும் கொடுக்கின்றார்
அயன்மொழியை; கொடுமை யன்றோ

மருந்துவிட்டென் மனப்புண்ணை ஆற்றுவர் யார்?

மானத்தை மறந்தே போனார்"[36]

என்று கூறியிருப்பது தமிழரின் மனம் சரிந்த போக்கினைத் தெளிவு படுத்துகிறது. இவ்வாறு சரிந்து விட்ட தமிழன் வாழ்வைச் சீரமைக்கும் நோக்கில் முடியரசன் பாடிய கவிதைகளில் வெளிப்படும் தமிழியற் சிந்தனைகள் இங்குக் குறிக்கத்தக்கன.

"தலையாகிய அறமேபுரி

சமவாழ்வினைப் பெறவே

இலையோ உரம்? மலையோபகை?

எழுவாய் தமிழ் மகனே!"[37]

என்றும்,

"மாலுடுத்த தமிழ்மகனே! மானம் எங்கே!

மயங்காதே விழி! எழு! உலகை நோக்கு!

கால்பிடித்து வாழ்வதுவோ தமிழ வாழ்வு?

கானத்துப் புலிப்போத்தே வீரங் காட்டு!"[38]

என்றும் பாடி, இழந்து விட்ட செம்மாந்த வாழ்வினை மீட்டெடுக்கத் தமிழரை ஆயத்தப்படுத்துவது இங்குச் சுட்டத்தக்கது.

"செந்தமிழைச் செந்தமிழ் நாட்டைச் சிறைமீட்க

நந்தமிழர் உள்ளத்தில் வையம் நடுங்கும்

வெந்தணல் ஒன்று விரைந்து வளர்ந்ததென்று

குந்திக் குரலெடுத்துக் கூவாய் கருங்குயிலே"[39]

என்னும் பாரதிதாசனின் கவிதை இங்கு இணைத்து நோக்கற்பாலது. இவ்வாறு தமிழர் நிலையை மீட்டெடுக்க எண்ணிய முடியரசன் சாதியாலும், மதத்தாலும் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளும் தமிழனைச் சாடுகின்றார். மேலும் தமிழரின் இழிநிலை மாறி நன்னிலை அடையத் திருக்குறளை வாழ்க்கை நெறியாகக் கொள்ள வேண்டும் என்ற தீர்வையும் முன்வைத்துள்ளார். இதனை,

"உருக்கிடும் தமிழிற் சொன்ன

ஒருமறை அறியா ராகி

அருத்தியில் தழுவிக் கொண்ட

அயலவர் மறையே சொன்னார்:

திருக்குறள் எங்கள் வாழ்க்கைத்

திருமறை என்று கூற

ஒருத்தரை இங்குக் காணேன்

உய்யுமோ தமிழர் நாடு"[40]

என்னும் கவிதையின் வாயிலாக அறிய முடிகிறது. வேதம், குரான், பைபிள் முதலானவற்றை விடுத்துத் தமிழ்மறையான உலகப்பொதுமறையாம் திருக்குறளை வாழ்க்கை நெறியாகக் கொள்வதே தமிழின மீட்சிக்கும் உயர்வுக்கும் உரிய வழியாகும் என்று கூறியிருப்பது போற்றத்தக்கது. முடியரசனின் கவிதைகளில் புலப்படும் தமிழ்ப்பற்றும் ஈண்டுச் சுட்டற்குரியது.

**தமிழப்பற்று:**

ஒவ்வொரு குடிமகனும் தன் தாய்நாட்டின் மீதும் தாய்மொழி மீதும் பற்றுக்கொள்வது இன்றியமையாதை ஒரு கடமையாகும்.

"அன்று முடியரசனார் நாட்டிலே தமிழ் வளர்ந்தது; இன்று

முடியரசன் நாவிலே தமிழ் வளர்கிறது"[41]

என்னும் கூற்றிற்கேற்ப முடியரசனிடம் குடிகொண்டிருக்கும் தமிழ்பற்று சிறப்பாகச் சுட்டத்தக்கது

"சாம்போதும் தமிழ் படித்துச் சாக வேண்டும் - எந்தன்

சாம்பலும் தமிழ் மணந்து வேக வேண்டும்"

என்று பாடிய பாவேந்தனின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நடந்த முடியரசனும்,

"பாடிக்கொண் டேயிருப்பேன் - என்

பைந்தமிழைச் செந்தமிழை நான்

ஓடிக்கொண் டேயிருக்கும் ஊறுஞ்செங் குருதி

ஓடா துறைந்தே ஓய்ந்திடும் நாள்வரை"[42]

என்று பாடிச் செல்கிறார். பூங்கொடி காப்பியத்தில் தாமரைக் கண்ணி பூங்கொடி பற்றிக் கோமகனிடம் கூறுவதாக வரும்,

"……… …………. வியனுல கதனில்

மேம்படு தமிழே மேவிய மூச்சாய்

வாழும் குறிக்கோள் வாழ்வினள்"[43]

என்ற அடிகளில் கவிஞரின் தமிழ்ப்பற்று மிளிருகிறது. தமிழ் வளர்ச்சிக்காகவே பூங்கொடி காப்பியத்தைப் பாடியிருப்பதன் மூலமும் ஆசிரியருடைய தமிழ்ப்பற்றை அறிய முடிகிறது.

தமிழ்முழக்கம் என்ற தொகுதியிலடங்கிய 'நமது வீரம்' என்ற கவிதையில் இடம் பெற்றுள்ள,

"செந்தமிழை நம்முயிரைச் சீர்கொண்ட தாய்மொழியை

எந்தமொழி தன்னாலும் ஏங்க விடுவதில்லை

ஆட்சி மொழியுரிமை அன்னை மொழிக்கானால்

மாட்சி நமக்காகும் என்றெழுந்த மாணவரைச்

சுட்டழித்த போதும் துளங்காமல் நின்றியிருந்து

கட்டிளமைக் காளையர்கள் காட்டியநல் வீரத்தைப்

பாடாமல் விட்டுவிடப் பாவலரால் ஒல்லுவதோ?

பாடாமல் நாவெதற்குப் பாவெதற்குப் பாடுவம்நாம்"[44]

என்னும் அடிகள் முடியரசனின் தமிழ்ப்பற்றுக்குக் கட்டியங்கூறுவதாய் அமைகின்றன எனலாம்.

"இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்

விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்"

என்னும் தமிழ்விடு தூது பாடலடிகளுக்கேற்ப முடியரசன் தன் இறுதிமூச்சுவரை தமிழ், தமிழன், தமிழ்நாட்டு நலன் ஆகியவற்றுக்காகக் குரல் கொடுத்தவர். இத்தமிழ்ப்பற்றே அவரது படைப்புகளின் அடிச்சரடாக இயங்குகிறது என்பதை அறியமுடிகிறது. சான்றாக,

"தாய்மொழியைப் பாராட்ட விழையும் மாந்தர்

தம்மொழியிற் சான்றோரைப் போற்றல் வேண்டும்

தாய்நாட்டு முதலமைச்சர் மாலை சூட்டத்

தகுகல்விப் பொறுப்பேற்ற அமைச்சர் நின்று

வாய்விட்டுப் பாராட்ட நிதிய மைச்சர்

வரையாது மனங்குளிர்ந்து பரிசில் நல்கச்

சேய்நாட்டார் வியந்துரைக்க யானை மீது

செம்மாந்து செலல்வேண்டும் அந்தச் சான்றோர்

செம்மாந்து செல்கின்ற காட்சி காணச்

சேர்ந்தோடி வருகின்ற மக்கள் கூட்டம்

அம்மாஎன் றதிசயிக்க வேண்டும் என்றன்

ஆவல்நிறை வேறுகின்ற நாள்தான் என்றோ?"[45]

என்று பாடிச் செல்வதனைச் சுட்டலாம். மேலும் 'செந்தமிழ்க்குத் தீங்குவரின் சீற்றமொடு பாட்டெழுது'[46] என்னும் பாடலடியும் கவிஞரின் தமிழ்ப்பற்றினை வெளிப்படுத்துகிறது.

மணச் சடங்கு, பிணச் சடங்கு, கோயில் முதலானவற்றில் தமிழ் இல்லை; படித்தவர் பேசும் பேச்சில் தமிழ் இல்லை. வளமான வாழ்க்கையைத் தமிழால் பெற்றிருப்போறும் தமிழில் பேசிடக் கூசும் நிலை கண்டு வீறுகொண்டெழுந்து,

"தமிழ் காக்கப் போர் செய்ய உணர்வு வேண்டும்

தமிழ்கொன்று வாழ்கின்ற கயமை வேண்டாம்

தமிழ்காக்கப் போர் செய்யப் புலிகள் வேண்டும்

தடுமாறி ஓடிவிடும் எலிகள் வேண்டாம்

தமிழ்காக்கப் போர்செய்ய சிங்கம் வேண்டும்

தாளமிடும் ஓலமிடும் நரிகள் வேண்டாம்

தமிழ்காக்கப் போர்செய்ய மானம் வேண்டும்

தாளமுத்து நடராசன் துணிவு வேண்டும்"[47]

எனப்பாடித் தமிழ்மக்களுக்காகத் தமிழ்ப்பற்றை ஊட்டுகின்றார்.

தமிழைத் தாயாகவும், தந்தையாகவும், காதலியாகவும், மனைவியாகவும், மகனாகவும் கருதிப் பாக்கள் புனைந்துள்ளார் முடியரசன். இக்கவிதைகள் கவிஞனின் தமிழ்ப்பற்றுக்குச் சான்று பகர்வன என்றே கூறலாம். 'தமிழ் என் தாய்' என்ற கவிதையில்,

"தன்கடன் ஆற் றிவிட்டான் - தமிழ்த்
தாயெனைக் காத் தமையால்
தன்கடன் போற் றுதற்கே – கவிஞன்
தந்தனன் வேற் படையே
நன்னடை நல் கினரோ - இந்த
நாட்டினை ஆள் பவரே
என்கடன் ஆற் றிடுவேன் - பகையை
எற்றி முருக் கிடுவேன்"[48]

என்று பாடிச் செல்கிறார். 'தமிழ் என் தந்தை' என்னும் கவிதையில்,

"முத்தமிழ் வா ணர்கள்சூழ் - அவையில்
முந்தி யிருந் திடவே
அத்தனே என்னை யுமோர் - சான்றோர்
ஆக்கி மகிழ்ந் தனைநீ"[49]

என்னும் தந்தை பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. தமிழைக் காதலியாகக்கருதிய முடியரசன், காதலுடன் நீ யாழெடுத்துப் பாடுகையில் நான் காவியம் பல பாடுவேன் என்று தன் காதலியிடம் கூறுகிறார். இதனை,

"காதல் உலகினிலே – அகப்பொருள்
காவின் நடு வினிலே
மேதைகள் ஆக் கியதோர் - மாளிகை
மீதினில் நா மிருப்போம்
மாதுநீ யா ழெடுத்தே - இசை
மாரி பொழிந் திடுவாய்

காதற் களி யினில்நான் - பற்பல

காவியம் பா டிடுவேன்"[52]

என்னும் கவிதை வழி அறியலாம். தமிழைத் தன் மனைவியாகக் கருதும் கவிஞர் நம் உறவால் பிறக்கும் குழந்தைகளை உலகம் சங்கக் கவிதைகளாகப் புகழும் என்று கூறுவதனை,

"சோலை வெளியிடையே – நாம்

சுற்றித் திரி வமடி

மாலை நிலா வரவே – தனியாய்

மாடந் தனை யடைவோம்

அங்குநம் கூட்டுறவால் - பிறந்த

அன்புக் குழந் தைகளை

சங்கக் கவிதை என்றே – உலகம்

சாற்றிப் புக ழுமடி"[51]

என்னும் பாடலால் அறியமுடிகிறது. தமிழைத் தன் மகனாகக் கருதும் முடியரசன், மகனின் கொஞ்சு மொழிகேட்டு மகிழ்ந்து, மகனைத் தன் உயிர் மூச்சாகக் கருதுவதால் தனக்கு மேலுலகம் தேவையில்லை எனக் கூறுகிறார். மேலும்,

"பைந்தளிர் மேனியைத் தீண்டுகையில் - தமிழ்ப்

பாலக னேநடை காணுகையில்

பைந்தமி ழேஎன நின்பெயரைச் - சொல்லிப்

பாடிப் புகழ்ந்துனைப் பேசுகையில்" 52

என்றும் பாடிச் செல்கிறார்.

தன் தாயாக, தந்தையாக, காதலியாக, மனைவியாக, மகனாகத் தமிழைப் பாடிய முடியரசன் தெய்வமாகவும் பாடியுள்ளார். தந்தை பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையைப் பின்பற்றியவர் முடியரசன். எனவே தான் தமிழைத் தெய்வமாகப் போற்றியிருக்கிறார். இருப்பினும் தெய்வத்திடம் வேறெந்த சுகபோகங்களைத் தருமாறு வேண்டாமல், வறுமையிற் செம்மை, எதனையும் வெல்லும் மனநிலை, உலகமே என்னைப்

போற்றி வணங்கும் வகையில் பாடும் வல்லமை ஆகியவற்றை மட்டும் தமிழ்த் தெய்வத்திடம் வேண்டுவது சிறப்பாகப் போற்றத்தக்கது. இதனை,

"கொல்லும் வறு மையிலும் - செம்மை
குன்றா திலங் கிடவே
வெல்லும் மன நிலையைத் - தாயே
வேண்டுகி றேன் அருள்வாய்
சொல்லுமென் பாடலினால் - உலகம்
சூழ்ந்து வணங் கிடவே
வல்லமை வேண்டு மம்மா – என்றும் நான்
வாழ்ந்திட வேண் டுமம்மா"[53]

என்று பாடியிருப்பதன் வழி அறிய முடிகிறது.

"ஒரு நாட்டில், ஒரு குறிப்பிட்ட காலத்தின் உள்ளீடான வரலாறு, எண்ணங்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றைக் கவிதை வாயிலாகத்தான் அறியமுடியும்"[54]

என்னும் கூற்றிற்கேற்பக் கவிதையைத் தன் படைப்புலகமாகக் கருதிய முடியரசனின் படைப்புகளில் தமிழ் உணர்ச்சியும் தமிழ்ப்பற்றும் பெரிதும் விரவிக் கிடப்பதைக் காணமுடிகிறது. இத்தகைய தமிழ்ப்பற்றுடைய முடியரசனின் கவிதைகளைப் பற்றி மு.வரதராசன் கூறியுள்ள,

"தமிழ் உணர்ச்சி அவருடைய (முடியரசனுடைய) கவிதைகளில் மேலோங்கி நிற்கும்"[55]

என்னும் கருத்தும் இங்கு நினைவு கூரத்தக்கது.

தமிழ்வளர்ச்சிக்காக முடியரசன் முன் வைத்துள்ள சிந்தனைகளும் இங்குக் குறிக்கத்தக்கன.

**தமிழ் வளர்ச்சி**

தமிழ்வளர்ச்சி குறித்துத் தன் வாழ்நாள் முழுவதும் சிந்தித்தவர் முடியரசன். அவர்தம் படைப்புகளில் தமிழ் வளர்ச்சி குறித்துப் பதிவு செய்துள்ள சிந்தனைகள் குறிப்பிடத்தக்கனவாகும். தமிழ் வளர்ச்சிக்காகப் பலரும் தொண்டாற்றினால் உலகில்

தமிழ் உயர்தனிச்செம்மொழியாக வலம் வரும் என்பதைப் பூங்கொடி காப்பியத்தில் குறிப்பிட்டுள்ளார். இதனை,

“அன்பால் தமிழின் ஆக்கங் கருதித்

துயரெது வரினும் துச்சமென் றெண்ணி

அயர்வில ராகி ஆற்றத் துணியின்

உயர்தனிச் செம்மொழி உலகினில் ஓங்கும்”[56]

என்ற கவிதை வரிகளில் அறியமுடிகிறது. மேலும் பூங்கொடி பாத்திரப் படைப்பின் வாயிலாகத் தன் இறுதி மூச்சு வரை தமிழுக்குத் தொண்டு செய்வேன் என்பதை,

“இறக்கும் வரைநின் பணியே யல்லால்

துறக்கமொன் றுண்டெனத் துணியேன் தமிழே!”[57]

என்னும் பாடலடிகள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். உலகெங்கும் தமிழின் பெருமையைப் பேசித் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபடுவேன் என்று ‘மீனவன்’ என்னும் பாத்திரம் பேசுவதாக வரும்,

“என்தாய்ப் பழிப்போர் இனியிரார் உலகில்,

பொன்றாப் புகழ்நூல் புகுந்ததென் கையில்,

இசையும் கூத்தும் இலங்கிய தமிழோ

வசைபெறக் காண்பது? வையகம் எங்கும்

முழக்குவென் முழக்குவென் முத்தமிழ்ப் பெருமை”[58]

என்ற அடிகள் வாயிலாக அனைவரும் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடவேண்டும் என்னும் சிந்தனையை விதைத்துச் சென்றுள்ளார். முத்தமிழ் மாநாட்டில் தமிழின் மேன்மையை மேலும் மேம்படுத்தப் பல நாட்டறிஞர்களும் ஆய்வுரை வழங்கினர் என்பதை,

“பைந்தமி ழுணர்ந்த பற்பன் னாட்டினர்

ஐந்தெனும் இலக்கண அமைப்புறும் செந்தமிழ்

மேன்மையைப் பான்மையை மேம்படு புலத்தால்

ஆய்ந்தவை கூறி அதன் நலம் பரப்ப

வாய்ந்தவும் உரைத்துத் தோய்ந்தனர் களிப்பில்”59

என்னும் அடிகளில் புலப்படுத்தியுள்ளார். இதன் மூலம் தமிழ் வளர்ச்சிக்குப் பல நாட்டறிஞர் ஆய்வுரைகளையும் புறந்தள்ளக்கூடாது என்னும் சிந்தனையை முன்வைத்துள்ளார்.

ஒரு மொழி வளம்பெற வேண்டுமானால் சொல்வளம் வேண்டுமென்பதை அறிந்த முடியரசன் கலைச்சொல்லாக்கம் செய்திடல் தமிழ்வளர்ச்சிக்கான இன்றியமையாத பணியாகக் குறிப்பிடுகிறார். இதனை,

“……… ……. தக்க
சான்றவர் புலத்தால் ஆய்ந்த
முறையினால் கலைச்சொல் ஆக்க
முனைந்திடச் செய்தல் வேண்டும்”[60]

என்ற கவிதைவரிகளால் அறியவியலுகிறது. திருமணச் சடங்குகளைத் தமிழிலேயே செய்ய வேண்டும். கோயிலில், இறைவனைத் தமிழில் வழிபட வேண்டும். மேலும் அனைத்துத் துறைகளிலும் தமிழ் வளர்ச்சி பெற ஆவன செய்திட வேண்டும் என்பதனை,

“திருமண நிகழ்ச்சி யாவும்
தெளிதமிழ் கேட்கச் செய்வீர்!
இறைவனும் தமிழே கேட்க
இணைந்துநீர் தொண்டு செய்வீர்!
துறைதொறும் தமிழே காணின்
தூய்தமிழ் ஆட்சி என்போம்”[61]

என்னும் பாடலடிகளில் புலப்படுத்தியுள்ளார். முடியரசன் இறைமறுப்புக் கொள்கையாளரெனினும்,

“தமிழைக் கோவிலுள் தடுத்திடும் பகையைத்
தவிடெனப் பொடியெனச் செய்திடல் வேண்டும்”[62]

என்று பாடியிருப்பதில், அனைத்துத் துறையிலும் தமிழ் வளர்ச்சி பெற வேண்டுமென்ற அவருடைய முனைப்புப் புலனாகிறது.

தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றிய மறைமலையடிகள், திரு.வி.க., கா.அப்பாதுரை, பாவாணர், மு.வரதராசன், பண்டிதமணி கதிரேசன், வ.சுப.மாணிக்கம்,

தவத்திரு. குன்றக்குடி அடிகளார் முதலான சான்றோர் பலரையும் மறவாது போற்றும் முடியரசன், அவர்களுடையே அடிச்சுவட்டில் அனைவரும் நடைபோட்டுத் தமிழ்வளர்க்க முனைதல் வேண்டுமென்பதை வலியுறுத்தியுள்ளார்.

"கோவாக நம்முன்னே வீற்றி ருக்கும்

கொடு மீசை சிவந்தவிழி கருத்தமேனிப்

பாவாணர் படைத்தளித்த எழுத்த னைத்தும்

பசுந்தமிழுக் காணிவேர் ஆகி நிற்கும்"[63]

என்றும்,

"மூவாத தமிழ்வளர வழிவகுத்த

மு.வ.வின் தமிழத்தொண்டே தலைநின் றோங்கும்"[64]

என்றும் பாடியிருப்பதைச் சான்றுகளாகச் சுட்டலாம்.

கர்நாடக மாநிலத் தலைகர் பெங்ளுரில் உலகத் தமிழ்க் கழகம் என்னும் பெயரில் ஓர் அமைப்பை ஏற்படுத்தி அதன் வாயிலாகத் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்ட சான்றோர்களைப் பாராட்டி,

"கரும்பூரும் சாறுநிகர் தமிழைக் காக்கும்

கருத்துடன் முத் தமிழ்க்கழகம் இங்குக் கண்டீர்

நரம்பேற உணர்வூட்டி அறிவும் ஊட்டி

நன்மானம் பகுத்தறிச் சுடருங் காட்டிச்

சுரும்பாக உழைக்கின்றீர் வாழ்த்து கின்றேன்"[65]

என்று வாழ்த்திப் பாடியிருப்பதன் மூலம் பிறமாநிலத்திலும் தமிழ் வளர்ச்சி பெற வேண்டுமென்ற முடியரசனின் ஆவலை அறிந்துகொள்ள முடிகிறது.

பொருளியல், பயிரியல், உயிரியல், வேதியியல் முதலான பல்வேறு துறைகளில் பயின்று பட்டம் பெற்றோர், பிறமொழிக் கலைகளைத் தாய்மொழியாம் தமிழுக்குக் கொண்டு வர முயற்சித்தல் வேண்டுமென்று வேண்டுகிறார். இக்கருத்து,

"கற்ற அத் துறைகள் யாவும்

கருத்தினில் தேக்கி வைத்துப்

பெற்ற நம் தாய்மொழிக்குள்

பிறமொழிக் கலைக ளெல்லாம்

முற்றிய வளர்ச்சி காணும்

முயற்சியில் யாது செய்தீர்?"[66]

என்னும் கவிதை வரிகளில் புலப்படுகிறது. முடியரசனின் இவ்வினாவில்

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்

தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்"

என்று பாடிய பாரதியின் தாக்கம் வெளிப்படுகிறது. பிறமொழிக் கலைகளையும் தமிழுக்குக் கொண்டுவந்து தமிழை வளரத்தெடுக்க முயற்சிக்க வேண்டுமென்னும் கருத்து,

"பன்னருங் கலைகள் யாவும்

பைந்தமிழ் அடையச் செய்வீர்!

நன்னிலை தமிழுக் காக்க

நயந்துநான் வேண்டு கின்றேன்"[67]

என்னும் பாடலடிகளில் தெற்றெனப் பளிச்சிடுகிறது. பிறமொழிக் கலைகளும் தமிழில் ஏற்பட வேண்டுமென்ற முடியரசனின் தமிழ் வளர்ச்சிச் சிந்தனை சிறப்பாகப் போற்றத்தக்கது. இவ்வாறு பல்துறையிலும் தமிழ் வளர்ச்சி அடைந்தால்தான் தமிழுக்கு உயர்வு கிட்டும் என்பதே முடியரசனின் தமிழியற் சிந்தனை என்பதை,

"மொழிவளம் பெற முயல்வாய் - தமிழ்

முதலிடம் பெறின்நீ உயர்வாய் உயர்வாய்"[68]

என்னும் கவிதை வரிகளால் அறியலாம். மேலும்,

"பதவியும் பட்டமும் பணங்களுங் காட்டிப்

பகட்டினும் எதற்கும் பணியேன் கைநீட்டி

முதுமொழி என்மொழி முத்தமிழ் மொழியை

மொய்ம்புறக் காத்திட முனைந்திடும் வழியைப்

பாடிக்கொண் டேயிருப்பேன்"[69]

என்று பாடியதோடு, இக்கவிதையைப் படிக்கக் கேட்டவாறே கவிஞர் முடியரசன் உயிர் துறந்தார் என்பது மனங்கொளத்தக்கது. இதன் வாயிலாகத் தமிழுக்காகவே வாழ்ந்து மறைந்த முடியரசனின் தமிழியல் சிந்தனை எத்துணை உயர்வானது என்பது புலனாகிறது. முடியரசன் வலியுறுத்தும் தமிழ்நாட்டுக்கலை வளர்ச்சியும் இங்குச் சுட்டத்தக்கது.

**தமிழ்நாட்டுக் கலைகள்:**

மனிதன் நாகரிகம் பெறுவதற்குப் பேருதவியாக இருந்தவை அவன் சிறிது சிறிதாகக் கற்றுக்கொண்ட பலவகையான கலைகளேயாகும். ஆனால் அவன் இந்த நிலையையடைவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆயின. மனிதனுடைய மனத்தில் உணர்ச்சியை எழுப்பி, அழகையும் இன்பத்தையும் அளிக்கின்ற பண்பு, கலைகளுக்கு உண்டு. மனிதன் தன்னுடைய அறிவு, மனநிலை, கற்பனை ஆகியவற்றால் கலைகளைப் படைத்து, அக்கலைகளின் வாயிலாக உணர்ச்சியைப் பெற்று அழகையும் இன்பத்தையும் காண்கின்றான். கலைகள் மனித நாகரிகத்தின் பண்பாடாக விளங்குகிறது. நாகரிகம் பெற்ற மனிதர் வாழ்கின்ற இடங்களிலெல்லாம் கலைகள் வளர்ந்துள்ளன.

“கல் எனும் செந்தமிழ்ச்சொல் கலை ஆயிற்று”[90]

என்னும் பாரதிதாசனின் பாடலடியும் இங்குச் சுட்டத்தக்கது. முடியரசனின் படைப்புகளுள் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, நடனக்கலை, நெய்தல் கலை முதலான கலைகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

**கட்டடக்கலை:**

கட்டடக்கலை கண்ணால் கண்டு இன்புறத்தக்கதாகும். வீடுகள், கோயில்கள், மாடமாளிகைகளின் கட்டட அமைப்பு காட்சிக்கு இன்பம் தருவதாகும். பூங்கொடி காப்பியத்தில் பெருநிலக்கிழார் மாளிகையை,

“வங்க வினைஞரும் வச்சிரத் தச்சரும்
கொங்கக் கொல்லரும் குளிர்மலை யாளரும்
தமிழக வினைஞர் தம்மோடு கூடிப்
புகழ்பெறு மாறு புதுமையின் இயற்றிய
கண்கவர் வனப்பிற் கைவினை முற்றிய
விண்தவழ் முகப்பும் வியன்பெரு வாயிலும்
வெண்சுதைப் பாவை விளங்கிடும் அரணும்

ஒள்ளிய சாந்து வெள்ளிய நிலவொளி

அள்ளி இறைக்கும் அழகுறு மதிலும்

திரள்பெருந் தூணிற் செய்வினைப் போதிகை

மருள்படச் செய்யும் மனங்கவர் சித்திர

விதானப் பரப்பொடு விளங்குநல் மண்டபத்து"[71]

எனக் காட்சிப்படுத்தியுள்ளார். 'தென்னாட்டுக்கலைகள்' என்னும் தலைப்பில் பாடிய கவிதையில் கட்டடக்கலை குறித்து,

"வான முகட்டு வழிஏற வைத்தஒரு

ஏணி எனத்தோன்றும் எண்ணிலாக் கோபுரங்கள்

மாடங்கள் மாளிகைகள் மாற்றுயர்ந்த பொன்வேய்ந்த

கூடங்கள் கொற்றவர்கள் கூடும் அரண்மனைகள்

போர்யானைக் கூட்டம் புகுந்துவரும் நேர்வாயில்

போர்கருதி யாரும் புகமுடியாச் சீர்வாயில்

மாற்றார் கடந்தறியா மாமதில்கள் இத்தனையும்

சாற்றாவோ கட்டடத்து நுண்கலைக்குச் சான்றாக"[72]

என்று பாடியுள்ளதும் இங்குக் குறிப்பாகச் சுட்டத்தக்கது.

**சிற்பக்கலை:**

சிற்பக்கலை, கட்டடக்கலையை விட நுட்பமானது.

> "கல், சுதை, உலோகம், மரம் முதலான பொருள்களினால் மனிதன், விலங்கு, பறவை, தாவரம் முதலான இயற்கைப் பொருள்களின் வடிவத்தையும் கற்பனையாகக் கற்பித்து அமைக்கப்பட்ட பொருள்களின் உருவத்தையும் அமைப்பதுதான் சிற்பக்கலை."[73]

சிற்பக் கலைக்குத் தேவையான பொருட்கள் பற்றித் திவாகர நிகண்டு,

"கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்

மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்

கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை

பத்தே சிற்பத் தொழிற்குறுப் பாவன"[74]

எனக் குறிப்பிட்டுச் செல்கிறது. சிற்பக்கலை குறித்து முடியரசன் 'தென்னாட்டுக் கலைகள்' என்ற தலைப்பில் பாடிய கவிதையொன்றில்,

"கல்லெடுத்தான் கைச்சிற் றுளிஎடுத்தான் அக்கல்லில்

சில்லெடுத்தான் நல்ல சிலையொன்று கண்டெடுத்தான்

கற்பனையில் கண்டெடுத்த காதற் பொருளெல்லாம்

சிற்பமென ஆக்கிச் சிறப்பெடுத்தான் நம்முன்னோன்

கல்லைக் கலையாக்கும் கைத்திறனை நீள்கடல்மா

மல்லைக் கருங்குன்றம் மாறின்றிக் கூறிநிற்கும்"[75]

எனப் பாடிச் சென்றுள்ளார். மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் அமைந்துள்ள தேர்வடிவக் கற்கள் ஏழுவகைப் பண்களை இசைக்கும் தன்மையுடையன என்பதனை,

"தென்மதுரைக் கோவிலுக்குள் தேர்வடிவக் கல்லெல்லாம்

நன்மதுர மெல்லிசையால் நாளெல்லாம் பாடிநிற்கும்"[76]

என்று பதிவு செய்துள்ளதன் மூலம் அறியலாம். தமிழரின் சிற்பக்கலைச் சிறப்பை,

"விண்ணெட்டும் கோபுரங்கள் விந்தைதரும் நற்சிலைகள்

உண்ணட்ட கற்றூண்கள் ஓங்கும் மதிற்புறங்கள்

ஒவ்வொன்றும் காட்டும் உயிர்ச்சிலைகள் நம்சிற்பச்

செவ்விதனைக் கூறிச் சிறப்பெல்லாம் பேசி நிற்கும்"[77]

என்று பாடியுள்ளமை குறிக்கத்தக்கது.

**இசைக்கலை:**

காதால் கேட்டு இன்புறத்தக்கது இசைக்கலை. இக்கலையைப்பற்றி முடியரசன்,

"நெஞ்சைக் களிவித்து நெக்குருகச் செய்விக்கும்

விஞ்சைக் கலையாகும் விந்தை இசைக்கலையில்

ஒப்புயர் வில்லாமல் ஓங்குநிலை பெற்றிருந்தோம்

செப்புகின்ற சான்றுகளோ எப்பொழுதும் ஈங்குண்டு"[78]

என்றும்,

"நன்றாம் இசைக்கருவி நூறுவகை செய்தமைத்தான்
கூவும் குயில்கண்டான் கொக்கரித்துக் கூவிநின்றான்
யாவும் இசையாகப் பாயும் நிலையுணர்ந்தான்"[79]

என்றும் பாடியிருப்பவை சிறந்த பதிவுகளாகும். மேலும் பூங்கொடி காப்பியத்தில் பூங்கொடி வழங்கிய தமிழிசை குறித்து முடியரசன்

"பண்ணும் இசையும் பயில்வோர் ஒலியும்
தண்ணுமைக் கருவி தந்திடும் முழக்கும்
தெரிதரு யாழில் விரிதரும் இசையும்
முறிதரு கருவிகள் மோதுநல் லொலியும்
காய்வேங் குழலின் கனிந்தநல் லிசையும்
ஆய்நூற் புலவர் அறைந்தநாற் கருவியும்
கற்பார் மிடற்றுக் கருவியுங் கலந்து
பொற்புடன் வழங்கும் புத்திசை வெள்ளம்
மாடமிசைப் பிறந்து மறுகிடைப் பரந்தது"[79]

என்று பாடியுள்ளதும் இங்குச் சுட்டத்தக்கது.

**ஓவியக்கலை**

பருப்பொருளான சிற்பக்கலையை விட நுட்பமானது ஓவியக்கலை.

"உலகத்திலே காணப்படுகிற எல்லாப்பொருள்களின் உருவத்தையும் உலகத்தில் காணப்படாத கற்பனைப் பொருள்களின் வடிவங்களையும் பலவித நிறங்களால் இயற்கையழகு பொருந்த எழுதப்படுகிற படங்களே ஓவியக் கலையாம்"[80]

என்பர் மயிலை சீனி வேங்கடசாமி. ஓவியக்கலை குறித்து முடியரசன்,

"வீட்டுச் சுவரில் விளங்குமேற் கூரைதனில்

காட்டும் திறமெல்லாம் காட்டித் திரைதன்னில்
ஊட்டும் பலவண்ணம் ஊட்டி உயிரோவம்
தீட்டும் திறலோனைத் தேர்ந்தெடுத்தே அன்னவனைக்
கண்ணுள் வினைஞனெனக் கட்டுரைத்தே ஓவியத்துச்
செந்நூல் படைத்துச் செழிப்படையச் செய்தவர்நாம்"[81]

என்று பாடிச்சென்றுள்ளார்.

**நடனக்கலை**

இசைக்கலையோடு தொடர்புடையது நடனக்கலை. இதனைக் கூத்துக்கலை என்றும் கூறுவர். இசையுடன் பொருந்திய நடனத்தையும் கூத்தையும் ஒரே சமயத்தில் கண்ணால் கண்டும் காதால் கேட்டும் மகிழ்வுறலாம்.

"ஆடற் கலையும் அறிந்தவனே நம்முன்னோன்
விண்ணில் தவழ்ந்து விளையாடும் கார்முகிலைக்
கண்ணெதிரில் கண்டு களித்தெழுந்த வண்ணமயில்
தோகை தனைவிரித்துத் துள்ளிவிளை யாடுகையில்
ஓசை மிகவாக உள்ளந்தான் துள்ளியதால்
அன்றுமுதல் ஆடுகிறான் ஆடுகிறான் அம்பலத்தே
நின்றுநடம் ஆடுகிறான் நேரில்லாக் கூத்தே
குரவை துணங்கை கொடுகொட்டி என்று
பரவிவர நாளும் பலவகையில் கண்டுநின்றான்"[82]

என்று நடனக்கலை குறித்து முடியரசன் பாடியுள்ளார். இன்று பதினொரு வகை ஆடல் வகைகள் ஆடப்பெறுகின்றன என்னும் செய்தியையும் இதன் மூலம் குறித்துச் சென்றுள்ளார்.

**நெய்தற்கலை**

தமிழ்நாட்டுத் தொழில்களுள் முக்கியமானது நெய்தல் தொழிலாகும். சங்க காலத்தில் தமிழர் நெய்த ஆடை, அறுவை எனவும், கலிங்கம் எனவும் பெயர் பெற்றிருந்தது.

'புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு'[83]

எனவும்,

'அரவுரியன்ன அறுவை'[84]

எனவும் அமையும் அடிகள் வாயிலாக அறுவை, கலிங்கம் என்ற பெயர்கள் வழங்கி வந்தன என்பதை அறியவியலுகிறது. இத்தகைய நெய்தல்கலை பற்றி,

"பாலாவி என்றிந்தப் பாரோர் புகழ்ந்தேத்த
நூலாலே ஆடை நொடியிற் படைத்திருந்தோம்
பாவோ டிழையோடப் பஞ்சாலும் பட்டாலும்
ஓவா துழைத்தே உயர்ந்த கலைகண்டோம்
நெய்தற் கலையாவும் நெய்தல் உரிப்பொருளாய்
எய்தாமல் இன்றும் இயக்கி வருகின்றோம்"[85]

என்று முடியரசன் பாடிச் சிறப்பித்துள்ளார்

**தொகுப்புரை**

முடியரசனின் கவிதைத் தொகுதிகளுள் ஐந்தில் தமிழ் வாழ்த்தும், இரண்டனுள் தமிழ் வணக்கமும், இரண்டனுள் தமிழ்த்தாய் வாழ்த்தும் இடம்பெற்றுள்ளன என்பது ஆய்வில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. முடியரசனின் இந்தி உள்ளிட்ட பிறமொழி ஆதிக்க எதிர்ப்புணர்வு குறித்து மதிப்பிடப்பெற்றுள்ளது.

தனித்தியங்க வல்லது தமிழ், செம்மையானது தமிழ், காலத்தால் மூத்தது தமிழ் உள்ளிட்ட தமிழின் சிறப்பியல்புகளைப் படைப்பாசிரியர் புலப்படுத்தியுள்ளமை கருதத்தக்கது. உயர்நிலை எய்தியிருந்த தமிழின வரலாறும், சரிவுநிலை கண்ட தமிழின வீழ்ச்சியும் குறித்து ஆசிரியர் பதிவு செய்துள்ளமை போற்றுதற்குரியது. தமிழ் மொழிக்காகத் தன் உயிரையும் தருவேன் என்றும், அதற்கான போராட்டத்தில் தான் முதல் ஆளாக நிற்பேன் என்றும் ஆய்வுமேற்கொண்ட படைப்புகளில் தமிழ்ப்பற்றினை வெளிப்படுத்திய ஆசிரியரின் தமிழ்ப்பற்று எண்ணுதற்குரியது.

பன்னாட்டுக் கருத்தரங்கம் நடத்துதல், கலைச் சொல் உருவாக்கம் செய்தல், திருமணச் சடங்கு, கோயில் வழிபாடு ஆகியவற்றிலும் தமிழை முன்னிலைப்படுத்துதல், பிற மாநிலங்களிலும் தமிழை வளர்த்தெடுத்தல், பிறமொழிக் கலைகளைத் தமிழுக்குக்

கொணருதல் முதலான தமிழ் வளர்ச்சிக்கான சிந்தனைகள் ஆய்வு மேற்கொண்ட படைப்புகளின் வழியே வெளிக்கொணரப்பட்டுள்ளன.

கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, நடனக்கலை, நெய்தற்கலை முதலான தமிழ்நாட்டுக் கலைகள் குறித்த ஆசிரியரின் பதிவுகள் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம

1. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப.118
2. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -3, ப.132
3. முடியரசன், கவியரசரமுடியரசன் படைப்புகள் -1, ப.199
4. முடியரசன் கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.7
5. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப. 7
6. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப.5
7. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.121
8. முடியரசன் பூங் ப. 15
9. ஆ.பழநி, தினமணி, நாள் 05.12.1998, ப.7
10. முடியரசன், பூங் 28: 86-87
11. மேலது, பூங் 28: 224-227
12. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-5, முன்னுரை, பக்.5-6
13. மேலது ப.15
14. மேலது ப.19
15. மேலது ப.27
16. மேலது ப.31
17. மேலது ப.51
18. மேலது ப.38
19. ச.முருகேசன், செவ்வியல் இலக்கியச் செந்நெறி, ப.15
20. இரா.இளங்குமரன், பாவாணர் வரலாறு, ப.212
21. பாரதியார், பாரதியார் பாடல்கள் ஆய்வுப்பதிப்பு, ப.527
22. பாரதிதாசன், பாரதிதாசன் பாடல்கள், ப. 81
23. முடியரசன், பூங் 1:76
24. முடியரசன், பூங் 28:111-114
25. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.54
26. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள்-3, ப.184
27. முடியரசன் கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப.95
28. மேலது ப.98
29. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப.45
30. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, பக்.8-10
31. ச.முருகேசன், தமிழ்: நாடு, இனம், மொழி, சங்கம - ஒரு வரலாற்றுப் பார்வை, பக்-5-6

32. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப.57

33. மேலது பக்.135-136

34. பாரதிதாசன், பாரதிதாசன் பாடல்கள், ப.91

35. முடியரசன் கவியரசன் முடியரசன் படைப்புகள் - 5, பக்.136-137

36.முடியரசன் கவியரசர் முடியரசன் படைப்புகள்-5, ப.172

37.முடியரசன் கவியரசன் முடியரசன் படைப்புகள் - 3, ப.210

38.மேலது ப.10

39.பாரதிதாசன், பாரதிதாசன் பாடல்கள், ப.238

40.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப.93

41.தமிழண்ணல், முடியரசன் படைப்புகள், ப- 6

42.முடியரசன், கவியரசன் முடியரசன் படைப்புகள் - 5, ப.104

43.முடியரசன், பூங் 17: 21 -23

44.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -3, ப.161

45.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, பக்.214-215

46.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப.112

47.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப.121

48.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப.26

49.மேலது., ப. 27

50.மேலது., ப. 30

51.மேலது., ப. 32

52.மேலது., ப. 33

53.மேலது., ப. 23

54.Winchester, Some Principles of literary Criticism, P.235

55.மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.361

56.முடியரசன் பூங்: 11:60 – 63

57.மேலது .,  11:137 – 138

58.மேலது 14:88-92

59.மேலது.,  29:5-9

60.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப.133

61.மேலது., ப. 133

62.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2 ப. 10

63.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 199

64.மேலது., ப. 200

65.மேலது.,  ப.264

66.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப.76

67.மேலது.,  ப. 76

68.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப.7

69.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப.104

70.பாரதிதாசன், பாரதிதாசன் பாடல்கள், ப.390

71.முடியரசன் பூங்: 20:107 – 119

72.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப.144

73.சீனி வேங்கடசாமி, நுண்கலைகள்,  ப.3

74.திவாகரநிகண்டு, ப.12

75. முடியரசன், கவியரசன் முடியரசன் படைப்புகள் - 3,  ப.143

76.மேலது.,  ப.143

77.மேலது.,  ப. 143

78.மேலது.,  ப. 144

79.முடியரசன் பூங்: 20: 80-88

80.சீனி வேங்கடசாமி, நுண்கலைகள்,  ப.3

81.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப.146

82.மேலது.,  ப. 146

83.நற்றிணை, 90:4

84.பொருநாற்றுப்படை, 82

85.முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப.147

# இயல் - 4

# முடியரசன் கவிதைகளில் சமுதாயப்பார்வை

**முன்னுரை**

சமுதாயப் பார்வையில் திராவிட இயக்கத்தாரின் பணி முதற்கண் வைத்து எண்ணத்தக்கது. ஈ.வெ.ரா பெரியார் தம் இயக்கக் கோட்பாட்டின் மூலம் மூடநம்பிக்கைகளையும் சமுதாயக் கொடுமைகளையும் கடுமையாகச் சாடினார்.

அண்ணாவின் படைப்புகளும், அவருடைய காலத்தில் அதே உணர்வுடைய பாரதிதாசன் கவிதைகளும் சமுதாயச் சிந்தனைகளையே பெரிதும் முன்வைத்தன. இத்தகைய உணர்வோடு இலக்கியம் படைத்தவர்கள் இக்கால இலக்கிய வகைகள் அனைத்திலும் சமுதாயச் சிந்தனையை மேலோங்கச் செய்தனர். அவற்றுள் தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிந்தனை பெரிதும் இடம் பெற்றது எனலாம். அந்தவகையில் முடியரசன் கவிதைகளில் இத்தகைய சமுதாயச் சிந்தனைகளை வெளிப்படுத்தும் சமுதாயப்பார்வை அமைந்துள்ள பாங்கினைக் கண்டறிவதே இவ்வியலின் நோக்கமாகிறது.

**இலக்கியமும் சமுதாயமும்**

ஓர் இலக்கியம், தான் தோன்றிய காலத்தையும், சமுதாயத்தையும் படம் பிடித்துக் காட்டுவதால், இலக்கியமும் சமுதாயமும் ஒன்றையொன்று சார்ந்து விளங்கும் தன்மை உடையனவாய் அமைகின்றன.

> "சமுதாயத்தின் விளைபொருளே இலக்கியம், இலக்கியம் சமுதாயத்தையும், சமுதாயம் இலக்கியத்தையும் ஒன்றை ஒன்று சார்ந்தே வளர்ந்து வந்துள்ளன. சமுதாயத்தைச் சார்ந்த படைப்பாளி, தான் வாழும் இடத்தைச் சுற்றியே தன்னுடைய எண்ணங்களைப் படரவிட்டுக் கொண்டிருப்பான். இதனால் சமுதாய அவலங்கள் எளிதில் அவனது மனத்தைக் கவ்விக் கொள்கின்றன"[1]

என்னும் கருத்து ஈண்டுக் குறிக்கத்தக்கது. இதன்படி, சமுதாயத்தோடு இரண்டறக் கலந்துள்ள இலக்கியம், மக்களுக்குப் பயனளிக்கக்கூடியதாகவும் விளங்குகிறது. 'இலக்கியம் ஒரு சமூக அறிவு கற்பிக்கும் ஏற்பாடாகும் (Social institution). அது அதன் கருவியாக மொழியைப் பயன்படுத்துகிறது. அது ஒரு சமூகப் படைப்பாகும் (a social creation). இலக்கியம் வாழ்க்கையைக் குறியீடாகச் சுட்டுகிறது; வாழ்க்கை அநேகமாக ஒரு சமூக உண்மை (a social reality) யாகும்'[2] என்னும் கூற்றும் இங்குக் கருதத்தக்கது. இதனாலேயே இலக்கியங்களில் சமுதாயச் செய்திகள் அதிகமாக இடம்பெறுகின்றன.

> "சமுதாயத்தின் பிரதிநிதியாகக் கவிஞன் நின்று, தான் வாழும் சமுதாயச் சூழல் பிரதிபலிக்கும் வண்ணம் இலக்கியம் இயற்றலால் படைப்பிலக்கியங்களில் சமுதாயச் செய்திகள் அமைய வாய்ப்பு மிகுதி"[3]

என்னும் கருத்து சிந்தித்தற்குரியது. இலக்கியமும் சமுதாயமும் ஒன்றையொன்று சார்ந்தது என்னும் கருத்துச் சிந்தித்தற்குரியது. இலக்கியமும் சமுதாயமும் ஒன்றையொன்று சார்ந்து வளர்வதோடு, ஒன்றுக்கொன்று பயன் தருவதாகவும் அமைந்துள்ளன. 'சமூகக் காரணங்களால் இலக்கியம் உருவாகிறது. அது மட்டும் அன்று; சமூதாய விளைவுகளையும் உருவாக்கக் காரணமாக அமைகின்றது'[4] என்னும் வில்பர் ஸ்காட்டின் கருத்தும் இங்கு நினைவு கூரத்தக்கதாகிறது.

நிலத்தின் தன்மையை அதனிடம் தோன்றிப் பயிர் முளைகாட்டும். நிலத்திற் கிடந்தமை கால் காட்டும் என்றார் வள்ளுவர். சமுதாயத்தின் தன்மையை அதனிடத்துத் தோன்றிய இலக்கியங்கள் காட்டும். சமுதாயத்தின் தன்மை காலநிலைக்கு ஏற்ப மாறுபடும். இவ்வாறு காலந்தோறும் மாறுபட்டு வரும் தன்மையையும் அவ்வக் காலத்துத் தோன்றிய இலக்கியங்கள் காட்டவல்லன. சமுதாயமும் இலக்கியமும் ஒன்றையொன்று தாக்கிப் புதுப்பயன் விளைவித்தலும் உண்டு. இங்ஙனமுள்ள தொடர்பினை நன்கு உணர்ந்தோராயின், நாட்டின் சரித்திரமும், இலக்கிய சரித்திரமும் பெரிதும் விளக்கம் எய்தும் என்றார் வையாபுரிப்பிள்ளை[5] என்னும் கூற்றின்படி காலமாறுதலுக்கேற்றவாறு சமுதாயத்தை ஏடுத்துக்காட்டும் தன்மை வாய்ந்தது இலக்கியம் என்பதை அறியமுடிகிறது.

ஓர் இலக்கியப் படைப்பாளன் சமுதாயச் சிந்தனையோடு தன் படைப்பை வெளியிடுகிற போது, அதில் அப்படைப்பாளனது சமுதாய உணர்வும் வெளிப்படும்.

> "குறிக்கோள் நிலைச் சமுதாயம் இது என வரையறை செய்யவும் அவ்வரையறையின் வண்ணம் அத்தகைய சமுதாயத்தை அமைக்கவும் வழிவகை செய்வது சமுதாய உணர்வு"[6]

என்னும் கூற்று சமுதாய உணர்விற்கான விளக்கமாக அமைகிறது. சமுதாயம் எப்படி அமைந்தால் சிறப்பாக இருக்கும் என்பதற்கேற்ற நெறிமுறைகளைச் சுட்டுவது சமுதாய உணர்வு என்பதை அறியமுடிகிறது. ஒரு படைப்பாளனிடம் இந்தகைய சமுதாய உணர்வு சமுதாயத்தை விமர்சிக்கவும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தவும் பயன்படுகிறது. இங்ஙனம் அமையும் படைப்புகளில் சமுதாயப்பார்வை மேலோங்கி நிற்கிறது.

**சமுதாயப்பார்வை**

சமுதாயத்தைக் குறித்துச் சிந்தித்து அதன் சீர்கேடுகளைச் சுட்டிக்காட்டிச் சீர்திருத்தும் எண்ணத்தோடு படைப்புகளைப் படைப்பதையே சமுதாயப் பார்வை எனக் குறிக்கின்றனர்.

> “படைப்புகளில் காணப்படும் சமூகம் குறித்த சிந்தனைகளை வெளிக்காட்டுவதே சமுதாயப்பார்வையாகும்”[7]

என்னும் கருத்து, சமுதாயப்பார்வையின் விளக்கமாக அமைகிறது.

> “சமுதாயப்பார்வை என்பது உண்மையை துக்குவதோ மறைப்பதோ அல்ல. உண்மையை ஆராய்வது – ஆத்மாவால் அனுபவிப்பது.”[8]

என்று ஜெயகாந்தன் குறிப்பிட்டுள்ள கருத்தும் இங்குக் குறிக்கத்தக்கது. இவ்வகையில் அமையும் முடியரசன் கவிதைகளின் சமுதாயப்பார்வை ஈண்டுச் சுட்டத்தக்கது.

படைப்பாசிரியனைச் சுற்றியுள்ள வாழ்க்கையிலிருந்து கிடைக்கும் ஏதேனும் ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்படும் கவிதைகள், சமுதாய நோக்கங் கொண்டதாகவே அமைகின்றன. இத்தகைய கவிதைகளில் சமூகக் கொடுமைகள், சமூகத் துன்பங்கள் ஆகியவை வெளிப்படுகின்றன. ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முடியரசன் கவிதைகளில் சாதிப்பாகுபாடு என்னும் சமுதாயச் சிக்கல் பெரிதும் அலசப்பட்டுள்ளது.

**சாதிப்பாகுபாடு**

இன்றைய சமுதாயத்தில் ‘சாதிப்பாகுபாடு’ என்பது ஒரு பெரிய நோய்க்கிருமியாகப் பரவியுள்ளது.

> “இந்திய சமூகக் கட்டமைப்பில் சாதி அடிப்படை மேலாதிக்கம் செலுத்துகிறது. ஏறுமுக வரிசையில் உள்ள மேற்சாதி, கீழுள்ள சாதியினரை ஒடுக்கி ஆதிக்கம் செலுத்துவது காலங்காலமாக உள்ளது”[9]

என்னும் கருத்து, ஒரு சாதியினர் மற்றொரு சாதியினர் மீது ஆதிக்கம் செலுத்தி வருவதைக் கோடிட்டுக்காட்டுகிறது.

சாதியின் தேற்றங்குறித்து ஆராய்ந்த சமூகவியலார், அதற்கான வரையறை ஒன்றை வகுத்துள்ளார்

> “சாதி என்பது இரண்டு தனிப்பண்புகளைக் கொண்ட ஒரு சமூகக்குழு. ஒன்று, சாதியின் உறுப்பினராகும் தகுதி, அந்தச் சாதியில் பிறந்தவருக்கும் பிறக்க இருக்கின்றவருக்கும் மட்டுமே வரையறுக்கப்பட்டுள்ளது. இரண்டாவது, ஒரு சாதியின்

> உறுப்பினர்கள் அந்தச் சாதிக்கு வெளியே திருமணம் செய்ய முடியாதவாறு சமூகக் கட்டுப்பாடுகளால் பிணைக்கப்பட்டுள்ளனர் என்று சாதிக்கு வரைவிலக்கணம் வகுத்துள்ளார் கேட்கர் என்ற சமூகவியலறிஞர்."[10]

இக்கூற்றிற்கேற்ப, ஒரு சாதியைச் சார்ந்தோர் மற்றொரு சாதியில் திருமணம் செய்ய இயலாதபடி சமூகக் கட்டுப்பாடு நிலவிவருவதையே காணமுடிகின்றது. சாதிப்பாகுபாடு நீடிப்பதற்கு வேலைப்பிரிவினையும் ஒரு காரணமாக அமைகிறது.

> "மிகச்சொற்பமான சுயதேவைகளைப் பூர்த்தி செய்வதற்கேற்ப அமைந்திருந்ததே கிராமிய சமுதாய அமைப்பு முறை. இச்சமுதாயம், தன் உற்பத்தியைக் கொண்டு சென்று வெளிநாடுகளில் வணிகம் செய்து தனக்குத் தேவையான தங்கம் முதலான பொருள்களை இறக்குமதி செய்தது. வெளிநாட்டிலிருந்து உணவு, உடை ஆகியவற்றை இறக்குமதி செய்யும் அவசியமேற்படவில்லை. எனவே, இச்சமுதாய அமைப்பு, ஆரம்பகாலத் தொழில்களில் ஈடுபட்டவர்களைச் சாதிகளாக மாற்றி வேற்றுமையை உருவாக்கியது"[11]

என்னும் கூற்று இதனை நிறுவுவதாக அமைகிறது.

பல்லாண்டுகளாக நிலவி வரும் சாதிப்பாகுபாடு இன்று வரை சொல்லொணாத் துன்பத்தை ஏற்படுத்தி வருகிறது. இதனைச் சரியான கோணத்தில் அணுகித் தீர்வுகாண முயலாவிட்டால், விளைவு இன்னும் மோசமாக இருக்கும் என்றே மானிடவியலறிஞர்கள் கணித்துள்ளனர்.

> "சமுதாய ஆதாயம் தேடி வேதகாலத்தில் பிராமணர்கள் ஏற்படுத்திய சாதிமுறை, இன்றைய சூழலில் ஏற்படுத்தும் விளைவுகளை உரிய முறையில் அணுகாவிட்டால், 'சாதி என்னும் மாயக் கருத்தே இந்தியாவில் மிகக் கொடிய நம்பிக்கையாகிக் (Indias most dangerous myth; the fallacy of caste) கடும் விளைவுகள் ஏற்படும் என்றார் மானிடவியலறிஞர் ஆஸ்லி மாண்டகு."[12]

எனவே, முறையான தீர்வு காணாவிட்டால், ஒட்டுமொத்த சமுதாயத்தையும் இச்சிக்கல் அரித்து அழித்துவிடும் என்பதே இன்றைய இந்தியச் சமுதாயத்தின் நிலை.

இந்திய அளவிலும், தமிழ்நாட்டிலும் பல தலைவர்களும், படைப்பாளர்களும் இச்சிக்கல் குறித்துப் பேசியும் எழுதியும் வந்துள்ளனர்.

> "நம்நாட்டில் மலர்ந்த சீர்திருத்த இயக்க நடவடிக்கையில் குறிப்பிடத்தக்கது சாதி, மத எதிர்ப்பு ஆகிறது. அதற்குக் காரணமானவர் பெரியாரும் அவர் இயக்கத்தினருமே எனல் மிகையாகாது"[13]

என்னும் கருத்து, நம்நாட்டின் சாதி ஒழிப்பு நடவடிக்கைகளைப் பறைசாற்றுவதாக அமைகிறது. தீண்டாமையை அறவே நீக்கச் சட்டமும் இயற்றப்பட்டுள்ளது. தற்போது இலக்கியங்களிலும் பலர், சாதிப்பிரிவினைக்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்துவருகின்றனர். இக்கருத்தினை அரண் செய்யும் வகையில்,

> "சமுதாயத்தில் சாதிகள் தோன்றி வளர்ந்து மனிதர்களிடைய பிரிவினைகளை வளர்த்தன. சமுதாய முன்னேற்றத்திற்கு அச்சாதிப்பிபிரிவுகளே தடையாக இருத்தலைக் கண்ணுற்ற சான்றோர் பலர் அதற்கு எதிர்ப்பினைத் தங்கள் இலக்கியங்களில் வெளிப்படுத்தி வந்துள்ளனர்"[14]

என்னும் கூற்று அமைகிறது. சான்றாக மறைமலையடிகள், கோகிலாம்பாள் கடிதங்கள் என்ற புதினத்தில் காட்டும் எதிர்ப்புணர்வைக் குறிப்பிடலாம்.

> "மற்றச் சாதியார் சிறிது நேரம் ஒதுங்குவதற்குத் தம் வீட்டு ஒட்டுத் திண்ணையண்டை வந்தால் நம்மவர்கள் தமது வீடு தீட்டுப்பட்டுப்போகும் என்று அவர்களை துரத்துகிறார்கள் அல்லது தெரியாமல் உட்கார்ந்திருந்து எழுந்து போனார்களால் அவர்களிருந்தவிடத்திற் சாணிகரைத்துத் தெளிக்கின்றார்கள். மாட்டுச் சாணியிலும் ஆறறிவுடைய மனிதன் தாழ்ந்தா போயினான்."[(5)]

இத்தகைய சாதிய எதிர்ப்புணர்வு ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள கவிதைகளிலும் காணப்படுகிறது.

பண்டைத் தமிழர்கள் 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்பதையே கோட்பாடாகக் கொண்டிருந்தனர். சங்ககாலத் தமிழகத்தில் சாதிப்பிரிவினைகள் இருந்தாலும் பூசலின்றி ஒருவரையொருவர் மதித்து, ஒருமைப்பாட்டுப் பண்புடன் விளங்கினர் என்பதை அறியமுடிகின்றது. இதனை முடியரசன் தம் கவிதையில்,

"சாதி சமயச் சழக்குகள் இல்லை

சகலரும் உறவினர் என்பதோர் சொல்லை

ஓதிய அறநூல் சங்கத்துச் செல்வம்

உயிரெனக் காப்பதால் பகையைநாம் வெல்வம்"[16]

என்று பதிவு செய்துள்ளதும் குறிக்கத்தக்கது, மேலும்,

"சாதி என்றொரு சொல்லினைச் சாற்றினீா்

ஆதியில் நம்மிடம் அச்சொல் இருந்ததோ?

பாதியில் புகுந்தது பாழ்படும் அதுதான்

தொழிலாற் பெறுபெயர் இழிவாய் முடிந்தது

அழியும் நாள்தான் அணிமையில் உள்ளது

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குமென் றோதிய

திருக்குறள் உண்மைநும் செவிப்புக விலையோ?"[17]

என்று வினவுவதும், ஈண்டு இணைத்து நோக்கத்தக்கது. ஆதியிலே சாதிச்சண்டை இல்லாதிருந்த தமிழ்ச் சமுதாயத்தில் பின்னர் சாதிச் சண்டைகள் தோன்றின. முடியரசன் பள்ளியாசிரியராகப் பணிபுரிந்தவரென்பதால், மாணவ சமுதாயத்தை நெறிப்படுத்தும் வகையில் பாடிய கவிதையொன்றில்,

"சாதிச் சழக்குகளும் - பொய்மைச்

சாத்திரக் குப்பைகளும்

மோதிப் பகைக் குணத்தால் - சண்டை

மூண்டு மலிந்ததுவே"[18]

எனக் குறிப்பிட்டுச் செல்வதில், சாதிப்பாகுபாடு புலனாகிறது.

"நூறு நூறு சாதிகள் - இங்கு

நுவலுங் கோடி வீதிகள்

வேறு வேறு நீதிகள் - சொல்லி

வேத மென்றும் ஓதினாய்"[19]

என்றும்,

“சமயம் சாதிப் பிளவுகளால்
சண்டை ஒன்றே வளர்வதனால்
இமயம் குமரி இடைவெளியில்
எங்கும் பண்பே தளர்கிறது”[20]

என்றும் பாடியிருப்பதன் வாயிலாகச் சாதிப்பாகுபாட்டின் விளைவுகளை அறியமுடிகின்றது.

சாதிப்பூசல் காரணமாக மக்கள் மோதிக்கொண்டிருக்கும் நிலையையும், அதனால் ஏற்பட்ட பிரிவினை நிலையையும்,

“சாதிக்குச் சாதியிங்கு மோதிக் கொண்
டழிகின்றசேதி யுண்டு
வீதிக்கு வீதியிங்குப் போதிக்கும்
பள்ளிக்குஞ் சாதி யுண்டு
வாதிக்க வாயில்லை, வாழ்விக்க
வழியில்லை, வாழ்ந்த நம்மைப்
பாதிக்கும் நிலையுண்டு பாழ்பட்ட
பிரிவுண்டு பாராய் தம்பி![21]

என்று குறிப்பிட்டுச் செல்கிறார். கல்வி பயிலும் மாணவரிடையே ஏற்பட்ட சாதிச் சண்டையால் கல்விக்கூடம் மூடப்பட்ட செய்தி அறிந்து,

“சாதியின் பேரைச் சொல்லிச்
சார்ந்திடுங் கட்சி சொல்லி
ஓதிடுங் கல்வி கற்போர்
உறுபகை கொண்டோ ராகி
மோதினர் என்ப தாலே
மூடினர் கல்விக் கூடம்

காதிலச் செய்தி வந்து

கனலெனப் பாய்ந்த தம்மா![22]

எனப் பாடியுள்ளார். மேலும் சாதிப்பாகுபாடு பாராட்டியதால் சமுதாயம் சீர்கெட்டுப் போயிருப்பதை,

"சாதிமதம் வேர்விட்டுக் கூடி நின்ற

சமுதாயம் சீர்கெட்டுப் பிளவு பட்டு

மோதிவரும் பகையுற்றுத் தாழ்வும் உற்று

முன்னேறும் நெறிகெட்டு, விடியும் பட்டு

மேதியனும் கீழாகி, உணர்வு கெட்டு

மேலான மதிகெட்டு, மானம் விட்டு

மேதியினில் அடிமைஎன உரிமை கெட்டு

மெய்சுமந்து மாந்தரென வாழ்ந்து வந்தோம்"[23]

என்றும் பாடிச் சென்றுள்ளார். ஆகையாலே இல்லாத பழக்கத்தைக் கைக்கொண்டதாக ஏற்பட்ட விளைவுதனை,

"சாதியானால் தாழ்வுயர்வு பேசிப் பேசிச்

சாத்திரத்தை வேதத்தைச் சான்று காட்டிப்

பாதியில்நாம் படுகுழியில் வீழ்ந்து விட்டோம்;

பறையனென்றும் குறவனென்றும் பார்ப்பான் என்றும்

ஆதியிலே இல்லாத பழக்கந் தன்னை

அணுகவிட்டோம்: அடிமையுற்றோம் மிடிமைப் பட்டோம்"[24]

என்னும் கவிதையில் படம் பிடித்துக் காட்டியுள்ளார். இவை சாதிப்பாகுபாடுகளால் சமுதாயத்தில் ஏற்பட்டுள்ள நலிவுகளைச் சுட்டிக்காட்டுவனவாக அமைகின்றன.

சாதி ஒழிய வேண்டுமென்று கூறுவோரின் சொல்லும் செயலும் முரண்பாடாக இருத்தலையும் முடியரசன் பதிவுசெய்யத் தவறவில்லை. சான்றுகளாகச் சில கவிதைகளைச் சுட்டலாம்.

"ஒன்றாக நாமிணைந்தால் ஊறுசெயும்

பகைமையெலாம் ஒழிந்தே போகும்:
நன்றாக எண்ணிப்பார்: நாலாயி
ரஞ்சாதி நமக்குள் வைத்தோம்
ஒன்றாரும் புகுந்துவிட ஓட்டைகளை
அமைத்துவிட்டோம்: உட்பு குந்தோர்
வென்றாள வழிசமைத்தோம்: வெறுங் கூச்சல்
போடுகிறோம்: விடியல் காணோம்"[25]

என்னும் கவிதை சாதியொழிப்பிற்காக வெறுங்கூச்சல் போடுவோரின் செயல் முரண்பாடாக இருப்பதைத் தோலுரித்துக்காட்டுகிறது. சாதி ஒழிய வேண்டுமென்று கூறும் அரசியல்வாதிகள், தேர்தல் நேரத்தில் சாதி அடிப்படையில் செயல்படும் முரண்பாட்டையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

"சாதியின் பேராலே வீதிகள் வைத்தாய்
சங்கங்கள் ஒவ்வொரு சாதிக்கும் வைத்தாய்
ஓதிடும் பள்ளியில் ஒட்டியே வைத்தாய்
உண்மையில் தேர்தலில் ஓங்கிட வைத்தாய்"[26]

என்று பாடியிருப்பதன் வாயிலாகத் தேர்தலிலும் பள்ளியிலும் சாதி ஆதிக்கஞ் செலுத்துவதை அறியவியலுகிறது. சாதி ஒழிப்பில் உண்மையான அக்கறை காட்டாத அரசியல்வாதியால் நாடு முன்னேறாது என்பதனையும்,

"சாதி ஒழிப்பதெனச் சாற்றிவிட்டுத் தேர்தலுக்குத்
தேதி வரும்போது சாதிக்குக் காப்பளிப்போர்,
கூடி அரசியலைக் கொண்டு நடத்துவரேல்
நாடிங் குருப்படுமோ நன்கு?[27]

எனச் சுட்டிக்காட்டும் முடியரசன், சொல்லும் செயலும் முரண்பாடாக இயங்கிவரும் மக்களின் நிலை குறித்து,

"எவன்விட்டான் சாதியினை? எவன் செய்தான்
கலப்புமனம் எவனோ எங்கோ

தவறிவிட்டான் செய்துவிட்டான் தவிக்கின்றான்

மற்றவனோ சாதி தன்னைச்

சுவர்வைத்துக் காக்கிறான் சொல்வீரங்

காட்டுகிறான் துணிய வில்லை"[28]

என்ற பாடுவதில் இன்றைய நடப்பியல் தன்மை பளிச்சிடுகிறதெனலாம். சாதிமறுப்பை முன்வைத்துப் பாடிய பாரதி, சாதியத்தைக் கடந்து வந்த இராமலிங்கர் ஆகியோருக்குப் பின்னும் சாதியம் தலைதூக்கியிருப்பதை,

"சாதிகளே இல்லையடி பாப்பா நம்முள்

தாழ்வுயர்வு சொல்லுதலே பாவம் என்றே

ஓதியஓர் பாரதியும் செத்து விட்டான்

உட்புகுந்த சாதிகளோ சாக வில்லை"[29]

என்றும்,

"சாதி எனச் சமயமென முளைத்து வந்த

சழக்குளைவிட்டுவிட்டேன்' என்று கூறி

மேதினியில் மறுமலர்ச்சி காண வந்த

மேன்மைமிகும் இராமலிங்கர் அருட்பா நூலை

ஓதிவரும் தொண்டருக்குப் பஞ்ச மில்லை

சழக்குகளை ஒழிக்கத்தான் நெஞ்ச மில்லை"[30]

என்றும் பாடியிருப்பதில் நடப்பியல் வெளிப்படுகிறது.

படைப்பாசிரியர் முடியரசன் திராவிட இயக்கச் சிந்தனையாளரென்பதால் அவர் கவிதையில் சாதியொழிப்பு உத்வேகம் பெறுகிறது. சாதியொழிப்பிற்காகச் சமுதாயத்திற்குப் பலவாறு அறிவுரை பகர்ந்துள்ளார்.

"சாதியினால் மதப் போதையினால் மறைச்

சூத்திரத்தால் மன ஆத்திரத்தால் இந்த

மேதினிமேல் பகை கொள்ளாதே"[31]

என்றும்,

“அன்புடன் ஒற்றுமை வேண்டும் - சாதி
அகம்பாவத் தீமையை அகற்றிடல் வேண்டும்”[32]

எனவும், தனிமனிதனுக்கு அறிவுரை கூறிய முடியரசன்,

“சாதிப்போர் வேண்டுமலால் சாதிப்போர்
தேவையிலை சட்டமன்றில்”[33]

என்று அரசியல்வாதிகளுக்கும் அறிவுரை கூறிச் சென்றுள்ளார். சாதியெதிர்ப்பில் முனைப்பாய் நின்று போராடிய தந்தை பெரியார் குறித்துப் பாடுகிற போது,

“சாதியினால் சமயத்தாற் பிளவு பட்டுத்
தடுமாறித் தாழ்வுற்று மக்கள் தம்முன்
மோதுண்டு போகாமல் தடுத்துக் காத்தான்
முன்பில்லாத் தீப்பழக்கம் வேண்டா என்றான்”[34]

எனக் குறிப்பிட்ட முடியரசன்,

“தீண்டாமை பின்னின் றிழுக்கும் - மாந்தர்
தெருவுக்குள் நடமாட முடியாத வைக்கம்
ஆண்டோடி நேராகச் சென்றார் - சாதி
ஆணவப் போருக்குள் போராடி வென்றார்”[35]

என்று சாதியொழிப்பால் பெரியார் வெற்றி பெற்றதையும் பதிவு செய்துள்ளார்.

சாதிப்பூசல் தவிர்த்து அனைவரும் ஓர்குலமாய் வாழவேண்டும் என்ற எதிர்பார்ப்பையும் முடியரசன் பல கவிதைகளில் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்.

“வேக்காடு சாதிக்கு வைக்கும் நாளே
வியனுலகப் புகழ்நமக்குக் கிட்டும் நாளாம்”[36]

எனவும்,

“தாழுங் குமுகாயம் சாதிச் சழக்ககற்றி

வாழும் நாள் எந்நாள் வரும்?"[37]

என்றும் பாடிச் சாதியொழிந்த சமத்துவச் சமுதாயத்தைக் காண விழைந்த முடியரசன்,

"ஒரு கடவுள் ஒரு சாதி என்ற பாங்கில்
ஓரினமாய் அயலவரும் உறவாய் நண்பாய்ப்
பெருமையுடன் தமிழ்மொழியை நாட்டைப் பேணிப்
பீடுபெற வாழ்வதுவே தமிழ வாழ்வு"[38]

என்றும் பாடி, தமிழ்ச் சமுதாய வாழ்வு எப்படி அமைய வேண்டுமென்ற தன் எதிர்ப்பார்ப்பைக் குறிப்பிட்டுள்ளார். சாதிப்பாகுபாடு குறித்து நடப்பியலையும், எதிர்பார்ப்பையும், பதிவு செய்த முடியரசன் சமுதாயத்திற்கு அறிவுரையும் கூறியுள்ளார்.

"சமுதாயத்தில் அங்காங்கே இலைமறை காய்களாக நிலவி வருகின்ற சீர்கேடுகளையும் அவலங்களையும் அநியாயங்களையும் அநீதிகளையும் சித்திரித்துக்காட்ட முனையும் சிந்தனைச் சிற்பிகள் மேற்கண்ட குறைகள் களைந்தெறியப்பட்டுச் சீர்திருத்தம் பெறுவதற்கான நல்ல வழியையும் காட்டத் தவறிவிடக் கூடாது. ஆக்கப்பாடுடைய எழுத்துக்கள் தாம் சமூகத்தை வாழ வைகக முடியும்!"[39]

என்னும் கருத்தின் மூலம் சமுதாயத்தின் சீர்கேட்டையும் அதனைப் போக்கிச் சீர்திருத்த சமுதாயம் அமைவதற்கான நெறிமுறைகளையும் சுட்டிக்காட்டும் படைப்புகளே சமுதாயத்திற்குப் பயன்படும் என்பது தெளிவாகப் புலனாகிறது. இந்த வகையில் சாதியச் சிக்கலைச் சுட்டிக்காட்டிய முடியரசன் அதற்கான தீர்வினையும் முன்வைத்துள்ளமை சிறப்பாகப் போற்றுதற்குரியது. புறநானூற்றில் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்,

"வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லாருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கண் படுமே"[40]

என்று பாடியிருப்பது சாதியொழிப்புச் சீர்திருத்தக் குரலாகும். பிறப்பால் தாழ்ந்த வகுப்பில் தோன்றிய ஒருவன் கல்வியறிவைப் பெற்றால், அச்சிறப்புக் காரணமாக உயர்ந்த வகுப்பிற்குரிய சமுதாயத் தகுதியை அடையலாம் என்பதே இப்பாடற்பகுதியின் கருத்தாகும். கல்வியின் சிறப்பை வலியுறுத்தும் இப்பாடல் சாதியால் தீர்மானிக்கப்படும்

உயர்வு-தாழ்வு வேறுபாட்டைக் களையக் கல்வி கற்பதே உகந்ததாகும் என்னும் தீர்வை முன் வைத்துள்ளது. இத்தகைய சங்க இலக்கியப் பயிற்சி உடைய முடியரசன் இக்கருத்தை உள்வாங்கிக் கொண்டு, பூங்கொடி காப்பியத்தில், மலையுறை அடிகள் பூங்கொடிக்கு அறிவுரை கூறுவதாகக் காட்சி ஒன்றைப் படைத்துள்ளார். அதில் அடிகள் கல்வியின் பயன்பற்றிக் கூறுவதாக வரும்,

"ஓதிய கல்வி உயர்வினை நல்கும்

சாதியில் உயர்வு தாழ்வுகள் சாயக்கும்

குடிக்குயர் வாக்கும், கொடுமைகள் போக்கும்

பிடித்துள பேதைமைப் பிணியினைத் தொலைக்கும்

அடிமைத் தளைகளை அறுக்கும்"[41]

என்னும் பகுதியில் சாதி வேறுபாடு மறைவதற்குக் கல்வி கற்பதே உரிய தீர்வாகும் என்று சுட்டிச் சென்றுள்ளார். மேலும்,

"மேதினியைப் பாழ்படுத்த வந்த சாதி

மேலுமினி வாழ்வதுதான் என்ன நீதி?

ஓதிவருங் குறளுக்குத் திருநாள் என்றால்

உண்மையில் சாதியினி ஒழிதல் நன்றாம்"[42]

என்று பாடியிருப்பதன் வாயிலாகக் குறள் நெறியில் நடந்தால் சாதியொழியும் என்பதையும் முன்வைத்துள்ளார். சமுதாயத்தில் நிலவும் சாதிப்பாகுபாடு அதன் தீவிரத்தன்மை, அதனால் ஏற்படும் விளைவுகளையும் சுட்டிய முடியரசன், சாதியொழிய வேண்டுமென்று பலரும் பாடிய பின்னரும் இன்னும் சாதிகள் இருந்து கொண்டிருக்கும் சமுதாய முரணையும் எடுத்துக்காட்டி, உரிய தீர்வினையும் முன் வைத்திருப்பது போற்றுதற்குரியது.

சமுதாய முன்னேற்றத்திற்குத் தடையாக விளங்கும் சிக்கல்களில் மதமோதலும் ஒன்றாகக் கருதப்படுகிறது.

**மதமோதல்:**

சமுதாய அமைப்பில் சாதியத்தைப் போலவே மதமும் ஒரு முக்கியக் கூறாகும்.

"இறைவன் என்ற நம்பிக்கையை மையமாய்க் கொண்டு இறைவனுக்கும் மனிதனுக்குமுள்ள உறவு தொடர்பான கருத்துக்கள், நம்பிக்கைகள், உணர்வுகள், வழிபாட்டு

முறைகள், சடங்குகள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றுடன் இயங்குவதே சமயம் என்னும் அமைப்பு என்பர் எஸ்.ஜே.பாஸ்கல் கிஸ்பர்ட் என்னும் சமூகவியலார்."[43]

இக்கூற்று மத அமைப்பின் இயல்பினை விளக்குவதாக அமைகிறது. மதம் மக்களுக்கு அபின் என்று குறிப்பிட்ட காரல் மார்க்ஸ், மதத்தை ஒடுக்கப்பட்டவர்களின் ஏக்கப் பெருமூச்சு என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனையொட்டியே ஈ.வெ.ரா.பெரியார்,

"மதமும் சாத்திரங்களும் மனிதன் அறிவையும் சுதந்திரத்தையும்

ஒழிப்பதற்கென்றே மக்களை மடையர்களாகவும் அடிமைகளாகவும்

ஆக்குவதற்கென்றே ஏற்பட்ட, ஏற்படுத்தப்பட்ட சாதனங்களாகும்"[44]

என்றார். இதன் மூலம் மதம் மக்களுக்கும் நாட்டு நலனுக்கும் எத்தகைய பயன்பாட்டையும் தரவில்லை என்பதை அறியமுடிகிறது.

மக்களைப் பண்படுத்துவதற்காக ஏற்பட்ட மதம் இன்று பல்வேறு சிக்கல்களை உருவாக்கும் காரணியாக அமைந்துவிட்டது.

" ….. ……. ……… கோவி லென்றால்

திருடர்களும் கயவர்களும் மறைந்து கொள்ளத்

தேர்ந்தெடுத்த குகையாகும்; மாக்கள் போல

அறநெறியை அறமறந்தார் வெறியுங் கொண்டார்

அதனைத்தான் மதமென்றும் விளம்பு கின்றார்"[45]

என்னும் பகுதி, மதத்தின் இன்றைய நிலையைப் புலப்படுத்துகிறது. மதத்தைப் பற்றிய தவறான புரிதலே மதமோதல் உருவாவதற்குக் காரணமாகும்.

"மாந்தர் என்னும் உணர்வுகளை

மறந்தே போனோம் மதவெறியில்

நீந்தும் வழியே தெரியவில்லை

நீளும் பகைமை மறையவில்லை"[46]

என்னும் கவிதை மதமோதலைப் படம்பிடித்துக் காட்டுகிறது. மதவெறி காரணமாக ஒருவருக்கொருவர் சண்டையிடுவதால் மனிதம் மறந்து போய்விட்டது என்று கூறும் முடியரசன், பிறிதொரு கவிதையிலும் இக்கருத்தை,

"மதமெனும் பேய்பி டித்தே
மடமையுள் மூழ்கி நின்றான்
கதவினைத் திறந்து வைத்தான்
கண்டவை புகுவ தற்கே:
எதனையும் தழுவிக் கொண்டான்
இவனைத்தான் மறந்தே போனான்"[47]

என்றும் சுட்டிச் செல்வது இங்குக் கருதத்தக்கது. மேலும்,

"சாதிதரும் பிரிவுகளைச் சமயத்தின்
பொய்மைகளைச் சடங்கு தம்மை
ஓதிவருஞ் சழக்கர்களை ஓராது
நம்பியதால் உணர்வி ழந்தான்
பாதிமதி உடையவனாய்ப் பாழ்பட்ட
வாழ்வினனாய்ப் பான்மை கெட்டான்
மேதினியின் மேல்மகன்றான் மேவலராற்
கீழ்மகனாய் வீழ்ந்து விட்டான்"[48]

என வரும் பகுதி, மத நம்பிக்கையால் தன்னிலையிழந்த மனிதனைப் படம் பிடித்துக் காட்டுகிறது. தந்தை பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையே மதமோதலுக்கு உரிய தீர்வாகும். இதனை,

"சமயத்தின் பொய்ம்மைஎலாம் தொகுத்து வைத்துச்

சமுதாயச் சீர்கேட்டைச் சிந்தித் தாய்ந்தே

இமயத்தின் மேல்நின்று மக்கள் முன்னர்

எடுத்துரைத்த வாதங்கள் கொள்கை எல்லாம்

உமியொத்த மனத்தவரைத் தவிர மற்றோர்

உண்மை எனத் தெளிந்ததனால் பகைமை யின்றித்

தமையொத்த ஐயாவின் பக்கம் நின்றார்"[49]

என்னும் கவிதையில் வெளிப்படுத்தியுள்ளார். வள்ளுவர் உலகில் 'கடவுள்' என்பதைக் கூறப்புகுந்த முடியரசன்,

"ஆனைமுகம் ஆறுமுகம் அங்கே யில்லை

ஐந்துமுகம் நான்குமுகம் அங்கே யல்லை

ஏனைமுகத் தெவ்வுருவும் காண வில்லை

இறைவனிவன் எனக்காட்டும் சிலைகளில்லை

கூனையுறு பிறையில்லை தொப்பி யில்லை

குணக்குன்றை அறைந்தெடுத்த சிலுவை யில்லை

தானைகொளும் கொலைக்கருவி ஒன்று மில்லை

தனியுலகம் அவ்வுலகம் என்றேன்"[50]

என்று குறிப்பிடுவதன் மூலம் மதவேறுபாடற்ற சமுதாயத்தை நோக்கி மக்களைப் பயணிக்கச் செய்கிறார் எனக் கருதலாம். மதநம்பிக்கையோடு தொடர்புடைய மூடநம்பிக்கையும் முக்கியச் சிக்கலாக முடியரசன் கவிதைகளில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

**மூடநம்பிக்கை:**

மக்களின் முன்னேற்றத்தை மூடமாக்கும் சிந்தனைகளுள் மூட நம்பிக்கையும் ஒன்றாகும். நெடுங்காலமாக நீடித்து வரும் இச்சிக்கல் குறித்துப் பலரும் பேசியும் எழுதியும் வந்துள்ளனர்.

"நடமாடும் வழியெல்லாம் நான்கு வேத

நரிக்கூட்டம் ஊளையிட அறிவை மாய்க்கும்

படுமூட நம்பிக்கை விலங்கு சுற்ற"[51]

என்னும் பகுதி, பொய்மைச் சாத்திரங்களும் மூடநம்பிக்கைகளும் நிலவிய சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

"பாம்பொன்று நினைவிழுங்கும் என்று சில்லோர்

பகர்ந்திடுவார் அதைநம்பார் அறிவில் நல்லோர்"[52]

என்று நிலா குறித்துப் பாடுவதில் அறிவியலையும் நம்பாத மூடநம்பிக்கை இருந்தமை பளிச்சிடுகிறது. ஏழையென்றும் செல்வரென்றும் இருப்பதற்குக் காரணம் இறைவன் வகுத்தது என்று மக்கள் நம்பிக் கொண்டிருந்தது கண்டு,

"ஏழை செல்வன் ஏனெனில் - அந்த

இறைவன் என்று வீணிலே

மோழை வாதங் கூறினாய் - உன்றன்

மூடம் என்று மாறுமோ?[53]

என்று பாடுவதன் வாயிலாக, மூடநம்பிக்கை மாறவேண்டுமென்பதில், முடியரசன் பெருவிருப்புக் கொண்டவரென்பதை அறியவியலுகிறது. மூடத்தனத்தைக் கைவிடுவதோடு அவற்றைச் சாடவும் துணிய வேண்டுமென்பதை முடியரசன்,

'மூடத்தனத்தைவிடு சாடக் களத்திலெழு'[54]

என்றும் குறிப்பிட்டுச் செல்கிறார்.

"கண்மூடி வழக்கங்கள் கடவுளர் விளக்கங்கள்

கதைகூறும் மயக்கங்கள் கயமையின் குழப்பங்கள்

மண்மூடிப் போகட்டும் மடமைகள் சாகட்டும்

மதிமேவி வாழட்டும்"[55]

என்னும் கவிதை மூடநம்பிக்கை மறைந்து அறிவு வளர்ச்சி மேலோங்கச் செயல்படவேண்டும் என்று அறிவூட்டுகிறது. மூடநம்பிக்கை மறையும் வரை தான் கடமையாற்றுவேன் என்பதைப் புலப்படுத்தும் வகையில் அமையும்,

“கண்மூடிப் பழக்கங்கள் சாயும் மட்டும்

கடமைப்போர் ஆற்றுவதில் ஓய மாட்டோம்”[56]

என வரும் பகுதியில் கடமை வீரம் புலனாகிறது. மூடநம்பிக்கைச் சிக்கலைக் குறித்து அலசிய படைப்பாசிரியர் முடியரசன், அதற்கான தீர்வினையும் சுட்டத்தவறவில்லை.

“முயற்சியில் நம்பிக்கை வேண்டும் - கெட்ட

மூடத் தனங்களைப் போக்கிடல் வேண்டும்”[57]

என்னும் அடிகளில் மூடநம்பிக்கையைப் போக்கிட, மானிடர் யாவரும் தன் முயற்சியில் நம்பிக்கை வைக்க வேண்டும் என்ற செய்தியைச் சமுதாயத்திற்கு வழங்கியிருப்பது கண்கூடு.

**கலப்புமணம்:**

இந்தியச் சமுதாயத்தில் ஆழமாக வேரூன்றியிருக்கும் சாதிச் சிக்கலைத் தீர்க்க வேண்டியது இன்றியமையாத ஒரு பணியாகும்.

> “திருமணத்தில் ஆதிக்கங்கொண்ட இச்சாதிச் சிக்கலைச் வீழ்த்துவதற்குச் சமுதாய நலன் நாடுவோர் அதற்குரிய வழியைத் தேடினர். காதல் திருமணமும் கலப்புத் திருமணமும் சாதியை வீழ்த்தும் என்ற கருத்து எழுந்தது. சாதிநோயை அறவே நீக்க வல்ல மருந்து தேவை என்று நினைந்தேன்; நினைந்தேன்; பன்னெடு நாள் நினைந்தேன். ஒன்று கண்டேன். எது? கலப்பு மணம். சாதிநோயின் வேரை அறவே கல்லவல்ல மருந்து கலப்பு மணமே என்று முடிவுக்கு வந்தேன்”[58]

என்று சாதி ஒழுப்பிற்குத் தீர்வாகக் கலப்பு மணத்தை முன்வைத்துள்ளார் திரு.வி.க.

> “சாதிக் கொடுமைகள் ஒழியவும், நாட்டில் சமத்துவம் தழைத்து நிற்கவும் பெண்கள் உரிமை பெற்று ஆண்களோடு சமத்துவம் பெறவும் கலப்பு மணம் ஒன்று தான் சரியான வழி”[59]

என்று பாரதிதாசன் சுட்டுவதும் இங்குக் கருதத்தக்கது. அகிலன் படைப்புகளை ஆய்ந்த சு. வேங்கடராமன்,

"சாதிவேறுபாடு நீங்கி சமுதாயம் மாறவேண்டும் என அகிலன் வலியுறுத்துகிறார். சாதிபற்றிக் கவலைப்படாமல் காதல் மணமும் கலப்பு மணமும் செய்து கொள்ள இளைஞர்கள் முன்வரவேண்டுமே என அகிலன் வலியுறுத்துகிறார். அன்பின் அடிப்படையில்தான் வாழ்க்கை அமைய வேண்டுமே அல்லாது, சாதியை முதன்மைப்படுத்தி வாழ்க்கையை அமைத்துக் கொள்வது கூடாது என்று அகிலன் காட்டுகிறார்"[60]

எனக் குறிப்பிடும் கருத்தும் ஈண்டு எண்ணற்குரியது. முடியரசன் தம் பூங்கொடி காவியத்தில் இரண்டு இடங்களில் கலப்புமணத்தை அன்றைய சமுதாயம் நோக்கிய பாங்கினைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார். உழவா் சமுதாயத்தைச் சார்ந்த பெண்ணொருத்தி, கொல்லர் சமுதாய இளைஞனைக் காதலிக்கிறாள் என்ற செய்தியை ஊரார் மூலம் அறிந்த தந்தை,

"துணியாச் செயல்செயத் துணிந்தனை! என்குல
அணையாப் பெருமையை அணைத்தனை பேதாய்!
நினைகுவை நீயிப் பழிசெய என்றே
நினைந்தேன் அல்லேன் முனைந்தாய் கொடியாய்!
மேதியிற் கீழென மேலோர் நினைக்கச்
சாதி கெடுக்கச் சதிசெய் தனையே!
வீதி சிரிக்க விளைத்தனை சிறுசெயல்![61]

என்று மகளிடம் பேசுவதன் வாயிலாகத் திருமணத்தில் சாதி செலுத்திய ஆதிக்கத்தையும் அன்றைய சமுதாயம் கலப்பு மணத்தை எதிர்த்த பாங்கினையும் அறியமுடிகின்றது. மேலும் அருண்மொழி, காதலித்துத் திருமணம் செய்ததைப் பற்றி ஊரார் ஏசியது குறித்து, 'கலப்பு மணத்தைக் கடிந்துரை யாடினர்'[62] என்று கூறுவதும் கலப்பு மணத்தை எதிர்த்த சமுதாயத்தின் அன்றைய நிலையயைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைகிறது.

"சாதிச் சழக்ககலச் சாத்திரத்துச் சூழ்ச்சிகளை
மோதித் தகர்த்தெறிய முன்னேற்றம் பெற்றிலங்க
கட்டாயம் வேண்டும் கலப்புமணம் என்றதுண்டு
தட்டாமல் அவ்வாறே சாதிதனைத் தொலைத்தேன்"[63]

என்று பாடியிருப்பதன்வழி சாதியச் சிக்கலுக்குரிய தீர்வு கலப்பு மணம் என்பதைச் சரியான தீர்வாக முன்வைத்ததோடு, தானும் அவ்வாறே கலப்புமணம் செய்து கொண்டு சமுதாயத்திற்கு வழிகாட்டியிருப்பதை அறியமுடிகிறது. இன்றைய அரசியலில் ஒழுக்கக்கேடு பெருஞ்சிக்கலாக உருவெடுத்துள்ளது.

**அரசியல் ஒழுக்கக்கேடு**

இன்றைய சமுதாயத்தின் அரசியலில் ஒழுக்கக்கேடுகள் மலிந்து விட்டன. இவையே மக்களின் வாழ்க்கைச் சிக்கலுக்குக் காரணமாகின்றன. இன்றைய அரசியலில் சுயநலத்திற்காக அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தும் அரசியல் ஒழுக்கக் கேடு பரவலாகிவிட்டது. அரசியலில் நேர்மையும் ஒழுக்கமும் இருக்க வேண்டும். 'மனத்தினைக் கொல்களம் அரசியல்'[64] என்னும் வரி மூலம் அரசியலின் ஒழுங்கீனத்தை அறியமுடிகிறது.

"தந்நல மொன்றே வாழ்வெனக் கொண்டோர்

தலைவர்கள் போலே வேடம ணிந்தனர்"[65]

என்னும் கவிதை அரசியலில் தந்நலம் கெண்டோரின் ஆதிக்கம் அதிகமாகிவிட்டதைத் தெளிவுபடுத்துகிறது. இன்றைய அரசியல் ஒழுக்கக்கேடானது என்பதைச் சுட்டும் வகையில்,

"கொள்கைகள் கொலைகள் செய்வோர்

பதுங்கிடும் கூடாரம் போல்

உள்ளதே சட்ட மன்றம்

என்றதோர் உணர்வு தோன்றி

உள்ளமே நொந்து போனார்.

ஊரவர்"[66]

என வரும் கவிதை அமைகிறது. சாதி, பொய் வாக்குறுதி, கையூட்டு போன்றவற்றால் ஒழுக்கக் கேடான அரசியல் மூலம் மக்களுக்கு எந்தவிதப் பயனும் கிட்டவில்லை என்பதே முடியரசனின் ஆணித்தரமான கருத்தாகும். இதனைப் பலவிடங்களில் சுட்டிச் சென்றுள்ளார். சான்றாக.

"சாதிகளும் பொய்மொழியும் தன்னலமும்

கையூட்டுந் தழைக்கும நாட்டில்

ஏதுபயன் விடுதலையால்? என்னபயன்

தேர்தலினால்? எத்தர் வந்தே

ஓதுகிற மொழியெல்லாம் உண்மைகளை

நம்புபவர் உணர்வு கெட்டு

மேதிகளாய் உளமட்டும் மேதினியில்

தேர்தலினால் மேன்மை யில்லை”[67]

என்னும் கவிதையைச் சுட்டலாம். கொள்கைதனை மாற்றி மாற்றிச் செயல்படும் அரசியல் ஒழுக்கக் கேட்டினை,

“காலையிலே ஒன்றுரைப்பார் மாலை வந்தால்

கட்சியினைக் கொள்கையினை மாற்றி நிற்பார்

ஓலையிலே விழுந்தபுனல் போல அங்கும்

ஒட்டாமல் ஓடிடுவார்; விடிந்த பின்னர்

காலையிலே சொன்னதுதான் உண்மை என்பார்

காசுக்குப் பாய்விரிக்கும் பெண்டிர் ஆனார்

நூலறியார் அரசியலிற் கேடு செய்ய

நோய் நுண்மம் படர்ந்ததுபோல் படர்ந்து விட்டார்”[68]

என்னும் கவிதையில் படம் பிடித்துக் காட்டியுள்ளார். தேர்தலுக்கென குடவோலை முறையைக் கண்டு, தேர்தலில் நிற்போருக்கு வரையறைகளை வகுத்துச் செயல்பட்ட தமிழ்நாட்டில் தற்போது தேர்தலில் நிற்போரின் நிலை கண்டு மணங் கொதித்து,

“நாளெல்லாம் ஊரார்பால் நம்பும் படிபேசி

வாழ்வெல்லாம் பொய்க்கின்ற வஞ்சம் தனைமறைக்கச்

சட்டைத் துணிமாற்றி தாயகத்தைக் காப்பனென

ஒட்டித் திரிகின்ற உத்தமரும் நிற்பதுண்டு

வீரங்கள் பேசிவிட்டு வேட்பாள ராய்நின்று

பேரங்கள் பேசும் பெருமனிதர் தாமுமுண்டு!”[69]

எனப் பாடியுள்ளார். மேலும் தேர்தல் சீர்கேடு குறித்து அமையும்,

"தேர்தலை நினைந்து விட்டேன்

சிந்தையும் உறங்க வில்லை

நேர்மையை அங்குக் காணேன்

பொய்ம்மையே நெளியக் கண்டேன்"[70]

என்னும் கவிதையும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது. அரசியலின் இத்தகைய சீர்கேடான போக்கினைக் களைந்திட எண்ணிய முடியரசன்,

"அரசியலில் குறைகாணின் இடித்து ரைக்கும்

அவ்வுரிமை அனைவர்க்கும் வேண்டும் இன்று

முறைசெய்வோர் அவ்வுரிமை பிரிப்பதற்கு

முனைவதுவும் நன்றன்று; செவிகொ டுத்துப்

பரிவுடனே ஏற்பதிலோர் நன்மை யுண்டு

பாராளும் முறைமையது"[71]

என்று பாடி, குறைகாணுமிடத்துச் சுட்டிக்காட்டித் திருத்தும் உரிமை வேண்டும் என்பதைப் பதிவு செய்துள்ளார். தன்னலம் கருதாது, பொதுநலத்தைப் பாதுகாக்க விழைவோர் அரசியலுக்கு வந்து தொண்டாற்றுவதே இத்தகைய அரசியல் ஒழுக்கக் கேட்டிற்கு உகந்த தீர்வாகும் என்பதே முடியரசனின் கருத்தாகும். இதனை,

"கற்றறிந்து சிந்தித்துக் கண்டுணர்ந்து

செயலாற்றுங் கடமை வேண்டும்

பற்றழிந்த தொண்டுளத்தைப் பண்புளத்தைப்

பொதுநலத்தைப் பாதுகாத்தல்

உற்றவர்க்குக் கடமையென உளத்தூய்மை

முறைமையென உணர்ந்து விட்டால்

பெற்றதொரு விடுதலைக்குப் பெருமைவரும்

தேர்தலுக்கும் பெருமை யுண்டு"[72]

என்னும் கவிதையால் அறியமுடிகிறது. அரசியல் ஒழுககக்கேட்டினைத் தொடர்ந்து பொருளியல் சீர்கேடும் குறிக்கத்தக்க ஒன்றாகும்.

**பொருளியல் சீர்கேடு**

ஒருநாடு பொருளாதாரத்தில் பின்தங்கியிருப்பதற்கு அடிப்படைக் காரணங்கள் பலவாகும். பொருளியல் சீர்கேட்டிற்கான காரணகளுள் கருப்புச் சந்தை வணிகம், பதுக்கல், சுரண்டல் ஆகியவை மிக முக்கியமானவையாகப் பொருளியல் அறிஞர்களால் சுட்டப்பெறுகின்றன. நேர்மை, நாணயமற்ற தன்மை, கொள்ளையடித்தல் முதலான இழிசெயல்கள் வணிகம் என்ற பெயரால் நடக்கும் அவலநிலையை,

"நாணயத்தைக் கூட்டுதற்கு நாணயத்தை விற்றுவிட்டார்
வாணிகத்தின் சீர்மைதனை வாட்டி வதக்கி விட்டார்
வாங்கும் பிறர் பொருளை வாணிகர் தம்பொருள்போல்
தீங்கின்றிப் பேணிச் செயலே அறமாம்
இவரோ பிறர்பொருளை ஏப்பம் இடுவார்
தவறுகள் செய்யத் தயக்கம் சிறிதுமிலார்
வாணிகத்தின் பேரால் வழிப்பறிகள் செய்கின்றார்!
நாணிகந்து செல்வரென நாட்டில் உலவுகின்றார்
கொள்ளை யடிப்பதற்குக் கூசாப் பெரு வணிகர்"[73]

என்னும் கவிதை மூலம் படம்பிடித்துக்காட்டியுள்ளார் முடியரசன். வணிகத்தில் பதுக்கல் இருந்தமையைச் சுட்டிக்காட்டிக் கடுமையாகச் சாடியுள்ளார். சான்றாக,

"பதுக்குதல் வாணிகக் கொலைக்களம் - அதன்
படுகுழி கருநிறக் கணக்குகள்"[74]

என்னும் வரிகளில் அறியலாம். வணிகர்களில் சிலர்,

"கடத்தல் மறைத்தல் கலத்தல் பதுக்கல்
முடக்கல் தொழிலைந்தும் முற்றத் தெரிந்துள்ளார்"[75]

என்றும் எடுத்துக்காட்டியுள்ளார். சுரண்டலையும், பதுக்கலையும் ஒழித்து, பொருளியலைச் சீரமைத்து வணிகத்திற்குச் சரியான விதிமுறைகளை வகுத்திடுவோம் எனச் சமுதாயத்தை நோக்கி அழைப்பு விடுத்திடும் வகையில்,

"சுரண்டலும் பதுக்கலும் ஒழிப்போம் - அதற்குத்

துணைவரும் பகைதனை அழிப்போம்

இரண்டிலும் பிழைப்பவர்ப் பழிப்போம் - அவர்க்கே

இனியொரு விதிமுறை விதிப்போம்"[76]

எனப் பாடியுள்ளார். இன்று பதுக்கல், சுரண்டல் காரணமாகப் பொருளாதார நிலையில் மேம்பாடுற்ற உயர் வகுப்பினர், பொருளாதார நிலையில் நலிவுற்ற பிரிவினர் என்ற வகுப்புப் பிரிவுகள் தோற்றங் கண்டுள்ளன. இத்தகைய இருபிரிவினரையும் சமன் செய்தால்தான் உலகம் நல்லமுறையில் நடைபெறும். உடையவர், இல்லாதவா் என்னும் இந்த ஏற்றத்தாழ்வை நீக்கப் பதுக்கலை விடுத்துப் பணத்தைப் பரவலாக்க வேண்டும் என்பது இன்றைய பொருளியல் சிந்தனை. பொருளியல் சீர்கேடு நீங்கிடப் பொதுவுடைமை மலர வேண்டுமென்பதே முடியரசன் முன் வைக்கும் தீர்வாகும். இதனை,

"பொதுவான உலகொன்று வேண்டுமாம் அங்குப்

பொருள்யாவும் சமமாக வேண்டுமாம் தோழி"[77]

எனவும்,

"ஏற்றமும் தாழ்ச்சியும் இரியும் - மக்கள்

யாவரும் ஒன்றெனத் தெரியும்

மாற்றமெ லாமொரு புதுமை – செல்வம்

மாந்தர்கள் யாவர்க்கும் பொதுமை"[78]

எனவும் அமையும் கவிதை வரிகளால் அறியலாம். பொருளியல் சீர்கேட்டைத் தொடர்ந்து இலஞ்சம் தலைவிரித்தாடுவதையும் சிலவிடங்களில் சுட்டிச் சென்றுள்ளார்.

**இலஞ்சம்**

இந்தியத் திருநாட்டில் இலஞ்சம் என்னும் சீர்கேடு ஓயாத பெரும்புயலாக வீசிக்கொண்டிருக்கிறது. அரசு அலுவலகத்தின் கடைநிலை ஊழியர் முதல் அரசை ஆளுபவர் வரை இலஞ்சத்தில் திளைக்கும் காட்சியைக் காணமுடிகிறது. தற்போது

வாக்காளரும் வாக்களிக்கக் கையூட்டுப் பெறும் நிலை உருவெடுத்துள்ளது. இச்சிக்கலைக் களைவதில் தீவிர கவனம் செலுத்தாவிடில் சுதந்திரத்தின் பயன் பெரும்பான்மை மக்களுக்குக் கிட்டாமற் போய்விடும்.

> “மேல்மட்டத்தின் கோடிக்கணக்கான ரூபாய் ஊழல்கள் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம், கீழ்மட்டத்தில் நூறு ரூபாய்க் கணக்கில் நிலவும் ஊழல்கள். இன்னும் சொல்லப்போனால் சாதாரன மக்களை நேரடியாகப் பாதிப்பது இத்தகைய சின்னச் சின்ன லஞ்சங்கள் தான். இந்த அப்பாவிகள் சந்திக்கும் சின்னச் சின்ன அலுவலர்கள் சமூகத்தைச் செல்லரிக்கும் கரையான்கள். மேல்மட்ட ஊழலில் கவனம் செலுத்துவதுபோல் கீழ்மட்ட ஊழலில் கவனம் செலுத்தாத வரையில் சாதாரண மக்களுக்குச் சுதந்திரமென்பது எட்டாக்கனியே”[79]

என்னும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கதாக அமைகிறது. இச்சிக்கல் குறித்து ஆய்வு மேற்கொண்டுள்ள முடியரசன் கவிதைகளின் பார்வை இன்றியமையாததாகிறது.

“மருத்துவர் வீட்டிற் கேகி
வைப்பதை வைத்து விட்டால்
திருத்தமாக் கவனம் வைப்பர்
பிணிகளும் தீர வைப்பர்
நரித்தனத் தாதி மார்கள்
நாடகம் ஆடு முன்பே
அரித்திடும் அவர்தம் கையில்
அதைஅதை வைத்தல் வேண்டும்”[80]

என்னும் பகுதி, அரசு மருத்துவமனைகளில் தாண்டவமாடும் இலஞ்சத்தை வெளிச்சத்திற்குக் கொண்டு வருகிறது. அரசு அலுவலகங்களிலும் நீதி மன்றங்களிலும் இலஞ்சம் தலைவிரித்தாடுவதை,

“கோப்புகள் பார்க்குங் கண்கள்
கொழுவிய பைகள் பார்க்கும்

தீர்ப்புகள் எழுதுங் கைகள்

தினவினைச் சொறிந்து காட்டும்”[81]

என்னும் அடிகளில் அறியமுடிகின்றது. அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இலஞ்சம் இல்லாத இடம் எங்கேனும் உண்டா? என வினாத் தொடுத்துக் ‘கையூட்டுலகம்’ என்ற தலைப்பிலே முடியரசன் ஒரு கவிதை படைத்துள்ளார். அரசு அலுவலகம் தொடங்கி அனைத்துத் துறைகளிலும் இலஞ்சம் இருப்பதை இக்கவிதையில் பட்டியலிட்டுள்ள முடியரசன்,

“எங்குமே சென்று வெற்றி

தருவது கையூட் டாகும்

தடுப்பவர் எவரு மில்லை”[82]

என்று குறிப்பிட்டுள்ளார். நீதிமன்றங்களில் நீதி காசுக்கு விற்கப்படும் நிலை கண்ட முடியரசன் ஆவேசம் பீறிட,

“மாசறியாத நீதி

மன்றிலும் கையூட் டென்னும்

காசுதான் தீர்ப்பை வாங்கும்

கயமையைக் காதாற் கேட்டேன்

கூசினேன்; அவர்க்குத் தூக்குத்

தண்டனை கொடுப்ப தன்றிப்

பேசஒன் றில்லை: பூமி

பித்தரைச் சுமக்க லாமோ?[83]

எனச் சாடுகிறார். தற்போது தேர்தல்களில் வாக்களிப்பதற்குப் பணம் வாங்கும் நிலையையும்,

“வாக்களிக்கக் கையூட்டு வாங்குகிறோம்

வெற்றியோடு வந்தோர் பின்னர்

வாக்களித்த நம்மிடமே வட்டியொடு

கையூட்டு வாங்கு கின்றார்”[84]

என்று பதிவு செய்துள்ளார்.

“தேவையைப் பெருக்கிக் கொண்டால்

திசைகளும் மாறிப் போகும்

ஆவலை வளர விட்டால்

அதற்கென எல்லை யில்லை”[85]

என்னும் கவிதை வாயிலாக இலஞ்சத்தை ஒழிக்கத் தேவையையும் ஆசையையும் சுருக்கிக் கொள்ள வேண்டுமென்பதைத் தீர்வாக முன் வைக்கிறார் ஆசிரியர் முடியரசன்.

**வறுமை:**

சமுதாயத்தில் சிலர் வறுமை என்னும் கோரப்பிடிக்குள் சிக்கித் தவிப்பது முடியரசன் கவிதைகள் பலவற்றிலும் படைத்துக் காட்டப்படுகிறது. வறுமையைப் பற்றியும், வறுமையால் வாடுவோர் நிலை பற்றியும் வரையப்பட்ட படைப்போவியமாக ‘துன்பமடா துன்பம்’ என்னும் கவிதை திகழ்கிறது. சான்றாக.

“துன்பமடா துன்பம் - வறுமைத்

துன்பமடா துன்பம்

பசித்துயராய் சிறுமகவு பால்சுவைக்கப் பாலின்றிப்

பரிந்தன்னை முகம் நோக்கப் பாவையள் நீர்ததும்ப

நசிந்துருகும் மனத்தோடு நயனத்தால் பேசுகின்றாள்

நானென்ன சொல்லிடுவேன்; மரமுண்டு கயிறுண்டு”[86]

எனவரும் பகுதியைச் சுட்ட முடிகிறது. மேலும் ‘வறுமைப்பிணி’ என்ற தலைப்பில்

“வறுமை எனும் பிணியே-கொடிதே

வறுமை எனும் பிணியே”[87]

என்று ஆசிரியர் கூறுவதன் வாயிலாக, வறுமையின் இயல்பு விளக்கப்படுகிறது.

“எல்லா வளமிருந்தும் ஏழையராய் நாமிருந்தோம்

பொல்லா வறுமையினால் பொன்றிக் கிடந்துழன்றோம்”[88]

என்னும் அடிகள் மூலம் வறுமையின் கொடுமையை அறிய இயலுகிறது.

“நெஞ்சுலர்ந்து வாயுலர்ந்து நிற்கும் இடமிழந்து

பஞ்சையர்கள் ஓர்புறத்தே பட்டினியில் வீழ்ந்திருப்பர்”[89]

என்னும் கவிதைப்பகுதி, மக்களின் வறுமையைப் படம் பிடித்துக்காட்டுகிறது. வறுமையையும் வறுமையின் பிடிக்குள் சிக்கித் தவிக்கும் மக்களின் துயரத்தையும் விவரித்த ஆசிரியர் முடியரசன், இதற்கான தீர்வினையும் முன் வைத்துள்ளார்.

“மனிதனை உழைப்பினை மதிப்போம் - கொடிய

வறுமையை இடரினை மிதிப்போம்”[90]

என்றும்,

“நம்முடை வறுமை நீக்க

நாட்டினை வறுமை செய்தால்

அம்முறை சரிஎன் றோதார்

ஆதலின் தோழர் தம்மை

வம்மென அழைப்போம் கூடி

வந்தபின் உழைப்போம் ஒன்றாய்

நம்முயர் நாடுங் காப்போம்

நலமுற வீடுங் காப்போம்”[91]

என்றும் பாடியிருப்பதன் வாயிலாக வறுமைத் துன்பம் அகல உழைப்பினைத் தீர்வாகச் சுட்டியுள்ளமை அறியத் தக்கது. வறுமை போகவும், வளம் சேரவும் நாட்டில் பொதுவுடைமைச் சமுதாயம் அமைய வேண்டுமென்பதையும் ஆசிரியர் தீர்வாக முன்வைப்பது,

“வறுமை போக வளமை சேர

வழிகள் யாவை? தேடுவோம்

வளரும் நாடு பொதுமை யாகி

வாழ்க என்று பாடுவோம்”[92]

என்னும் கவிதையில் தெற்றெனப் பளிச்சிடுகிறது. இன்றைய சமுதாயத்தில் காணப்படும் மற்றொரு சிக்கலாக ஒற்றுமையின்மை சிலவிடங்களில் சுட்டிக்காட்டப்படுகிறது.

**ஒற்றுமையின்மை:**

சமுதாயத்தில் வாழும் பலதரப்பு மக்களிடையே இன்று ஒற்றுமை குறைந்து வருகிறது. சாதி, மதம், பணம் எனப் பல காரணங்களால் மக்களிடையே ஒற்றுமை குலைந்து போய்விட்டது. இதனால் இன்றைய சமுதாயம் பல்வேறு பாதிப்புகளுக்கு உள்ளாகி வருகிறது. இச்சிக்கல் குறித்தும் ஆசிரியர் முடியரசன் சிந்தித்துள்ளார்.

"நன்றாக எண்ணிப்பார் நாலாயி

ரஞ்சாதி நமக்குள் வைத்தோம்

ஒன்றாரும் புகுந்துவிட ஓட்டைகளை

அமைத்து விட்டோம்; உட்பு குந்தோர்

வென்றாள வழிசமைத்தோம்"[93]

என்று பாடுவதன் மூலம் தமிழர்களிடம் ஒற்றுமை இல்லை என்பதால் பல பிரச்சினைகள் ஏற்படுவதைச் சுட்டிக்காட்டுகிறார் ஆசிரியர்.

"ஒன்றாக நாமிணைந்தால் ஊறுசெயும்

பகைமையெலாம் ஒழிந்தே போகும்"[94]

என்றும், பூங்கொடி காவியத்தில் பொங்கல் திருநாள் விழாக் கொண்டாடுமாறு விடுக்கப்படும் அறிக்கையில் ஒற்றுமையைப் பரப்பும் நோக்கில்,

"சிறுசிறு பகையைச் சிந்தைவிட் டகற்றுக

ஓரினம் நாமென உன்னுக பெரிதே"[95]

என்றும் அமையும் கவிதை அடிகள் மூலம் அனைவரும் ஒன்றிணைந்து நின்று, ஒற்றுமை மூலம் தான் எதையும் சாதிக்கவியிலும் என்னும் கருத்தையும் உணர்த்தியுள்ளார். ஒற்றுமையின்மையால் ஏற்படும் தீமையை எடுத்துக்கூறி அதன் மறுபக்கமான ஒற்றுமையை வலியுறுத்தும் ஆசிரியரின் திறம் போற்றத்தக்கது.

**போதை எதிர்ப்பு:**

மக்களைப் போதைப்பழக்கத்திற்கு அடிமையாக்கிவிட்டால் ஆட்சிக்கு எதிராக எந்த நடவடிக்கைகளிலும் ஈடுபடமாட்டார்கள் என்பதால், பல ஆட்சியாளர்களும் இதை ஒரு ராஜதந்திரமாகப் பயன்படுத்தி வந்தனர். பாட்டெழுதுவதற்காகச் சில கவிஞர்கள் மது அருந்துவதைக் கண்டித்து,

“யாப்பமைந்த பாடல் இயற்றித் தருவதற்குக்

கோப்பைப் பழங்கள் குடித்துப் பழகவில்லை”[96]

என்று பாடுவதன் வாயிலாகத் தன் போதை எதிர்ப்புணர்வைப் பதிவு செய்கிறார். மனதையும் அறிவையும் கெடுக்கும் மதுவைப்பற்றி ‘நெஞ்சைக் கெடுத்திடச் செய்திடும் மதுதான்’[99] என்றும் குறிப்பிட்டுச் செல்வதில் போதை எதிர்ப்புணர்வை மக்களிடையே ஊட்ட முயற்சித்துள்ளமை நன்கு புலனாகிறது. படிக்கும் மாணவர்களும் தற்போது மது அருந்தும் நிலை கண்ட ஆசிரியர் முடியரசன், மாணவ சமுதாயத்தை நெறிப்படுத்த விழைகிறார்.

“படித்திட வந்த நீவிர்

பண்பினை மறந்து விட்டுக்

குடித்திடக் கற்றுக் கொண்டீர்

உரைக்கவுங் கூசுகின்றேன்.

மடத்தினில் வீழ்ந்து நாளும்

மயங்கியே திரியும் நும்மைத்

தடுத்திட வில்லை யென்றால்

தறிகெட்டுப் போகும் நாடு”[98]

எனவரும் கவிதை மூலம் போதையிலிருந்து மாணவர்கள் விடுபட்டால்தான் நாடு நலம்பெறும் என்பதை அறியமுடிகிறது. போதைப்பழக்கத்தை அடியோடு மறந்தால் தான் நாடு நன்னிலை அடையும் என்பதை உணர்த்தும் ஆசிரியரின் கருத்து சிந்திக்கத்தக்கது.

**வரதட்சணை**

இந்திய சமுதாயத்தில் ஒரு பெண்ணின் வாழ்க்கையை உறுதிபடுத்துவது திருமணம். இத்திருமணத்தில் தொன்று தொட்டு நீடித்து வருவது வரதட்சணை, இது சமூக வழக்கமாக்கப்பட்டு விட்டது.

> “இந்தச் சூழலால் வரதட்சணை என்பது வாழ்நாள் முழுவதும் பல்லாண்டு நிகழும் ஒரு ‘தொடர் பரிசளிப்பையே’ சுட்டுகிறது.”[99]

என்பார் குப்தா என்னும் சமூகவியலறிஞர். இவ்வழக்கம் சில நூற்றாண்டுகளாகக் காணப்பட்டாலும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில்தான் இது குறித்துச் சீர்திருத்தவாதிகள் சிந்திக்கத் தொடங்கினர். சில படைப்பாளர்களும் வரதட்சணை வழக்கத்தைச் சுட்டிக்காட்டினர்.

"கண்கவர் எழிலைப் பாரான்
கல்வியின் பெருமை காணான்
பெண்மகள் குணத்தை நோக்கான்
பிறவுயர் பண்பும் நோக்கான்
உண்மையில் மனப்பொ ருத்தம்
உள்ளதா எனவும் எண்ணான்
பொன்பொருள் மட்டுந் தானே
புன்மகன் நோக்கு கின்றான்"[100]

என்று வரதட்சணையால் பெண்ணை விலைபேசும் அவலநிலையை எடுத்துக்காட்டுகிறார். மேலும்,

"பெண்களைப் பெற்ற தந்தை
பெருந்தொகைக் கியலா னாகிப்
புண்களை நெஞ்சில் வைத்துப்
புழுங்கியே வாடு கின்றான்
பெண்களும் மணங்கா ணாராய்ப்
பேதலித் தழிந்து போனார்"[101]

என்று பாடுவது, வரதட்சணையின் தீவிரத்தன்மையை உணர்த்துகிறது. இச்சிக்கலைத் தீர்க்க ஆசிரியர் முடியரசன்,

"இரக்கமே யில்லா மாக்காள்
இழிவினை அகற்ற வேண்டும்
இளைஞரும் விழித்தல் வேண்டும்"[102]

என்று இளைஞரிடையே விழிப்புணர்வு ஏற்படவேண்டுமென்பதைத் தீர்வாகச் சுட்டுகிறார். அண்மைக் காலத்தில் காதல் புதிய சிக்கலாக உருவெடுத்துள்ளது குறிக்கத்தக்கது.

**காதல்:**

சங்ககாலச் சமுதாயத்தில் எந்தவித வேறுபாடும் கருதாமல் அன்புடை நெஞ்சம் கலந்த காதல் நிலவியது.

> "முதலில் தனிப்பட்ட நபரையும் பிறகு குடும்பங்களையும் பின்னர் இன மக்கள், தொகுதிகள், நாடுகள் ஆகியவற்றையும் ஒரு மாபெரும் இணைப்பாக, ஒரே மானிடத் தொகுதியாக இணைப்பதை நோக்கமாகக் கொண்டது காதல் உணர்வு. காதல் உணர்வின் அலுவல் திட்டம் இதுவாகவே உள்ளது"[103]

என்பார் தொப்ரேன் கோவ். இத்தகைய காதல் இன்று சாதியாலும் பொருளாதார நிலையாலும் பிரிக்கப்படுகிறது. இன்றைய சமுதாயத்தில் சாதி வேறுபாடு பாராட்டாமல் காதல் திருமணம் செய்வதென்பது பெருமளவில் நடப்பில் இல்லை. விதிவிலககாகச் சில காதல் திருமணத்தில் முடிந்தாலும் மிகப்பெரும் போராட்டத்தைச் சந்திக்க வேண்டியுள்ளது.

> பெற்றார் தடையுண்டு
> பன்பிறந்தார் நால்வருண்டு
> உற்றார் பலருண்டே
> உண்மையிது – முற்றாமல்
> காதல் கருகிவிடும்
> காலந்தான் வந்திடுமோ
> காதல் உறுநிலையைத்
> தந்து!"[104]

என்னும் கவிதை மூலம் காதலுக்குள்ள தடைகளை அறியமுடிகிறது. காதல்வயப்பட்ட பெண்ணின் பெற்றோர் செய்தி அறிந்து வேறு மணமகன் தேடுவதை,

"உறவுமுறை யிலொரு மாப்பிள்ளை தேடுகிறாள்

மடல் சேரும் தாழைமரச் சோலைக்கு வாருங்கள்

மணம்வைக்கும் நாள் தன்னை மாதென்பால் கூறுங்கள்"[105]

என்னும் கவிதை வரிகள் புலப்படுத்துகின்றன.

"காதலெனும் மென்மலரைக் கசக்கி விட்டோம்

கற்றவரும் அதன்செவ்வி உணர்ந்தோ மல்லோம்:

ஓதலிலே திரைதனிலே எழுதும் நூலில்

உரைப்பதிலே காதலைத்தான் உயர்த்திச் சொல்வோம்

காதலது நம்வீட்டில் புகுந்து விட்டால்

கனன்றெழுவோம் சாதியெனும் வாளெ டுப்போம்

மோதியதன் நெஞ்சத்தைப் பிளப்ப தற்கே

முனைந்திடுவோம் கண்மூடிச் செயலே செய்வோம்"[106]

என்ற கவிதை, சாதி காரணமாகச் சமுதாய நடப்பியலில் பெரும்பாலும் காதல் ஈடேறுவதில்லை என்பதைத் தெளிவுபடுத்துகிறது. காதலர் இருவரும் பாடுவதாக வரும்,

"உளம்யாவும் உயிர்யாவும்

ஒன் றாகுமே – காதற்

களமேவும் நமதின்பம்

உயி ராகுமே – விளையும்

பயிராகுமே"[107]

எனவும், 'காதல் விந்தை எலாம் கண்டுலகில் மேன்மை பெறுவோம்'[108] எனவும் அமையும் கவிதை அடிகள் வாயிலாக இலட்சிய ஒருமை கொண்ட காதல் சமுதாய வளர்ச்சிக்கும் தேவையென்ற தன் அவாவினை வெளிப்படுத்தும் முடியரசனின் சிந்தனையோட்டம் காலத்திற்கேற்ற பொருத்தமுடையதாகிறது.

**பெண்கள் நிலை மீதான பார்வை**

சங்ககாலத்தில் பெண்கள் கல்வியறிவு பெற்றுப் புலமையோடும் வீரத்தோடும் திகழ்ந்தனர் என்பது சங்க இலக்கியங்கள் தரும் செய்தியாகும். ‘இளம்பெருவழுதி’ என்னும் கவிதை நாடகத்தில் முதியவர் ஒருவர் அங்குள்ள சிலைகள் பற்றி இளைஞன் ஒருவனுக்கு விளக்கிக் கூறுவதாகக் கதை தொடங்குகிறது. அதில் காக்கை பாடினி நச்செள்ளையார் சிலையைக் காட்டி கற்றவர் மெச்சும் பெண்மணி என்று விளக்கம் தருகிறார். அப்போது இருவருக்கிடையே நடக்கும் உரையாடல் சங்க காலத்தில் பெண்கள் உயர்வான நிலையில் இருந்தனர் என்பதைப் பறைசாற்றுவதாக அமைகிறது.

“இளைஞன்: கற்றுத் தேறிய நற்புலன் கொண்டோர்

பொற்றொடி மகளிர் அற்றைநாள் உண்டுகொல்?

முதியவர்: அறத்துறு கல்வியில் ஆன்றவ ரன்றி

மறக்குடி மகளிரும் வாழ்ந்தனர் அந்நாள்”[109]

என்னும் பகுதியில் சங்ககாலத்தில் பெண்ணின் உயர்வு பளிச்சிடுகிறது. ஆனால் தற்போது விதவையர் நிலை, தேவதாசிமுறை, பாதுகாப்பின்மை, உரிமை மறுப்பு போன்றவை பெண்களுக்குப் பெருந்துன்பம் தந்துள்ளன. இச்சமுதாய அமைப்பையே ஆணாதிக்கச் சமுதாயம் என்று கூறுவர். இத்தகைய சமுதாய அமைப்பில் இருக்கும் பெண்களின் நிலை இலக்கியப் படைப்பாளர்களால் உலகின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளது. ஆய்வு மேற்கொண்டுள்ள முடியரசன் கவிதைகளில் வெளிப்படும் இத்தகைய பார்வை இங்குச் சுட்டத்தக்கது.

இளம்வயதிலேயே பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பதும், கணவன் இறந்து விட்டால் இறுதி வரையிலும் விதவைக் கோலம் கொள்வதும் அக்கால வழக்கமாயிருந்தது.

“வெண்மதியால் தண்மையுண்டு; வீசும் தென்றல்

விளைவிக்கும் நல்லின்பம்; அவளி டத்தும்

பெண்மையுண்டு, பருவஎழில் நிறைய உண்டு

பேசுமொழி கிள்ளைஎன்பர் இருந்தும் அன்னாள்

பெண்மைநலம் காணுகிலாள், விதவை என்று

பெயர்வைத்துக் கொல்லுகின்றார், உலகைக் காணக்

கண்ணிருந்தும் குருடாகிக் கண்ணீர் சிந்திக்

கயிறில்லாப் பம்பரம்போல் பாழாய் நின்றாள்”[110]

என்னும் கவிதையில் விதவையரின் அவல வாழ்வைக் காணமுடிகிறது. இருப்பினும் விதவையின் துன்பத்தை எடுத்துக்காட்டிய முடியரசன், அதற்கான தீர்வினைச் சுட்டவில்லை என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

கோயிலுக்குப் பெண்களைப் பொட்டுக்கட்டிவிடும் தேவதாசி முறை இருந்ததனை,

“எமதினத்தைப் பாழ்படுத்த இழிதேவ

தாசிமுறை வேண்டு மென்று

நமநமத்துத் திரிகின்றார் நல்லதொரு

புண்ணியமாம் நவிலு கின்றார்”[111]

எனக் கடுமையாகச் சாடுகிறார். கண்ணாடி மாளிகை என்ற திரைப்படத்திற்கு எழுதிய பாடலொன்றில்,

“என்ன துன்பம் வந்தாலும்

ஏய்த்து வரும் ஆடவரைச்

சின்னவளே நம்பாதே

சீரழிந்து போகாதே”[112]

என்று பாடியிருப்பது, ஏமாற்றுக்கார ஆடவர் குறித்துப் பெண்களை எச்சரிக்கும் வகையில் அமைகிறது. பாரதி குறித்துப் பாடிய கவியரங்கக் கவிதையொன்றில் கற்பு குறித்துப் பாரதி கூறிய ஆண் பெண் இருவருக்கும் கற்பு பொதுவாயிருத்தல் வேண்டுமென்னும் கருத்தை வழிமொழிந்து பாடுகிறார். இதனை,

“தாதமுறை ஆணுக்கு வேண்டா என்றால்

தையலர்க்கும் அம்முறையை வேண்டா என்போம்

காதலர்க்குக் கற்புமுறை பொதுவில் வைப்போம்

கண்ணிரண்டும் சரிசமமாக் காண்போம் என்றான்”[113]

என்னும் கவிதை வரிகளில் அறியலாம்

பெண்களுக்குப் பாதுகாப்பில்லாத நிலை குறித்தும் முடியரசன் தன்கருத்தைப் பதிவு செய்துள்ளார்.

"தந்தையொடு சென்றாலும் தங்கொழுநர்

உடன்செலிம் தைய லர்க்கிங்

கெந்தவொரு காப்புக்கும் இடமில்லை

ஏதேதோ நேரும் தொல்லை"[114]

என்று பாடுவது இன்றைய நடப்பியலைத் துலக்கிக் காட்டுவதாக அமைகிறது.

பூங்கொடி காவியத்தில் பூங்கொடி மீது ஒருதலைக் காதல் கொண்ட கோமகனிடம் சண்டிலி கூறுவதாக வரும்,

"…. …… …… ஒண்டொடி மாதர்

மரமென மண்ணென மதித்தனை கொல்லோ:

அரிவை யிகழ்ந்தனை! அறிவை யிகழ்ந்தனை!

தெரிவை விரைவினில் தெரிவை திறமெலாம்"[115]

என்னும் அடிகள் வாயிலாகப் பெண்களை மதிக்காத ஆணாதிக்கப் போக்கினை அறியமுடிகிறது

ஆணும் பெண்ணும் எல்லாத் துறையிலும் சம உரிமை படைத்தவர்கள் என்ற சிந்தனையின் விளைவாகவே பெண்ணுரிமைக் கோட்பாடு தோன்றியது. 'பெண்ணியம்' என்ற சொல் மிக அண்மைக் காலத்தில் தோன்றி வளர்ந்து வருகிறது. அது பெண்களின் உரிமைக்காகப் போராடும் ஒரு புதிய இயக்கமாகும். அத்தோடு பெண்ணின் தனிப்பட்ட குடும்ப வாழ்க்கையிலும் அவள் ஆணுக்குச் சமமானவள் எனும் உயர்நெறியை நிலைநாட்டும் நோக்கத்தைக் கருவாகக் கொண்டு இயங்குகிறது'[116] எனப் பிரித்தானியக் கலைக் களஞ்சியம் பெண்ணியத்திற்கு விளக்கம் தருகிறது. பெண்ணினத்தை உயர்வாகப் போற்றும் முடியரசன்,

"வணங்குகிற நிலைகொடுக்கும் அன்னை யாகி

வளர்காதற் கலைபடைக்கும் மனைவி யாகி

உணங்கலிலா அன்புக்கோர் உடல்போல் நிற்கும்

உடன்வயிற்றுப் பிறப்பாகி, நெஞ்சில் ஊறும்

நுணங்கரிய பரிவுக்கே இலக்காய்த் தோன்றும்

நுண்ணிடைய மகளாகி, உலகில் நல்ல

குணங்களெல்லாம் வளர்வித்து மகிழ வைத்துக்

குளிர்வித்து வாழ்வதன்பேர் பெண்மை யாகும்"[117]

என்று பெண்ணியத்திற்கு விளக்கம் கூறியுள்ளது சிறப்பிற்குரியது. அதே நேரத்தில் பெண்ணியம் என்ற பேரால் பெண்கள் அலங்கோலமாய் உடுத்துவதும் செயல்படுவதும் குறித்துத் தன் கண்டனத்தையும் மிக அழுத்தமாகப் பதிவு செய்துள்ளார்.

"சரிநிகராய் வாழ்வதுதான் சரியெனவே

உடன்படலில் தாழ்ச்சி யில்லை

உரிமையெனும் பேர்சொல்லிப் பெண்மையையே

உரிவதைநான் ஒப்ப வில்லை

கரிமனத்தற் விழிவழியே கனல்புகுத

ஒப்பனைகள் காட்டி யெங்குத்

திரிவதுதான் உரிமையெனிற் சீறியதைச்

சாய்ப்பதுதான் எனது வேலை"[118]

என்று பாடுவதன் வாயிலாகப் பெண்ணுரிமை குறித்த அவரது கருத்தோட்டத்தை அறிந்து கொள்ள முடிகிறது. மேலும் பெண்கள் சமுதாயத்திற்கு,

"நாணத்தை மானத்தை நாகரிக

நங்கையர்கள் நல்ல வண்ணம்

பேணித்தம் பெண்மைக்கு மதிப்புவர

நடப்பதுதான் பெருமை யாகும்"[119]

என்று அறிவுபுகட்டுகின்றார். ஆணும் பெண்ணும் சமமாகக் கருதப்படுவதும், இணைந்து செயல்படுவதுமே நாட்டின் வளர்ச்சிக்கு உகந்தது என்னும் தீர்வை,

"ஆண்மைஎனப் பெண்மையெனப் பேசு கின்ற

ஆயிரண்டின் கூட்டுறவே உலகம் கிட்டும்:

ஆண்மையின்றிப் பெண்மையிலை பெண்மை யின்றி

ஆண்மையிலை; வீரமொன்று; காதல் ஒன்று

மாண்பமைந்த இவ்விரண்டும் உயிர்ப் பண்பாகும் ;

மாநிலத்தின் வளர்ச்சிக்கும் இவையே வித்தாம்;

வீண்மையது மேல்கீழென் றிவற்றுட் காணல் ;

வியனுலகின் இருவிழியே ஆண்மை பெண்மை”[120]

என்னும் கவிதையில் முன் வைத்துள்ளார். உயர்நிலையை வகித்திருந்த சங்ககாலப் பெண்கள் சமுதாயத்தையும், தற்காலம் எல்லாத்துறையிலும் ஆற்றல் படைத்துள்ள பெண்கள் உருவாகியுள்ள காலத்திலும் பெண்களுக்குப் பாதுகாப்பும் மதிப்பும் இல்லாத நிலை நீடிப்பதையும் சிறப்பாகச் சுட்டியுள்ளார் முடியரசன். பெண்ணுரிமை பேணப்பட வேண்டுமென்பதில் அமுத்தமான பிடிப்புடையவரென்றாலும், பெண்மை தடுமாறிப் போகாமல் அறிவூட்டி, ஆணும் பெண்ணும் இணைந்து செயற்படுவதே முறையான பெண்ணியம் என்பதைத் தெளிவாகப் பதிவு செய்திருப்பது இன்றைய காலத்தின் தேவையென்றே கூற முடிகிறது.

**கொடுமையைத் தட்டிக்கேட்டல்:**

இன்றைய சமுதாயத்தில் எங்கு பார்த்தாலும் பல கொடுமைகள் நிகழ்ந்த வண்ணமிருக்கின்றன. ஆனால் கொடுமையைத் தட்டிக்கேட்கும் சிந்தனை நம் மக்களிடம் மிகவும் குறைவு, இதனைக் கண்கூடாக அறிந்த ஆசிரியர் முடியரசன் சமுதாயத்தை மாற்ற விழைகிறார். சமுதாயத்தில் தவறுகள் நடக்கிறபோது அதனை அஞ்சாமல் சுட்டிக்காட்டும் துணிவு எழுத்தாளர்க்கு வேண்டும் என்பதே முடியரசனின் கருத்து.

“வழுக்காணின் அஞ்சாமல் எழுதி வாய்மை

வாழ்வதற்கு வழிவகுத்தல் உரிமை யாகும்”[121]

என்று பாடுவதன் மூலம் எழுத்தாளர் கொடுமையைக் காணுகிறபோது அஞ்சாமல் அதனை எடுத்துக் காட்டித் திருத்திட முயல வேண்டும் என்னும் கருத்தைச் சமுதாயத்தில் விதைக்கிறார்.

“மேலோங்கு கொடுமைகளைக் காணும்போது

காட்சிக்குப் புலியாகிக் கொடுமை மாளக்

கவிதைகளைப் பாய்ச்சுபவன் கவிஞன் ஆவான்”[122]

என்று பாடி, கொடுமைக்கெதிராகத் திரண்டெழுந்து தட்டிக் கேட்க வேண்டும் என்ற சிந்தனையைத் தூண்டுகிறார். உழைப்பின் பயன் உரியவர்களுக்குப் போய்ச் சேரவிடாமல் தடுக்கும் கொடியவரைத் தட்டிக் கேட்க முன்வர வேண்டுமென்பதை,

"பிழைப்பினைப் பறித்திடும் கூட்டமதைப்

பெரும்புலி போலெழுந் தோட்டிடுவோம்"[123]

என்று பாடுவதன் வாயிலாகச் சமுதாயத் தீமைகளை ஒழிப்பதில் மக்களும் பங்கேற்க வேண்டும் என்ற ஆசிரியரின் எண்ணவோட்டம் சிறப்பாக அமைந்துள்ளது. 'தீமை எங்கெழுமாகினும் வாளெடுப்போம்'[124] என்றும்,

"எம்முரிமை தீண்டுவரேல் எம்முயிர்கள் வெல்லமல்ல

எம்முனையும் துச்சமென எள்ளி நகைத்திடுவோம்

என்றெழுக காளையர்காள், ஏது தடை படைகள்?[125]

என்றும் பாடி கொடுமையைத் தட்டிக்கேட்குமாறு இளைய சமுதாயத்திற்கு அறைகூவல் விடுக்கிறார். மேலும்,

"உழைப்பவர் நலிந்து வாட

ஒருசிலர் சுரண்டி வாழ

இழைத்திடுங் கொடுமை காணின்

எதிர்த்திடும் உரிமை வேண்டும்"[126]

என்றும்,

"கொடுமைகள் கண்டுளந் திரியோம்-எமைக்

கொன்றிடி னுஞ்சமர் புரிவோம்"[127]

என்றும்,

"கலகம் விளைத்திடின் காய்ந்து தடுத்திடக்

கையை உயர்த்துதல் வேண்டுமடா"[128]

என்றும், 'எதிர்ப்பொன்று கண்டால் எழுந்ததைச் சாடுவாய்'[129] என்றும் அமையும் கவிதை அடிகளில் பாவேந்தரின் 'கொலை வாளினை எடடா – மிகு கொடியோர் செயல் அறவே' என்னும் அறச்சினம் பளிச்சிடுவதைக் காணமுடிகிறது.

**பண்பாடு:**

இரசிகமணி டி.கே.சி.அவர்களால் 'பண்பாடு' என்ற சொல், 'Culture' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு இணையாக அறிமுகம் செய்யப்பெற்றது.

> "உலக நடைமுறையினையும் சமுதாயம் ஒத்துக்கொண்ட நெறிகளையும் பொருந்தி நடத்தலே 'பண்பாடு' என்று எண்ணப்பெற்றது."[130]

நாட்டின் அரசியல், பொருளாதாரத்துறைகளுக்கு அடித்தளமாக அமைவது பண்பாடே.

"பற்றை விடுக்க லாமோ – நாட்டின்

பண்பைக் கெடுக்கலாமோ"[131]

எனவும்,

"பண்பினைக் கொல்களம் சூதுகள் - அதன்

படுகுழி யாகிடும் வாதுகள்"[132]

எனவும் அமையும் கவிதை அடிகள் பண்பாட்டின் இன்றியமையாமையைத் தெளிவுபடுத்துகின்றன.

"நல்லறிவைப் பண்பாட்டை ஒழுக்கந் தன்னை

நாகரிகக் கலைவளத்தை விஞ்ஞா னத்தைச்

சொல்லுவதற்குப் படைப்பாற்றல் கொண்டோன் கையில்

சுழல்கின்ற கோலொன்றே எழுது கோலாம்"[133]

என்னும் கவிதை வாயிலாகப் பண்பட்டை எழுதுபவனே எழுத்தாளன் என்று ஆணித்தரமாகச் சுட்டுகிறார் முடியரசன். திரைப்படத்துறை நாட்டின் பண்பாட்டைக் கெடுத்துவிட்டது என்பதனை,

"பண்பாடே சீர்குலைந்து போன தென்றால்

படத்துறைதான் முதற்களமாம்"[134]

என்று துணிவாகச் சுட்டுகிறார். மேலும்,

“பண்புமனம் அற்றவரே பார்முழுதும் ஈண்டிவிட்டான்
பண்புமனம் கொண்டவரைப் பார்த்தல் அரிதாகும்”[135]

என்று பாடுவதன் மூலம் பண்பாட்டுச் சீரழிவு புலப்படுகிறது. இதன் மூலம் இத்தகைய பண்பாட்டுச் சீரழிவு நம்நாட்டின் அரசியலையும் பொருளாதாரத்தையும் சிதைத்துள்ளது என்பதே ஆசிரியர் முடியரசனின் சிந்தனை என்பதை அறியவியலுகிறது. இத்தகைய நிலை மாறிட மக்கள் அனைவருக்கும் உரிய அறிவுரையாக,

“பண்புடையார்ப் பட்டுண் டுலகம் எனவுரைத்த
பண்புணர்ந் தாற்றுவமேல் பாரில் உயர்ந்திடுவோம்
ஆதலினால் பண்புயர்க அன்புயர்க என்றுசில
ஓதி முடித்தேன் உவந்து”[136]

என்று பாடிச் சென்றுள்ளார். பண்புகள் யாவையும் மலர்ந்து பண்புடையார் வாழும் சமுதாயமாக மாறவேண்டுமென்பதே ஆசிரியரின் உள்ளக்கிடக்கையாகும்.

**பொதுநலச் சிந்தனை**

உலகம் தோன்றியது முதல் சமுதாய நலன் கருதி உழைக்கும் நல்லோர் தோன்றிய வண்ணமே உள்ளனர். அவர்களால் உலகச் சமுதாயம் பயன்பெறுகிறது. என்பதும் உண்மை, இச்செய்தியை ‘உண்டால் அம்ம இவ்வுலகம்’ என்ற பாடலில் பயின்று வரும்,

“புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே”[137]

என்னும் அடிகளில் கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி சுட்டிச் சென்றுள்ளார். தன்னலம் கருதாத பொது நலச்சிந்தை கொண்டோர் இருப்பதாலேயே இவ்வுலகம் நிலைத்திருக்கிறது என்னும் கருத்து மக்களிடையே ஆளுமைத் திறனுக்குரிய பொதுநலச் சிந்தனையை ஊட்டுவதோடு, மேம்படுத்தவும் துணைசெய்யக் கூடியதாகவும் அமைகிறது. இன்றைய

சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் தன்னல உணர்வு மிகுந்து பொதுநல உணர்வு குறைந்து காணப்படுகிறது. இதனை,

"நிலத்தினில் தோன்றும் எப்பொரு ளாயினும்
நிறைபயன் பிறர்பெறப் பயன்பட லாயின
புலப்படும் அறிவோ ஆறுள வாயினும்
புரிந்திலன் பொதுநலம் அவனா மானிடன்?"[138]

என்னும் கவிதையில் சுட்டிச் செல்கிறார்.

"உடையவர் உழைப்போர் எல்லாம்
உலகினை நினைதல் வேண்டும்
இருமுனை யாகத் தம்மை
எண்ணியே பிரிந்து நின்றால்
வருமிடர் நாட்டுக் கன்றோ?
வளமெலாம் சிதையு மன்றோ?
ஒருமுனை யாக நின்றால்
உலகெலாம் வாழும் அன்றே"[139]

என்னும் கவிதை மூலம், எந்த நிலையிலும் பொதுநலவுணர்வே தேவை என்ற கருத்தினைச் சமுதாயத்தில் விதைக்கும் ஆசிரியரின் சிந்தனை சிறப்பாகக் கருதத்தக்கது. குடும்ப நலமே நாட்டின் நலம் என்பதால், குடும்ப நலத் திட்டத்தைப் பேணுதலே பொதுநல உணர்வாகும். இக்கருத்தினை,

"அங்கே பார் சுவரெல்லாம் முக்கோ ணங்கள்
அக்குறிதான் நம்குடும்ப நலத்தைக் காக்கும்
அறிவிப்பாம் அளவறிந்து பெறுதல் வேண்டும்"[140]

என்னும் கவிதை மூலம் சமுதாய மக்களிடையே உரைத்துச் சென்றுள்ளார். மேலும்,

"கடமையோடு கண்ணியமும் கட்டுப்பாடும்
காத்துவருங் குடும்பங்கள் தோன்றச் செய்வோம்

கொடுமைக்கே ஆளாகிப் பாழா காமல்

குடும்ப நலங் காப்பதனால் நாடுங் காப்போம்”[141]

என்பதன் மூலம் நாட்டுநலங் காக்க வேண்டுமென்னும் பொதுநல உணர்வை ஊட்டுகிறார். பொதுத்தொண்டு புரிய விரும்பும் தொண்டருக்கு உரிய தகுதிகள் சிலவற்றை வரையறை செய்துள்ள பாங்கு குறிக்கத்தக்கது. இதனை,

“தொண்டுபூண் டார்க்குத் தூயநல் லுளனும்

கண்டவர் பழிப்பாற் கலங்கா உரனும்

துயரெது வரினும் துளங்கா நிலையும்

அயரா உழைப்பும் ஆயும் அறிவும்

தந்நல மறுப்பும் தகவும் வேண்டும்”[142]

என்னும் கவிதையால் அறியலாம். தன்னலம் மறந்து, பொது நலம் நாடுங்கள் என்று மக்களுக்கு அறை கூவல் விடுக்கும் வகையில்,

“வீட்டின் தன்னலத்தைச் சற்றே விலக்கிவைத்து

நாட்டின் பொதுநலத்தை நாடுங்கள்! நாடிவிடின்

நானென்ற சொல்மறையும் நாமென்ற சொல்மலரும்;”[143]

என்று பாடியிருப்பதில் தன்னலம் கருதாமல் பிறர்நலம் பேணும் பொதுநலவுணர்வு தேவை என்பது புலப்படுகிறது.

**தொகுப்புரை**

இலக்கியம், தான் உருவான காலச் சமுதாயத்தை வெளிப்படுத்திக் காட்டும் தன்மை வாயந்ததென்பதால் இரண்டும் ஒன்றுக்கொன்று சங்கிலித்தொடர் போல் இணைந்திருக்கக் கூடியது என்பது ஆய்வில் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. சமுதாயம் எப்படி அமைந்தால் சிறப்பாக இருக்கும் என்பதற்கான வழிவகைகைளக் காட்டும் சமுதாய உணர்வு குறித்து விளக்கப்பட்டுள்ளது. படைப்புகளில் காணப்பெறும் சமுதாயச் சிந்தனைகளை வெளிப்படுத்துவதே சமுதாயப் பார்வை என வரையறை செய்யப்பட்டுள்ளது.

சாதி வேறுபாடு மறைவதற்குக் கல்வி கற்பதையும் குறள் நெறியில் நடப்பதையும் தீர்வுகளாக முன்வைத்துள்ளமை எண்ணற்குரியது. பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையையே மதமோதலுக்குரிய தீர்வாகச் சுட்டியிருப்பதும் புலப்படுத்தப்பட்டுள்ளது.

மக்கள் முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும் முட்டுக்கட்டைகளுள் ஒன்றான மூடநம்பிக்கை குறித்துப் படைப்புகளில் அமையும் சிந்தனை கோடிட்டுக் காட்டப்பட்டுளளது. சாதியச் சிக்கல் தீரக் கலப்பு மணத்தை உரிய தீர்வாக முன்வைக்கும் சிந்தனை கருதத்தக்கது.

தன்னலம் கருதாமல் பொதுநலம் விழைவோர், அரசியலுக்கு வந்து தொண்டாற்றினால் மட்டுமே அரசியல் ஒழுக்கக்கேடு மறையும் என்பதும், பொருளியல் சீர்கேடு நீங்கப் பொதுவுடைமையே தீர்வு என்பதும் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. நாட்டில் தாண்டவமாடும் இலஞ்சம் குறித்த சமுதாயப்பார்வை வெளிப்படுத்தப்பட்டுள்ளது. முடியரசன் கவிதைகளில் படம்பிடித்துக் காட்டப்படும் வறுமையின் கொடூரத்தன்மை ஆய்வில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

மக்களிடையே காணப்படும் ஒற்றுமையின்மையின் விளைவுகள், போதையின் விளைவுகள் ஆகியவற்றைப் படம்பிடித்துக்காட்டும் ஆசிரியரின் சமுதாயப் பார்வை ஆய்வில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

வரதட்சணைக் கொடுமை தீர இளைஞர்களிடையே விழிப்புணர்வு ஏற்பட வேண்டுமென்பதையும், இலட்சிய ஒருமை கொண்ட காதல் சமுதாய வளர்ச்சிக்குத் தேவை என்பதையும் தீர்வுகளாக முன்வைக்கும் சமுதாயப்பார்வை மதிப்பிடப்பட்டுள்ளது.

பெண்களுக்குப் பாதுகாப்பின்மை, கற்பு, விதவையர் நிலை, பெண்ணுரிமை ஆகியன குறித்த பெண்கள் நிலை மீதான பார்வை ஆய்வில் வெளிப்பட்டுள்ளது. சமூகக் கொடுமைகளைக் காணுமிடத்து அவற்றைத் தட்டிக் கேட்க வேண்டும் என்பதும், பண்பாடு காக்கப் பாடுபடல் வேண்டும் என்பதும், பொதுநல உணர்வைப் பேணலே நாட்டு நலனுக்கு உகந்தது என்பதும் ஆய்வில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள கவிதைகளில் காணப்பெறும் சமுதாயச் சிந்தனைகளின் அடிப்படையில் அவற்றின் சமுதாயப் பார்வை மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கம்

1. எஸ்.ஸ்ரீ.குமார், நாவலும் சமுதாயமும், ப.17

2. பா. பரமேஸ்வரன், பாரதிதாசன், வால்ட் விட்மன் - இரு பெரும் புரட்சிக்கவிஞர்கள் ஓர் ஒப்பிலக்கிய ஆய்வு, ப. 13

3. ச.வே. சுப்பிரமணியன், கம்பன் இலக்கிய உத்திகள், ப. 244

4. "Literature is not only the offer of social causes: It is also cause of social effects". – Wilbar s. Scolt, Five approaches of literary criticism, p. 126

5. க.நா. சுப்பிரமணியம், விமர்சனக்கலை, ப. 150

6. வை. இரத்தின சபாபதி (கட். ஆ), 'சைவ சமய இலக்கியங்கள் காட்டும் சமுதாய உணர்வுகள்,' சூ.இன்னாசி (பதி.ஆ), சமயமும் சமுதாயமும், ப. 150

7. கி. முத்துக்கூரி (கட்.ஆ), 'நொறுங்கல் சுட்டும் சமூகம்' , இ.ப.த.மன்ற முப்பதிரண்டாம் ஆய்வுக்கோவை, தொகுதி -3, ப. 1263

8. ப. கிருஷ்ணசாமி (தொகு. ஆ), ஜெயகாந்தன் இலக்கியத்தடம், ப.249

9. சு. வேங்கடராமன், 'அண்ணாவின் சிறுகதைகள் காட்டும் சமூகம்,' ஆய்வு நோக்கில், அண்ணா பக்.27-28

10. செயராணி ராசதுரை, பெண்கள் படைப்பில் சமூகம், ப. 187

11. கே.முத்தையா, தமிழ் இலக்கியங்கள் கூறும் தத்துவப் போராட்டங்கள், ப.89

12. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 325

13. ந.பிச்சமுத்து, மு.வ.வின் நாவல்களில் சமுதாய மறுமலச்சியின் தாக்கம், ப. 184

14. பி.யோகீசுரவன், தமிழ்க் கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள், ப. 156

15. மறைத்திரு சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள், கோகிலப்பான் கடிதங்கள், ப.16

16. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 15

17. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -7, ப. 91

18. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 76

19. மேலது., ப. 126

20. மேலது., ப. 133

21. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப. 165

22. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4, ப. 16

23. மேலது., ப. 154

24. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 3, ப. 89

25. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 5, ப. 165

26. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 85

27. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 113

28. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 5, ப. 173

29. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4, ப. 11

30. மேலது., ப.12

31. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 90

32. மேலது., ப.94

33. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4 ப.54

34. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -6, ப.37

35. மேலது., ப.140

36. மேலது., ப.18

37. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4, ப. 125

38. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப. 5

39. பூவை எஸ். ஆறுமுகம், ஜெயகாந்தன் முதல் சிவசங்கரி வரை, ப. 198

40. புறம். 183

41. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 80

42. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப. 16

43. சேதுமணி மணியன், தமிழ் நாவல்களில் மதிப்புகள், ப. 121

44. ஈ.வெ.ராமசாமி, கடவுள் ஒரு கற்பனையே, ப. 63

45. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 105

46. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள -2, ப. 133

47. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப. 65

48. மேலது., ப.164

49. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -6, ப. 126

50. மேலது., ப. 95

51. மேலது., ப. 122

52. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப. 67

53. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள -2, ப. 126

54. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -6, ப. 136

55. மேலது., ப.137

56. மேலது., ப.120

57. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 94

58. திரு.வி.கல்யாண சுந்தரனார், திரு.வி.க.வாழ்க்கைக் குறிப்புகள், பக்.778-779

59. பாரதிதாசன், மானுடம் போற்று, ப. 25

60. சு. வேங்கடராமன், அகிலன், ப. 64

61. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 86

62. மேலது., ப. 23

63. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப. 111

64. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 145

65. மேலது., ப.191

66. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 50

67. மேலது., ப.54

68. மேலது., ப. 107

69. மேலது., பக். 114-115

70. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப. 170

71. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப. 116

72. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4, ப. 55

73. மேலது., ப. 130

74. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 145

75. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 129

76. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 121

77. மேலது., ப.184

78. மேலது., ப. 230

79. சு.சமுத்திரம், செல்லரிக்கும் கரையான்கள், தினமணி கட்டுரை, நாள்: 24.5.99

80. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, ப. 42

81. மேலது., ப. 59

82. மேலது., ப. 47

83. மேலது., ப. 37

84. மேலது., ப. 55

85. மேலது., ப. 48

86. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -1, ப. 112

87. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 102

88. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப. 218

89. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -6, ப. 61

90. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 121

91. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4, ப. 122

92. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5, ப. 118

93. மேலது., ப. 165

94. மேலது., ப. 165

95. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 19

96. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப. 111

97. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 177

98. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 17

99. A.R.Gupta, Women in Hindu Soceity, P. 251

100. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப.71

101. மேலது., ப. 71

102. மேலது., ப. 73

103. சுப.கதிரேசன், கண்ணதாசன் கவிதைகளில் சமுதாயக் கூறுகள், வெளியிடப்படாத பி.எச்.டி. ஆய்வேடு, ப. 113

104. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப. 69

105. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 46

106. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 6, ப. 17

107. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 60

108. மேலது., ப. 63

109. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப. 183

110. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப. 171

111. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 4, ப. 84

112. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 1, ப. 272

113. மேலது., ப. 273

114. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 86

115. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 173

116. Encyclopedia Britanica. Vol. 1768. P.152

117. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 181

118. மேலது., ப. 91

119. மேலது., ப. 92

120. மேலது., ப. 180

121. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3, ப. 115

122. மேலது., ப. 86

123. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2, ப. 119

124. மேலது., ப. 221

125. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -3, ப. 162

126. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, ப. 121

127. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -5, ப. 41

128. மேலது., ப. 168

129. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 7

130. சோ.ந. கந்தசாமி, இலக்கியச் சோலையிலே, ப. 126

131. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2, ப. 138

132. மேலது., ப. 146

133. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -4, ப. 13

134. மேலது., ப. 29

135. மேலது., ப. 166

136. மேலது., ப. 169

137. புறம்: 182:5-9

138. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் -2 ப.189

139. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4, ப. 62

140. மேலது., ப. 136

141. மேலது., ப. 144

142. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 7, ப.83

143. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6, ப.110

## இயல் - 5

# முடியரசனின் காப்பியத் திறன்

### முன்னுரை

தனிப்பாடல்களாகப் பாடிய சங்க இலக்கிய மரபிற்குப் பின்னர் காப்பியங்கள் தோன்றின. சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐம்பெருங்காப்பியங்களும், யசோதர காவியம், உதயண குமார காவியம், நீலகேசி, நாககுமார காவியம், சூளாமணி ஆகிய ஐஞ்சிறுங் காப்பியங்களும் தோன்றின. இருபதாம் நூற்றாண்டில் பாரதியார், கண்ணன் பாட்டு, குயில்பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலான காப்பியங்களைப் படைத்தளித்துள்ளார். பாவேந்தர் பாரதிதாசன் பாண்டியன் பரிசு, சஞ்சீவி பருவதத்தின் சாரல், புரட்சிக்கவி, வீரத்தாய், தமிழச்சியின் கத்தி, இருண்டவீடு, எதிர்பாராத முத்தம் முதலான காப்பியங்களைப் படைத்துள்ளார். ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள முடியரசனும் பூங்கொடி, வீரத்தாய், ஊன்றுகோல் ஆகிய காப்பியங்களை இயற்றியுள்ளார். இக்காப்பியங்களின் அடிப்படையில் முடியரசனின் காப்பியத் திறன் குறித்து ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

### காப்பிய இலக்கணப் பொருத்தம்

காப்பியத்தைக் குறிக்கும் ‘எபிக்’ (Epic) என்ற சொல் ‘எபோஸ்’ (Epos) என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து தோன்றியதாகும். இக்கிரேக்கச் சொல்லின் பொருள், ‘சொல்’ அல்லது பாடல் என்பதாகும். கால ஓட்டத்தில் இதன் பொருள் விரிவடைந்து வீரயுகப் பண்பினைக் கருவாகக் கொண்ட, நீண்ட கூற்றுவகைப் பாடலைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

> “காப்பியம் ஒரு குறிக்கோளோடு மறைமுகமாக நல்லறம் வலியுறுத்தி, வாழ்வியலைச் சித்திரித்துக் காட்டுவதே. இதில் அக்கால மனிதனின் பண்பாடு, பழக்க வழக்கம், நாகரிகம் முதலானவற்றைத் தெளிவாக உணரலாம்”[1]

என்னும் கருத்தும் இங்குக் கருதத்தக்கது. மேலும்,

> “கதை மட்டும், காப்பியம் ஆக முடியாது; அக்கதையில் மனித சமுதாயத்தின் ஒருங்கிணைந்த பண்பினைக் கொண்டு வருகிறபோதுதான் அது காப்பியமாகிறது”[2]

என்னும் கருத்து காப்பியத்திற்கான வரையறையெனக் கொளல் பொருத்தமுடைய தெனலாம். ஜான் கிளார்க் என்பார் ‘History of epic poetry’ என்னும் நூலில் குறிப்பிடும் ‘காப்பியம் பேசும் வாழ்க்கை மனித சிந்தனையின் நிறை வாழ்க்கையை அல்லது மனிதத்துவம் பெற்ற ஒரு வாழ்க்கையைப் பேசுவதே சிறப்பு’[3] என்ற கருத்து காப்பியக் கொள்கை விளக்கமாக அமைகிறது.

காப்பியத்திற்கான இலக்கணத்தைத் தண்டியலங்காரம் தெளிவாக வரையறுத்துள்ளது. கடவுள் வாழ்த்தும், சிறப்புடையோர்களுக்கான வணக்கம் தெரிவித்தலும் அமைய வேண்டும். நூலினுள் கூறப்போகும் பொருளின் சாரத்தைக் குறிப்பிடவேண்டும். அறம், பொருள், இன்பம், வீடு, ஆகிய நான்கு நெறிகளையும் உரைத்திடல் வேண்டும். தன்னேரில்லாத தலைவன் வேண்டும். மலை, கடல், நாடு, நகரம் ஆகியவற்றின் வருணனைகள் இடம்பெற வேண்டும். கோடை, குளிர், பனி, மழை முதலான பருவ காலங்கள் மற்றும் சூரியதோயம், சந்திரோதயம் போன்ற நிலைகளை உரைத்தல் வேண்டும். திருமண நிகழ்ச்சி, முடிசூட்டல், நீராடல், மக்கட் பேறு முதலான நிகழ்வுகளைப் பற்றி உரைத்தல் வேண்டும். தலைவன் தலைவி ஊடலில் புலத்தலும், கலவியிற் களித்தலும் இடம்பெற வேண்டும்.

நல்ல ஒழுக்க நெறியில் மேவி, அமைச்சர்கள் ஆலோசனை வழங்குதல், தூது சென்று செய்திகளை உரைத்தல், போர்புரிந்து வெற்றி நிலை கொள்ளுதல் ஆகியன அமைதல் வேண்டும். சந்தி என்ற வகையில் தொடர்ந்து சருக்கம், இலம்பகம், பரிச்சேதம் என்னும் பாங்குடன் விளங்கி, எட்டு வகையான சுவையும் அதனால் விரவும் மெய்ப்பாடும் மேவக் கற்றறிந்த புலவர்களால் யாத்து அமையப் பெறுதல் பெருங்காப்பியம் எனப்படும் இதனை,

“அவற்றுள்
பெருங்காப் பியநிலை பேசுங்காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்று
ஏற்புடைத்தாகி, முன் வரவு இயன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிகர் இல்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றம் என்று இனையன புனைந்து

நன்மணம் புணர்த்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியில் புலத்தல் கலவியில் களித்தல் என்று
இன்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரம் தூது செலவு இகல் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றியது என்ப”[4]

என்னும் நூற்பாவால் அறிய முடிகிறது. இவ்வாறாமையும் காப்பிய இலக்கணத்தோடு, ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள முடியரசனின் காப்பியங்கள் பொருந்தும் பாங்கு குறித்து நோக்கப் பெறுகிறது. பூங்கொடி காப்பியத்தில் தமிழ்த் தெய்வ வணக்கம் இடம்பெற்றுள்ளது. இதனை,

“தாயே உயிரே தமிழே நினைவணங்கும்
சேயேன் பெறற்கரிய செல்வமே – நீயே
தலைநின்றாய் இவ்வுலகில் தாள்பணிந்தேன் நீயிங்
கிலையென்றால் இன்பமெனக் கேது”[5]

என்னும் பாடல் மூலம் அறியலாம். வீரகாவியத்தில் தமிழ் வாழ்த்து அமைந்துள்ளதனை,

“பாவலர்தம் நெஞ்சமெலாம் ஆட்சி செய்யும்
பைந்தமிழே நின்வாயிற் புறத்தே நிற்கும்
காவலன்யான்: ஆண்டறியேன் எனினும் நின்றன்
காவலன்யான்: எனையாளும் அம்மே உன்றன்
கோவிலிறும் வாயிலன்யான்: பெருமை முற்றும்
குறித்துரைக்கும் வாயிலன்யான்: அதனால் என்றன்

பாவிலுறும் சொல்லிலெலாம் எழுத்தி லெல்லாம்

பாட்டுவெறி யூட்டியருள் அன்னாய் நன்றே”[6]

என்ற பாடலின்வழி அறியவியலுகிறது, ஊன்றுகோல் காவியத்திலும் தமிழ் வாழ்த்து இடம்பெற்றுள்ளமையை,

“ஆழமாப் பயின்றே னல்லேன்

அகலமும் அற்றே யாகும்

யாழநின் னருளா லம்மே

யாப்பென ஒன்று கட்டிச்

சூழும்நின், னடிக்கே சூட்டிச்

சொக்கிநான் வணங்கு கின்றேன்

ஏழையேன் இளகும் நெஞ்சில்

என்றும்நீ இருத்தல் வேண்டும்”[7]

என்னும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது. ஊன்றுகோல் காப்பியத்தில் கூடுதலாகப் பதினாறு வரிகளைக் கொண்ட,

“ஊன்றுகோல் என்னும் ஒண்கதிர்க் காப்பியம்

சான்றுநூ லாகச் சடுதியிற் பாடினன்

பாடப் பிறந்த பழஞ்சபை மாணவன்

மூடப் பழக்கஞ் சாடிய பாவலன்

தூண்டுகை போலும் தொடர்பின் எனது

வேண்டுகை ஏற்று விருத்தியம் படைத்தனன்:

இலக்கியம் நிலமா இலக்கணம் அரணாக்

கவிதை கோலாக் கற்பனை கொடியா

வெல்க தமிழெனும் விறற்கொடி பொறியா

யாப்புப் படையா நல்லணி துணையாப்

புரட்சி முரசாப் புதுமை துடியாத்

தமிழை இகழ்வார் தன்னுயிர்ப் பகையா
அல்மொழி திணிப்பார் வல்வர வெதிர்த்துத்
தொடுமொழிப் போரில் தும்பை சூடியோன்
மொழியர சோச்சும் முதல்முடி யரசன்
குடியரசு போற்றுங் கொள்கை யோனே”[8]

என்னும் சிறப்புப்பாயிரமும் அமைந்துள்ளது.

“மொழிநலங்கருதி முற்பட்டுவரும் இப்பூங்கொடி இக்காலத்து, நிகழ்ச்சிகள் பலவற்றை உள்ளத்தில் இருத்தி ஊருக்கு உரைத்து நிற்பாள்”[9]

என்று ஆசிரியரே பூங்கொடி காப்பியத்தின் முன்னுரையில் குறிப்பிட் டிருப்பதன் வாயிலாகக் காப்பியத்தின் பாடுபொருளை அறியமுடிகிறது.

“காதல், வீரம், கையாற்றவலம் முப்பெருஞ் சுவையும் இப்பெருங்காப்பியத்தில் முகிழ்த்து நிற்கும். காதலும், அவலமும் கரையென நிற்க வீரப்பேராறு வீறிட்டுப் பாயும்”[10]

என்று ஆசிரியரே முன்னுரையில் குறிப்பிட்டிருப்பதன் வாயிலாக வீரகாவியத்தின் பேசுபொருளை அறியலாம். ‘பண்டிதமணியின் வரலாற்றைக் காப்பியமாக்கித் தருக என்று வ.சுப. மாணிக்கனார் கூறியதற்குத் தயங்கிய என்னிடம், இந்நூலின் மூலம் நம் மக்களுக்குத் தமிழ் உணர்வை ஊட்டலாம் என்று கூறினார். தமிழ் என்றவுடன் தலை வணங்கும் இயல்பினன் என்பதால் யானும் இசைந்தேன்’[11] என்று ஆசிரியர் முடியரசன் கூறுவதன் மூலம் காப்பியப் பாடுபொருள் தெள்ளிதின் விளங்குகிறது. பூங்கொடி காப்பியத்தில் தலைவியாகப் பூங்கொடியும், காதலையும் வீரத்தையும் பாடும் வீரகாவியத்தில் கதைத் தலைவனாக மாவேழனும், ஊன்றுகோல் காப்பியத் தலைவராகப் பண்டிதமணியும் அமைந்துள்ளனர். பூங்கொடி காப்பியத்தில்,

“ஓங்ககல் நெடுந்தெரு வேங்கைமா நகருள்
நிலவொளி வீசும் நெடுநிலை மாடம்”[12]

என்னும் பகுதியில் நகர் வருணனை இடம்பெற்றுள்ளது.

“காக்கின்ற புனலாற்றின் தென் புறத்தே

கடிமதில்சூழ் மூவகமென் றொருபேர் தாங்கும்

தேக்குபுகழ்த் திருநாடு விளங்கித் தோன்றும்;

திசையெட்டும் அந்நாட்டை வணங்கி நிற்கும்"[13]

என வீரகாவியத்தில் நாட்டு வருணனை அமைந்துள்ளது. ஊன்றுகோல் காப்பியத்தில்,

"வளரிளங் காடு சூழ்ந்து

வனப்பினிற் பொலிந்து தோன்றும்:

அளறிடை விளைந்து நிற்கும்

அணிவயல் அழகு கூட்டும்

களமர்கள் சென்று சென்று

கடமைகள் ஆற்றி மீள்வர்

குளமெலாம் மீன்கள் துள்ளிக்

குதித்திடுங் காட்சி யுண்டு"[14]

என நகர் வருணனை இடம் பெற்றுள்ளது. எனவே, மூன்று காப்பியங்களிலும் நாடு மற்றும் நகர் வருணனைகள் இடம்பெற்றுள்ளன. பூங்கொடி காப்பியத்தில் கூத்தன் - எழிலி திருமண நிகழ்வும், வீரகாவியத்தில், மாவேழன் - வேல்விழி திருமண நிகழ்வும், ஊன்றுகோல் காப்பியத்தில் பண்டிதமணி கதிரேசன் மண நிகழ்வும் இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

பூங்கொடி காவியத்தில் 'இருளின் கால்சீய்த் தெழுந்தனன் பரிதி'[15] எனச் சூரிய உதயம் குறிப்பிடப்பட்டுள்ளது. வீர காவியத்திலும்,

"மாயிருநீர்க் கடற்பரப்பில் உருவு காட்டி

வருவதுபோற் செங்கதிரோன் கீழை வானில்

ஞாயிறென முகங்காட்டித் தோன்றி வந்தான்"[16]

என்று சூரிய உதயக்காட்சியும் படைக்கப்பட்டுள்ளது. வீரகாவியத்தில் வரும்,

"தூதுக்கு நேர்ந்துசெலும் தோழி, மன்னன்

துய்யமணி மண்டபத்தில் தனித்தி ருக்கும்

போதுக்கு வந்தெதிரே தொழுது நின்றாள்”[17]

என்னும் பகுதி தூதுக்குச் சான்றாக அமைகிறதுதெனலாம்.

ஆய்விற்கு எடுத்துக்கொண்டுள்ள காப்பியங்களின் படலம், காதை முதலான பிரிவுகள் இங்குக் குறிக்கத்தக்கன. பூங்கொடி காப்பியம் விழாவயர் காதை முதலாக விடுதலைக் காதை ஈறாக முப்பத்தோரு காதைகளைக் கொண்டுள்ளது. வீரகாவியம், காட்சிப்படலம், திருமணப்படலம், மகப்பேறுப்படலம், படையெழுச்சிப் படலம், போர்ப்படலம் முதலான ஐந்து படலங்களையும் கொண்டு அமைகிறது. ஊன்றுகோல் காப்பியத்தில், கதிரெழு காதை முதல் சிலைகாண்காதை ஈறாகப் பதினேழு காதைகள் உள்ளன.

முடியரசனின் காப்பியங்களில் மெய்ப்பாடுகளும் அமைந்துள்ளமை சிறப்பாகச் சுட்டத்தக்கது. ஊன்றுகோல் காப்பியத்தலைவன் பண்டிதமணி கதிரேசனாரைப் பற்றிக் குறிப்பிடும் முடியரசன், ‘சிரிப்பிருக்கும் அவர்வாயில் பேசுங்காலை’[18] எனக் கூறுவதில் நகை வெளிப்படுகிறது. ஊன்றுகோல் காப்பியத்தில் வரும்,

“உருகிவரும் உணர்ச்சியினால் குழந்தை போல
ஒரு நொடியில் மாறிவிட்டார் ‘எனக்கு வந்த
பெருகுதுயர் தருநோயைப் பாரும் ஐயா
பிழைஎன்ன நான்செய்தேன் இறைவன் என்பால்
தருதுயரை யார்துடைப்பார் ஐயோ’ என்று
தாளாமல் அழுதழுது புலம்பி விட்டார்”[29]

என்னும் பகுதியில் அழுகை என்னும் மெய்ப்பாடு தோன்றுகிறது. பூங்கொடி காப்பியத்திலும் அழுகைச் சுவை பளிச்சிடுவதைக் காணமுடிகிறது. இதனை,

“மடமை யகற்ற மனங்கொளீஇ நிலத்துக்
கடமை யாற்றுழிக் கைதவ மாந்தரால்
பெற்றோ ரீங்குப் பட்டவெந் துயரால்
உள்ளிற் புண்ணாய் உருகிய குருதி
வெள்ளப் புனலாய் விழிவழி வழிந்தது;
கண்ணீ ரிடைவிரி கருவிளை மலரென

எண்ணும் படிக்கிரு கண்களும் இலங்கின"[20]

என்னும் பாடற்பகுதியால் அறியலாம். வீரகாவியத்தில் வரும்,

"என்செய்தேன் ஐயாவோ! பாவி நானே
கொன்றுவிட வாளெடுத்துப் பாய்ச்சி விட்டேன்
கொடுமையிது! கொடுமையிது! என்ற ரற்றி
நின்றஇரு கால்கள்தடு மாறக் கண்கள்
நிலைசுழல உலகனைத்தும் சுழலல் போலக்
குன்றனைய மாவேழன் மயக்க முற்றுக்
குமுறிவரும் விழிப்புனலைத் துடைத்து நின்று"[21]

என்ற பகுதியில் அழுகை வெடித்து வெளிக்கிளம்புவதைக் காணமுடிகிறது. பூங்கொடி காப்பியத்தில் அல்லி அஞ்சுவதாக வரும்,

"பிணஞ்சுடு காட்டில் பேயினங் குழுமி
நிணங்கொளத் திரிதலால் கொடுந்துயர் நேர்ந்திடும்
யாங்ஙனம் செல்லுகேம்? யாருந் துணையிலேம்!"[22]

என்னும் பகுதியை அச்சத்திற்குச் சான்றாகச் சுட்டலாம்.

பூங்கொடி காப்பியத்தில் தமிழன் பெருமையைப் பாடுவேன் என மீனவன் கூற்றாக வரும்,

"இசையும் கூத்தும் இலங்கிய தமிழோ
வசைபெறக் காண்பது? வையகம் எங்கும்
முழக்குவென் முழக்குவென் முத்தமிழ்ப் பெருமை
சழக்கர் பகைஎலாம் தவிடெனப் பொடியென
ஆக்குவென், எதிர்ப்பெலாம் நீக்குவன், மாசினைத்
தீக்கிரை யாக்கித் தேனிசை பாடுவென்"[23]

என்னும் பாடற்பகுதி, தறுகண் காரணமாகப் பிறக்கும் பெருமிதச் சுவையாகும். வீரகாவியத்தில வரும்,

"கரிகொண்டு பரிகொண்டு படைகள் கொண்டு

காத்தாலும் என்சினத்தைத் தடுக்கல் ஆற்றாய்!

எரிகொண்டு வாயிலெலாம் தீயும்: எங்கள்

இடிகொண்டு கோட்டைஎலாம் சாயும் என்றான்"[24]

என்னும் பகுதியினைப் பெருமிதச் சுவைக்குச் சான்றாகக் குறிப்பிடலாம்.

வீரகாவியத்தில் இளவரசி வேல்விழியின் காதலைத் தந்தைக்கு எடுத்துரைக்கிறாள் தோழி. அது கேட்டுச் சினந்து மன்னர் கூறுவதாக வரும்,

"தவறுசெயும் துணிவிட்கு வந்த தேயோ?

தன்னிளமைப் பருவத்தால் விளைந்த தேயோ

எவருடைய தூண்டுதலால் இதனைச் செய்ய

ஏந்திழையிங் கொருப்பட்டாள்! எனக் கனன்றான்"[25]

என்ற பகுதியை வெகுளிச் சுவைக்குச் சான்றாகக் கொள்ளமுடிகிறது.

பூங்கொடி காப்பியத்தில் பெருநிலக்கிழாரிடம் பூங்கொடி கூறுவதாக வரும்,

"தந்தாய் எனுஞ்சொற் புகன்றனை தாயே!

நந்தா விளக்கே! நான்பெறும் மகிழ்ச்சிக்

கெல்லையொன் றுரைக்க இயல்வதொன் றில்லை"[26]

என்னும் பாடற் பகுதியில் உவகைச் சுவை புலப்படுகிறது. இதே போன்று வீர காவியத்திலும் உவகைச் சுவை தோன்றுமிடங்கள் உண்டு. சான்றாக, "கரை கடந்த மகிழ்ச்சியினால் உரத்துக் கூவிக் கள்ளுண்டு களித்தான்போல் துள்ளிச் சென்றான்"[27] என்னும் பாடலடிகளைச் சுட்டலாம். எனவே ஆய்விற்கு எடுத்துக்கொண்ட முடியரசனின் காப்பியங்களில் வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல், தன்னேரிலாத் தலைவன், நாடு, நகர் வருணனை, திருமணம், தூது, படலம் - இயல் - காதைப் பிரிவுகள், மெய்ப்பாடுகள் முதலான காப்பிய இலக்கண வரையரைகள் பொருத்தமுற அமைந்திருக்கின்றன எனக் கொள்வதே பொருத்தமுடையது எனலாம்.

காப்பிய வகைமைகளும் இங்குக் குறிக்கத்தக்கனவாகும்.

**காப்பிய வகைமை:**

பொருண்மை மற்றும் கதை முடிவு முதலான அடிப்படையில் காப்பியங்கள் பலவாறு வகைப்படுத்தப்படுகின்றன.

> “படைப்பாளிகளை அடிப்படையாகக் கொண்டு காப்பியங்களை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று தனி ஒரு புலவனின் புலமைத் திறத்தால் உருவாக்கப்பட்டவை. மற்றது மக்கள் மத்தியில் பரவலாகக் காணப்படும் வரலாற்றுப் பழங்கதைகளைப் பயன்படுத்திப் பல்வேறு கால கட்டங்களில் பல்வேறு பெயர் அறியப்படாத புலவர் பெருமக்களால் படைக்கப்பெற்றவை”[28]

என்று கொலம்பியா கலைக்களஞ்சியம் கூறும் கருத்து, காப்பிய வகைமையைப் புலப்படுத்துகிறது. இவ்வகைமையின் அடிப்படையில் நோக்குமிடத்து, ஆய்விற்கு எடுத்துக்கொண்ட முடியரசனின் காப்பியங்கள் மூன்றும் தனி ஒரு புலவனின் புலமைத் திறத்தால் உருவாக்கப்பட்டவை என்னும் வகைமையில் அடங்குகின்றன என்று கூறலாம். காப்பியங்களை அடிப்படை நிலையிலும் பாகுபாடு செய்கின்றனர் திறனாய்வாளர்கள்.

> “ஒருநாட்டு அல்லது ஒரு காலகட்ட வரலாற்றின் எல்லாக் கூறுகளையும் முழு நிலையில் அறியக் காப்பியப் படைப்புகள் அடிப்படை நிலையில் இரண்டாகப் பாகுபடுத்தப்பெற்றது. ஒன்று முன்முறைக்காப்பியம் (primitive epic); மற்றது கலை அல்லது இலக்கியக் காப்பியம் (Art or literary epic)”[29]

என்னும் கூற்றின் வாயிலாக அறியவியலுகிறது. இவ்வகைப்பாட்டினடிப்படையில் பார்க்குமிடத்து, முடியரசனின் காப்பியங்கள் இலக்கியக் காப்பியம் என்ற வகைமையில் அமைகின்றன என்றே கருதலாம்.

முடியரசனின் காப்பியங்களைத் தனி ஒரு புலவன் தம் புலமைத்திறம் தோன்றுமாறு படைத்திட்ட இலக்கியக் காப்பியங்கள் எனக் குறிப்பிடலாம்.

**காப்பியக் கூறுகள்**

கதை, கரு, பாத்திரம், கிளைக்கதை, மொழிநடை, பின்னனி முதலானவை காப்பியக் கூறுகளாக அமைகின்றன.

**கதை:**

ஒரு காப்பியம் சிறப்பதற்குக் கதை மிகவும் இன்றியமையாததாகும். அது சிறந்ததாகவும், பரப்பும் விரிவும் கொண்டதாகவும் அமைய வேண்டும்.

> "கதை மட்டும் காப்பியம ஆக முடியாது: அக்கதையில் மனித சமுதாயத்தின் ஒருங்கிணைந்த பண்பினைக் கொண்டு வருகின்ற போதுதான் அது காப்பியமாகிறது"[30]

என்னும் கருத்தும்,

> "காப்பியக் கவிஞர் தனிமனித சமுதாய வாழ்வு பற்றிய பல்வேறு கூறுகளையும் இலக்கிய நோக்கோடு கண்டு பாடுதற்கேற்ற வகையிலேயே காப்பிய அமைப்பைக் கண்டனர்"[31]

என்ற கருத்தும் காப்பியத்தில் கதையின் இருப்பை விளக்குகின்றன.

**பூங்கொடி – கதை அமைப்பு:**

வள்ளி, அருண்மொழி ஆகிய இருவரும் வடிவேலின் மனைவியர். பூங்கொடி வடிவேலின் மகள். பூங்கொடி தன் தந்தை இறந்த செய்தியைக் கேட்டுக் கவலை அடைந்தாள்; அதனை மறப்பதற்காகத் தன் தோழி அல்லியுடன் பூங்காவிற்குச் சென்றாள், நூலகம் செல்லும் வழியில் அவளைப் பின் தொடர்ந்த கோமகனிடமிருந்து தப்பிக்கத் தாமரைக்கண்ணி முத்தக்கூத்தன் கல்லறை வழியாகப் பூங்கொடியை அனுப்பி வைத்தாள்.

கடல் நகரில் தாமரைக்கண்ணியிடம் தொல்காப்பியத்தைக் கற்றுத் தேர்ந்த பூங்கொடி, நாவலரிடம் திருக்குறளில் தேர்ச்சி பெற்றாள். நாவலூர் அமுதத்திடமிருந்து பெற்ற இரு இசைச் சுவடிகளின் தன்மையை மீனவனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார். கூத்தனைக் கலப்புத் திருமணம் செய்த எழிலியிடமிருந்து இலக்கணம் கற்றுக் கொண்டாள். தன் மீது ஒரு தலைக் காதல் கொண்ட கோமகனின் தொல்லையிலிருந்து விலக, பூங்கொடி பெருநிலக்கிழாரைச் சார்ந்தாள். அவர் பூங்கொடிக்கு நூல்நிலையம் அமைத்துத் தந்தார். கோமகன் கொலை செய்யப்பட்டதால், கொலைக் குற்றஞ் சாட்டப்பட்ட பூங்கொடி சிறை சென்று மீண்டாள்.

ஏலங்குழலி, பெருநிலக்கிழாரின் மனைவி என்பதை அறிந்த பூங்கொடியும், அருண்மொழியும் மகிழ்ச்சியடைந்தனர். தான் பல ஆண்டுக் காலமாக ஆராய்ந்து எழுதிய யாழ் நூல் ஒன்றைப் பூங்கொடிக்குப் பரிசாகத் தந்து மகிழ்ந்தார் மயில்வாகனர். மேலும் அவர்தம் வேண்டுகோளை ஏற்றுப் பல அயல்நாடுகளுக்குச் சென்ற பூங்கொடி இங்கிலாந்து நாட்டு அறிஞர் சான்மார், செக்கோசுலேவியா நாட்டு அறிஞர் கமிலர், உருசிய நாட்டு

அறிஞர் உருதின் ஆகியோரைச் சந்திக்கிறாள். அங்கும் தமிழ் மொழியைப் பரப்பும் பணியைச் செய்த பூங்கொடி பின்னர் தமிழகம் வந்து தமிழ், பொருளியல், அறிவியல் முதலான துறைகளில் பல நூல்களை எழுதினாள். மொழிக்காக நடந்த அறப்போரில் கலந்து கொண்ட பூங்கொடி மீண்டும் சிறைப்பட்டாள். உடல் நலம் குன்றிய பூங்கொடி அங்கேயே மறைகிறாள். இவ்வாறு நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஒவ்வொரு காதையாக்கிக் கதையை நடத்திச் செல்கிறார் கவிஞர் முடியரசன். தமிழுக்காகத் தன் உயிரையே தியாகம் செய்யும் தகுதி சான்ற பெண்ணாகப் பூங்கொடி என்ற பாத்திரத்தைப் படைத்து, அப்பாத்திரப் பெயரிலேயே முடியரசன் படைத்திருக்கும் ‘பூங்கொடி’ காப்பியத்திற்குத் தமிழ்க்காப்பிய உலகில் சிறப்பிடம் உண்டு என்று கூறலாம். இக்கருத்தை,

> “தமிழிலக்கியத்தின் போராட்ட வரலாற்றைப் பெருமித நடையில் இனிக்கப் பாடும் இக்காவியம் தமிழ்க்காவிய வரிசையில் தனியிடம் பெறத்தக்கது….. இந்நூற்றாண்டில் எழுந்த தமிழ்த் தேசியக் காப்பியம் இதுவே எனலாம்”[32]

என்னும் கூற்று அரண்செய்கிறது. பூங்கொடி காப்பியம் மணிமேகலை காப்பியத்தின் தாக்கத்தைப் பெற்றுள்ளது. இருப்பினும் சமயச் சார்போ, பிறமத நிந்தனையோ இல்லாத தூய தமிழ்க் காப்பியமாகும். சான்றாக மணிமேகலை, பூங்கொடி ஆகிய பாத்திரப் படைப்பைச் சுட்டலாம். தன் தோழி சுதமதியிடம் இதுவோ அன்னாய் காமத்து இயற்கை என்று கூறும் மணிமேகலையைப் பார்ப்போரைக் கவரும் வகையில் படைத்துள்ளார் சாத்தனார். ஆனால் முடியரசன், ஒரு மாற்றுக்குறையாத மாசுமருவற்ற தமிழ்மகளாகப் பூங்கொடி பாத்திரத்தைப் படைத்துள்ளமை சிறப்பாகப் போற்றத்தக்கது.

> “மணிமேகலையை அடியொற்றி இயற்றப் பெற்ற காப்பியமாக இருந்த போதிலும் அதனுள் இடம் பெற்றிருக்கும் இயற்கை இகழ்ந்த புனைவு நிகழ்ச்சிகளோ, சமயக்கோட்பாடுகளோ சிறிதும் விரவா வண்ணம் முடியரசன் தம் ‘பூங்கொடி’ காப்பியக் கதையைப் பின்னிச் சென்றுள்ளார். அவரது காப்பியப் புனைதிறனுக்குக் கட்டியம் கூறும் தனிக்கூறு இது எனலாம்”[33]

என்னும் கருத்தும் இங்கு எண்ணத்தக்கதாகும்.

**வீரகாவியம் - காப்பியக் கதையமைப்பு**

மாவேழன் என்பான் மூவகத்தின் படைத்தலைவன். போரில் வெல்ல இயலாத அவனைப் பரிகசித்ததால் காற்றை மிஞ்சும் வேகத்தில் செல்லும் குதிரையோடு அரசன் மதலைக்கோவை விடுத்து வெளியில் வந்தான். மரத்தடியில் குதிரையைக் கட்டிவிட்டுக் கண்ணயர்ந்த அவன், கண்விழித்தபோது குதிரையையும் காவலரையும் காணவில்லை. எனவே தனிமையில் வீதி வழியே நடந்த அவனை, வஞ்சகமாய் வயத்தரசன் தன்வயப்படுத்த முனைகிறான். தன் மீது காதல் கொண்ட வயத்தரசன் மகள் வேல்விழியைத் திருமணம் செய்து கொண்டான் மாவேழன். பகையரசன் மீது போர் தொடுக்கச் செல்லும் மாவேழன் கருவுற்றிருந்த தன் மனைவியிடம் அணிகலன் ஒன்றைக் கொடுத்துப் பெண் பிறந்தால் இதனைக் கழுத்தில் கட்டு; ஆண்பிறந்தால் கையில் கட்டு எனக் கூறிச் சென்றான். ஆண்மகன் பிறந்ததைக் கண்ட வேல்விழி இவனையும் போர்க்களத்திற்கு அழைத்துச் சென்று விடுவானெனக் கருதிப் பெண் பிறந்தாகச் செய்தி அனுப்பி வைத்தாள். வளர்ந்து வரும் முறுவலனைத் தகுதி வாய்ந்த வீரத் தலைவனெக் கருதிய இளைஞர்கள் அவனைக் 'கோளரி' எனப் பெயரிட்டழைத்துக் கொண்டாடினர்.

முறுவலன் தன் தந்தை மாவேழனின் சிறப்பையும், தன்னைப் பெண் என்று தந்தையிடம் பொய் கூறியுள்ளதையும் தாய் வேல்விழி மூலமாக அறிந்து கொண்டான். தாய் வேல்வழி மூலம் மாவேழனின் குதிரைக்குப் பிறந்த குதிரையைப் பெற்றுக் கொண்ட முறுவலன், மூவகத்தை வெற்றிகாணப் போருக்குச் சென்றான். அப்போரில் கோளரி வெண்கோடனைத் தோற்கடித்தால், அவன் மாவேழனைப் போருக்கு அனுப்பி வைத்தான்.

மதலைக்கோவின் பாசறையைச் சிதறடித்த கோளரியைத் தன்மகனென அறியாத மாவேழன் போருக்குச் சென்றான். தந்தைக்கும் மகனுக்குமிடையே நடந்த போரின்போது, 'மாவேழன் யார்' என்று வினவிய மகனிடம் உண்மையை மறைத்தான் மாவேழன். பெருங்களிறன் என்பான் 'மாவேழா' எனக் கூவியதால், தன் தந்தை பெயர் கேட்டு மலைத்து நின்றபோது, கோளரியைக் கொன்றான் மாவேழன். தன்னால் கொல்லப்பட்டவன்தான் தன் மகனென்பதை அறிந்த மாவேழனும் அலறி வீழ்ந்து இறந்தான. கணவனும் மகனும் இறந்ததை அறிந்த வேல்விழியும் மாண்டாள் எனக் கதையமைப்பு நிறைவு பெறுகிறது.

தமிழுக்குப் பெருமை சேர்க்கும் காதல், வீரம் ஆகிய வாழ்வியல் நெறிகளுக்கு முதன்மை தரும் வகையில் படைக்கப்பட்டுள்ள காப்பியம் 'வீரகாவியம்' ஆகும். இக்காப்பியக்கதை,

'விண்தொட்டு முகில்மணந்த மலைமு கட்டின்

வெண்ணிறத்துப் பனித்திரள்கள் உருகி நீராய்ப்

பண்பட்ட இசையெழுப்பி அருவி யாகிப்

பாறையெலாம் முழவொலிக்கப் பாய்ந்து வீழ்ந்து

மண்தொட்டுச் சென்றுநில மகளைக் கூடும்;

மனகிழப் பொன்கொழித்து வளங்கள் காட்டும்

தண்ணிட்டு விரைந்துசெலும் புனலா றென்னும்

தனிப்பெயரைத் தாங்குமது வையங் காக்கும்"34

எனப் பார்க்கச் சலியாத மலைமுகடு, அருவி, ஆறு ஆகியவற்றைக் கண் முன்னே காட்சிப்படுத்தும் காட்சிப்படலத்தோடு தொடங்குகிறது. அன்பு மகனும், ஆறுயிர்க் கணவனும் இறந்த நிலையில் வேல்விழி அழுது அரற்றித் தானும் வீழ்ந்து உயர்துறக்கிறாள் என்பதைப் படம்பிடித்துக் காட்டும் வகையிலமைந்த,

"கொழுநனுக்கு அழுவாளோ? சுமந்து பெற்ற

கொழுந்தினுக்கே அழுவாளோ? தனக்கு நேர்ந்த

பழுதினுக்கு அழுவாளோ? மகன்பாற் கொண்ட

பரிவினுக்கே அழுவாளோ? தந்தை கொன்ற

இழிவினுக்கே அழுவாளோ? அந்தோ! அந்தோ!

இரவினுக்கும் பகலினுக்கும் அழுதே தீர்த்தாள்

அழிவினுக்கே ஆளாகார் யாரே உள்ளார்?

அழுதழுது கரைந்துருகித் தீர்ந்தே போனாள்!"[35]

எனச் சொல்லில் அடங்காத அவலத்தைச் சுமந்திருக்கும் பாடலை உள்ளடக்கிய போர்ப்படலத்தோடு காப்பியக்கதை நிறைவுபெறுகிறது.

> "காதலும் வீரமும் அல்லது சிறந்த வாழ்க்கை யுணர்ச்சிகள் வேறில்லை. இவ்விரண்டிற்கும் இரண்டு இலக்கியங்கள் கண்ட தமிழ்மொழியின் முழுத்திறம் நமக்குப் பெருமிதம் தருவதாகும்"[36]

என்னும் கூற்றிற்கேற்பக் காதலையும், வீரத்தையும் பாடும் 'வீரகாவியம்' நாட்டுப்பற்றை முன்னிறுத்துவதாக அமைந்திருப்பதும் சிறப்பாகச் சுட்டத்தக்கது.

"'காட்சிப் படலம்', 'திருமணப்படலம்', 'மகப்பெறு படலம்' என இக்காப்பியத்துள் இடம்பெறும முதல் மூன்று படலங்களில் காதல் உணர்வு களிநடம் புரிவதைக் காணலாம். அடுத்து வரும் படையெழுச்சிப் படலம், 'போர்ப்படலம்' என்னும் இரு படலங்களில் வீர உணர்வின் பீடுமிகு நடையினைக் காணலாம்"[37]

என்னும் கருத்து இக்காப்பியக்கதை குறித்த சீரிய மதிப்புரையாகும்.

**ஊன்றுகோல்-காப்பியக்கதை**

பண்டிதமணி கதிரேசனாரின் பிறப்பு, பள்ளிப்படிப்பு, இலங்கைப் பயணம், மீண்டும் தமிழகம் வந்து கல்வி பயிலல், நகரத்தாரின் கொடைச்சிறப்பு, சன்மார்க்க சபை தோற்றம், திருமணம், வீமகவி என்னும் புலவரிடம் ஏற்பட்ட கருத்து வேறுபாடு, கதிரேசனின் பேச்சுவன்மை, பல்வேறு தமிழறிஞருடன் ஏற்பட்ட நட்பு, பேராசியரானது, பொதுப் பணி புரிந்தது, நோயுற்றது, மறைந்தது, சிலை நிறுவியது எனக் கதிரெழு காதை முதல் சிலைகாண் காதை வரை பதினேழு காதைகளைக் கொண்டு "ஊன்றுகோல்' காப்பியக் கதை நடைபெறுகிறது.

"சீரெழுத்துப் பொன்பூ திருமணிநீர் திங்கள்சொற்
கார்பருதி யானை கடலுகந் - தேர்மலைமா
கங்கை நிலம்பிறவுங் காண்டகைய முன்மொழிக்கு
மங்கலமாஞ் சொல்லின் வகை"[38]

என்னும் பாடல் குறிப்பிட்டுள்ளதன் அடிப்படையில் 'ஊன்றுகோல்' காப்பியம்,

"உலகெலாம் உய்ய வைக்கும்
உயரிய கொள்கை யாவும்
நிலவிய தொகையும் பாட்டும்
நிகழ்த்திய சங்கம் ஏறி
அலகிலாப் பெருமை பூண்டான்
அன்னையாம் தமிழ ணங்கின்
மலருலாம் அடிகள் வாழ்த்தி

மகிழ்வுற மனத்துள் வைப்பாம்"[39]

எனத் தொடங்கிப் பண்டிதமணி கதிரேசனின் கருத்துகளைப் பின்பற்றி நடக்க வருமாறு உலகத்தோரை அழைக்கும் விதமாக,

"பண்படும் ஒழுக்கம் மிக்கோர்
பகர்தரும் வாய்ச்சொல் யாவும்
ஒண்டமிழ் மாந்தர்க் கென்றும்
ஊன்றுகோ லாகுங் கண்டீர்
பண்டித மணியார் தந்த
பயன்தரும் ஊன்று கோலைக்
கொண்டுளந் தளரா வண்ணம்
கூடியே நடப்போம் வாரீர்!"[40]

என்று நிறைவு பெறுவது சிறப்பாகப் போற்றுதற்குரியது. பண்டிதமணி கதிரேசனாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூட்டியோ, குறைத்தோ சொல்லாமல், உள்ளதை உள்ளவாறே விளக்கிச் செல்கிறது ஊன்றுகோல் காப்பியம். இதனை, 'வாழ்க்கை வரலாற்றைப் புனைவுமிகுதியன்றி அவ்வாறே காப்பியமாக எழுதமுடியும் என்பதற்கு இஃது ஒரு தக்க சான்றாகும்'[41] என்னும் கூற்று அரண்செய்கிறதெனலாம்.

> "புலவனைப் பாடுபொருளாகக் கொண்ட தமிழ்க்காப்பியம், இதுவரை தோன்றியதில்லை. பண்டிதமணி வரலாறு காப்பியமாகுமேல், பல தமிழுணர்ச்சிக்கும் புதிய தமிழ் வளர்ச்சிக்கும் உரங்கிடைக்கும்"[42]

என்னும் கூற்று இக்காப்பியத்தின் தேவையைப் பறைசாற்றுவதாக அமைகிறது. காப்பியப் பரப்பெங்கும் கவிஞர் முடியரசன் ஊன்றுகோலைப் பற்றிக் கூறியிருப்பதன் மூலம் தமிழுணர்வு தளர்ச்சியடையும் நேரத்தில் அதனை மீண்டும் தூக்கி நிறுத்திடும் ஊன்றுகோலாகப் பயன்படுத்தியுள்ளமையை அறியவியலுகிறது.

**கதைக்கரு:**

ஒரு படைப்பின் மையக் கருத்தைக் குறிப்பிடப் பயன்படும் கலைச்சொல்லே கரு எனக் குறிக்கப்பெறுகிறது. 'உலக வாழ்வில் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும்

உற்றும் அறியும் எல்லா அனுபவங்களின் மூலம் படைப்பாளனுக்குக் கரு அமைகின்றது'[43] என்னும் கூற்று சமுதாயத்தைக் கூர்ந்து நோக்குவதன் மூலம் கரு பிறக்கிறது என்பதை உணர்த்துகிறது. 'கதைக்கரு எப்படி இருக்க வேண்டும் என்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது. இது தேசிய முக்கியத்துவம் பெற்றுக் காப்பியத்திற்குச் சிறப்புச் சேர்க்கும் நிலையில் அமைதல் வேண்டும். அதோடு நாட்டுப் பற்றையும் உணர்ச்சி மிக்க படைப்பாற்றல் திறத்தால் ஓர் இரக்க உணர்வினையும் வாசகர்தம் உள்ளத்தில் ஏற்படுத்துதல் வேண்டும்'[44] என்னும் கருத்து, கரு எவ்வாறு அமைந்தால் சிறப்புபெறும் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

பூங்கொடி தமிழின வளர்ச்சியைக் கருவாகக் கொண்ட காப்பியமாகும். காதலையும் வீரத்தையும் ஒருசேரப் போற்றும் தமிழனின் நாட்டுப்பற்றைக் கருவாகக் கொண்டது வீரகாவியம். ஊன்றுகோல் காப்பியம், மக்களுள் உயர்ந்தார் ஒருவரின் வரலாற்றைக் கருவாகக் கொண்டு அமைந்துள்ளது.

**கிளைக்கதை:**

காப்பியக் கூறுகளில் குறிப்பிடத்தக்கது, பொருத்தமான கிளைக்கதைகளைச் சிறப்பாகப் படைத்தலாகும். 'இலக்கியப் படைப்பில் ஒரு கதை அல்லது ஒரு நிகழ்ச்சி அல்லது ஒரு செயல் மூலக் கதை ஓட்டத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி, கதை ஓட்டத்திலமையும் ஒரு நிலைப்போக்கை மாற்றிச் சுவையூட்டும். மேலும் அவ்விலக்கியப் படைப்பின் பரப்பினை விரிவுபடுத்தவும், பல்வேறு சூழல்களுக்கும் பண்புகளுக்கும் இடனளிக்கவும் இவை துணைசெய்யும். இவ்விணைப்பு கதைப்பின்னலின் முக்கியமான விளைவுகளைச் சுட்டிக்காட்டவோ அல்லது புதிரை வளர்த்துச் செல்லவோ பயன்படும்'[45] என்பது அமெரிக்கானா கலைக்களஞ்சியம் தரும் விளக்கம். இதன் மூலம் கிளைக்கதையின் பயன்பாட்டை அறியமுடிகிறது.

ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ள பூங்கொடிக் காப்பியத்தில் அமைந்துள்ள 'கல்லறை காண் காதை' கிளைக்கதையாகும். கோமகனின் தொல்லையிலிருந்து தப்பிக்கப் பூங்கொடியும் அல்லியும் சுடுகாட்டுப் பாதையில் செல்வதே உகந்தது என்று தாமரைக் கண்ணி கூறுகிறாள். அப்பாதையில் செல்ல அஞ்சிய இருவரின் அச்சத்தைப் போக்குவதற்காகத் தாமரைக்கண்ணி தமிழ் மொழியைக் காக்கவும், பிறமொழி ஆதிக்கத்தை அகற்றவும் போராடி உயிர்நீத்த முத்தக்கூத்தன் வரலாற்றைக் கூறுவதே கல்லறை காண் காதையாகும். நாட்டில் ஏற்பட்ட பிறமொழி ஆதிக்கத்தை எதிர்த்து மான உணர்ச்சி கொண்டோர் அறப்போரில் ஈடுபட்டனர்; பலர் தடியடி தாங்கி இரத்தம் சிந்தி

இறந்தனர்; சிலர் சிறையிலடைக்கப்பட்டனர். அவர்களுள் முத்தக்கூத்தனும் ஒருவன். அவன் சிறையில் கொடுத்த உணவினை உண்ணாமல் உண்ணாநோன்பிருந்தான்.

“அயரினும் இவ்வுணா அருந்தேன் என்றனன்;

அடித்தனர் அவனை அருந்தேன் என்றனன்;

அடித்தனர் அவனை அஞ்சேன் என்றனன்;

அடித்தனர் அடித்தனர் அடித்தே கொன்றனர்”[46]

என்று முத்தக்கூத்தன் வரலாற்றைக் கூறி மொழிக்காக உயிர்நீத்த அவனுடைய கல்லறை தான் இது என்பதையும் தெரிவிக்கிறாள். மேலும் இந்தக் கல்லறையைப் பார்க்கும் யாருக்கும் துணிவு பிறக்கும் என்பதையும் எடுத்தியம்புகிறாள். இச்செய்தி,

“மொழிக்குயிர் ஈந்தநல் முத்தக் கூத்தன்

பளிக்கறைப் புதைகுழி பாங்குடன் மிளிரும்

அதனைக் காணின் அச்சம் தொலையும்

மதமுறு கொடியர் மனச்செருக் கொழிக்க

நெஞ்சுரம் ஏறும்; நிமிர்ந்து நடப்பீர்!”[47]

என்னும் பாடலடிகளின் வாயிலாகப் புலனாகிறது. பூங்கொடி காப்பியத்தின் மையப் பொருள் தமிழ்மொழிகாத்தலாகும். பூங்கொடியின் குறிக்கோளும் அதுவே. தலைமை மாந்தராகப் படைக்கப்பட்டிருக்கும் பூங்கொடியின் அச்சத்தைப் போக்கவும், அப்பாத்திரத்தின் குறிக்கோள் மேலும் வலுப்பெறவும் துணை செய்யும் விதமாக இக்கிளைக்கதை இடம் பெற்றுள்ளதால், காப்பியம் கூடுதல் சிறப்பைப் பெறுகிறது.

> “கிளைக்கதைகளை இடைமிடைந்து அமைத்துக் கொள்ளுவது காப்பியத்திற்கு ஓர் உயர்வையும் செறிவையும் தருவதோடு, காப்பியப் புலவனின் படைப்பாற்றல் திறத்தையும் தெற்றென விளக்கி நிற்கும்”[48]

என்னும் கூற்று இங்கு மனங்கொளத்தக்கது. ஆய்விற்கு எடுத்துக்கொண்ட முடியரசனின் எஞ்சிய காப்பியங்களில் கிளைக்கதைகள் இடம்பெறவில்லை.

**மொழிநடை:**

காப்பியக்கூறுகளுள் மொழிநடையும் முக்கிய இடம் வகிக்கிறது. மொழிநடை குறித்து,

> "ஒரு படைப்பாளனை இனங்கண்டு கொள்ளத் துணை நிற்கும் தனித்தன்மைக் கூறுகளின் தொகுதி"[49]

என்பார் மிடில்டன் மூரி.

> "தெளிவான சுருக்கமான – தனித்துவம் வாய்ந்த நல்ல மொழிப் பிரயோகமே மொழிநடை என்பதாகும்"[50]

என்று பிரித்தானியக் கலைக்களஞ்சியம் விளக்கம் தருகிறது.

> "படைப்பாளியையும் அவருடைய உள்ளத்தையும் அடையாளம் காட்டுகின்ற வகையில் மொழியைப் பயன்படுத்தும் ஆற்றல் நடையாகும்"[51]

என்னும் கருத்தும் சுட்டத்தக்கது.

"சி.எஸ்.லூயிஸ் காப்பிய நடை குறித்து மூன்று கருத்துகளைத் தெரிவிக்கிறார்.

1. காப்பியம் ஓரளவு சாதாரண வழக்கில் பயன்படாத சொற்களையும் தொடர்களையும் தொன்மைச் சிறப்பு மிக்க சொற்களையும் பயன்படுத்துதல் வேண்டும்.

2. சிறப்புப் பெயர்கள் குறிப்பாகப் பயங்கரம், உன்னதத் தன்மை, தனிச்சிறப்பு மிக்க பண்புகள், வழிபாடு, சிற்றின்பம் பற்றிய பெயர்களைப் பயன்படுத்துதல் வேண்டும்.

3. தொடர்ச்சியாகப் பல மறை குறிப்புகளைப் பயன்படுத்துதல் வேண்டும். இவை ஒளி, இருள், வேகம், மென்மை, அழகு, காதல் ஆகிய மனித அனுபவ அறிவிற்கு மேலும் ஒளியூட்டி மகிழ்விப்பனாக அமைதல் வேண்டும். இப்பண்புகள் ஆற்றல் மிக்க நடையில் கற்பனை நயம்பட உன்னத நிலையில் படைக்கப் பெறுதல் வேண்டும்."[52]

மூவகத்தின் படைத்தலைவன் மாவேழனுக்கும் வயத்தரசன் மகள் வேல்விழிக்கும் இடையே காதல் மலர்ந்தது. மாவேழனின் மனத்தில் மலரினும் மெல்லிய காதல் அரும்புவதைச் சித்திரிக்கும்,

“வேல்விழியென்று உனக்கிட்ட பெயர்பொ ருந்தும்

வெலற்கரிய எனைவென்ற கார ணத்தால்

வேல்விழிநின் துணையின்றி உலக மில்லை

செந்தமிழே நீயின்றி வாழ்வே யில்லை”[53]

என்னும் பகுதி, தனிச்சிறப்புமிக்க பண்பை வெளிப்படுத்தும் நடையாகிறது. வீரகாவியத்தில் வரும்,

“பாலைநிகர் மொழியுடையாள் வாராது ஏகின்

பாலைநிகர் வாழ்வாகும் என்றன் வாழ்வு!

மாலைஎனைச் சூட்டுவள்என்று எண்ணி நின்றேன்

மாலைஎனக்கு உண்டாக்கி நின்று விட்டாள்”[54]

என்னும் மாவேழனின் கூற்று, மறைக்குறிப்பைப் பயன்படுத்தும் நடைக்குச் சான்றாக அமைகிறது. பால், பாழ்நிலம் என்னும் இருவேறு பொருள் தரும் பாலை, மலர்மாலை, மயக்கம் என்னும் இருவேறு பொருள் தரும் மாலை ஆகிய இரு சொற்களை மறைக்குறிப்புடன் பயன்படுத்தியுள்ளமை சிறப்பாகப் போற்றத்தக்கது.

தொன்மையான சொற்களைப் பயன்படுத்தி அமைக்கப்பெறும் நடை சிறந்த காப்பிய நடையாகக் கருதப்பெறும் என்பதற்கேற்ப கா(பூங்கா), தெருள் (தெளிவு), ஊறு (துன்பம்), ஆழி(கடல்), பெருவளி(புயல்), கான்(காடு), மென்கால் (தென்றல்), வேட்டு (விரும்பி), காணம் (பொன்), வேய் (மூங்கில்), மறை (இரகசியம்) கரவு (வஞ்சனை), மடங்கல் (சிங்கம்) முதலான பல சொற்களை முடியரசன் தம் காப்பியங்களில் பயன்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.

காலையில் உதிக்கும் சூரியன் மாலை மறைதல் இயல்பு, ஆனால் காதலரின் இன்பத்திற்கு இடையூறு செய்ய வேண்டாமெனக் கருதி மறைந்ததாகக் காட்டுவது கவிஞரின் கற்பனை,

“கருத்தொருமை கொண்டிருவர் தம்முட் கூடிக்

கலந்துளத்தைப் பரிமாறுந் தலைக்கூட் டத்திற்

குருக்கமுடன் துடித்திருக்கும் பொழுதில், நாமேன்

ஊறாக நின்றிருக்க வேண்டு மென்று

கருத்ததனிற் செய்யவனும் நினைத்தான் போலக்

கடுகிவிரைந் தோங்குமலைத் தொடர்ப்பு றத்தே

உருக்கரந்து கதிர்சுருக்கி மறைந்து விட்டான்”[55]

என்னும் பகுதியைக் கவிஞரின் கற்பனை நயம் சான்ற நடைக்குச் சான்றாகக் கொள்ளலாம்.

**வருணனை:**

பொதுவாகக் காப்பியங்களில் வருணனை மிகுதியாக இடம்பெறும், ஆனால் அதற்கான வரையறுக்கப்பட்ட விதிகள் வகுத்துரைக்கப்பெறவில்லை,

“தண்டியலங்காரத்திலும், பின்னர்த் தோன்றிய மாறனலங்காரம், நவநீதப்பாட்டியல், சிதம்பரப்பட்டியல் ஆகியவற்றிலும் காப்பிய விதிகளை முழுமையாக விளக்கவில்லை”[56]

என்னும் கூற்றும் இங்குச் சிந்திக்கத்தக்கது. மேலும், ‘தொல்காப்பியத்திலும் காப்பியத்திற்கெனத் தனியாக விதி கூறப்படவில்லை. ஆனால் பாடல்களைப் புனைவதற்கு அதில் பொதுவாகக் கூறப்பட்டுள்ள விதிகள் காப்பியப் பாடலுக்குப் பொருந்தும்’[57] என்னும் கூற்றும் இணைத்து நோக்கற்பாலது. தண்டியலங்காரம் வகுத்துள்ள காப்பிய இலக்கண வரையறை – முடியரசனின் காப்பியங்களில் அமைந்துள்ள பாங்கு குறித்து மதிப்பிடப்பட்டுள்ளது. நாடு, நகர வருணைகள் சிறப்பாக இடம்பெற்றுள்ளன. அவை நீங்கலாக இடம்பெறும் இயற்கை மற்றும் பாத்திரம், இட வருணணைகள் கருப்பொருளுக்கேற்பவே அமைந்துள்ளன. ‘வருணனைகள் யாவும் தமிழிலக்கிய முன்னைய மரபில் மேற்கொண்டவையே’[58] என்னும் கருத்தும் குறிக்கத்தக்கது.

“செங்கதிர்ச் செல்வன் வெங்கதிர் புகுதாப்

பொங்கிய நிழல்செறி பூம்பொழிற் கயத்துள்

அடுத்தலர் இரவலன் அகக்குறிப் புணர்ந்து

கொடுத்தலால் மகிழ்ச்சி கூர்முகம் நோக்கி

மகிழ்வால் விரியும் வள்ளல் மனம்போல்

அகவிதழ் முறுக்கவிழ்ந் தலர்ந்த தாமரை

இலைசூழ் மலர்கள் எழிலைப் பாராய்!”[59]

என வரும் இயற்கை வருணனை சிறப்பாகச் சுட்டத்தக்கது.

"மாலைப் பொழுதில் மேலைத் திசையில்
நீலப் பச்சை கோலச் சிவப்பு
மஞ்சள் முதலா வண்ணங் குழைத்துச்
செஞ்சுடர்ப் பரிதி சென்றனன்"[60]

என்பது பொழுது வருணனையாகும்.

"சிரிப்பிருக்கும் அவர்வாயில் பேசும்காலை
சிந்தனையின் தெளிவிருக்கும் அவர்முகத்தில்
விரித்திருக்கும் ஒளியிருக்கும் விழியிரண்டில்
விரிநெற்றி பொலிவுபெற நீறிருக்கும்"[61]

எனவரும் பகுதி, பண்டிதமணி கதிரேசனாரின் உருவ வருணணையாகும்.

பூங்கொடியில் வரும், 'கருங்கற் சுவரும் இரும்பின் கம்பியும்'[62] என்னும் பாடலடி சிறைக் கோட்டத்தை வருணிக்கிறது. இவை போன்ற வருணனைகள் முடியரசனின் காப்பியங்களில் விரவிக்கிடக்கின்றன. காப்பியக்கூறுகளுள் பாத்திரப்படைப்பும் குறிக்கத்தக்கது.

**பாத்திரப்படைப்பு:**

காப்பியச் சிறப்பிற்குப் பாத்திரப் படைப்பும் ஒரு காரணமாகும். படைப்பாசிரியர் பாத்திரங்களைச் சிறந்த முறையில் படைத்து விட்டால், காப்பியம் பாதி வெற்றி பெற்றுவிடும். எனவே, பாத்திரம் என்பது கதைக் கருவிற்குத் துணையாக அமைவதோடு, வாசகர் நெஞ்சில் கருவை நிலை நாட்டுவதற்கும் உதவுகிறது. காப்பியத்திற்குக் கரு இன்றியமமையாததே; இருப்பினும், 'அது கதையின் எலும்பு போன்றது. எலும்பைச் சுற்றித் தசையாக அமைந்து உடலுக்குச் சிறப்புத் தருவது பாத்திரப் படைப்பாகிய தசையே. எனவே, கருவினும் சிறப்பு வாய்ந்தது பாத்திரமே'[63] என்று மேரென் எல்வுட் கூறுவதாக இரா. மோகன் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலம் படைப்பிலக்கியத்திற்கு மற்ற கூறுகளைவிடப் பாத்திரம் எந்த அளவுக்கு இன்றியமையாதது என்பதை அறியமுடிகிறது. 'பல்வேறுபட்ட பாத்திரங்களே காப்பியத்திற்கு உயிரூட்டுகின்றன. காப்பியத்திற்குப் பொலிவும் உணர்ச்சியும் ஊட்டுவதோடு வாசகருக்குச் சுவையூட்டி மகிழ்ச்சிப்படுத்தப்

பாத்திரங்களே துணை செய்கின்றன. மட்டுமின்றிக் கவிஞன் தனி உணர்ச்சியை வெளியிடும் களனாகவும் இப்பாத்திரங்கள் அமைகின்றன.’[64]

> “பல்வேறுபட்ட பாத்திரங்களைப் படைத்து அவற்றைச் செவ்வனே உலவவிடுதல் காப்பிய வெற்றிக்குப் பெருந்துணை செய்யும்”[65]

என்னும் கூற்றும் இங்கு நினைவுகூரத்தக்கது. ‘காப்பியத் தலைவன் யாருமே இல்லாத உலகில் தனிப்படுத்தப்பட்ட ஒரு மனிதப்படைப்பு அல்லன்; உலக வாழ்க்கையில் எந்த ஒரு செயலையும் வெற்றிகரமாக முடிக்க வேண்டுமென்றால் அதற்குப் பலரின் துணை தேவைப்படுகிறது. அதுபோல நீண்ட சிக்கல் மிகுந்த ஒரு முக்கிய செயலை விவரிக்கும் காப்பியப் புலவர் தன் மனம்போன போக்கில் பாத்திரங்களின் பண்பினை உயர்த்தியும், தாழ்த்தியும், பாத்திரத் தகுதியை மாற்றியும் அமைத்துக் கொள்கிறான்.’[66]

> “பாத்திரப்படைப்பு புதினங்களுக்கும் பெருங்காப்பியங்களுக்கும் ஓர் அணிகலனாகும். புதினத்திற்கும் காப்பியத்திற்கும் இலக்கிய மதிப்புத் தேடித் தரும் ஒரு கருவியாகும்.”[67]

என்னும் கூற்றும் இங்குச் சுட்டத்தக்கது. மேலும்,

> “கதைமாந்தர்களைப் படைத்துக் காட்டுவதென்பது அரிய கலை ஆகும். பாத்திர வார்ப்பில் கலைஞரின் தனித்திறம் புலனாகும். கதை மாந்தர் இன்றிக் கதை எழுத இயலாதது போல் ஆசிரியரின் சாயலின்றிக் கதைமாந்தர்களைக் காணுதலும் அரிதே”[68]

என்னும் கருத்தும் இங்குக் கோடிட்டுக் காட்டத்தக்கது. ஒரு காப்பியத்தில் தலைவனைப் படைப்பதும், பெண் பாத்திரத்தைப் படைப்பதும், எதிர்நிலைத்தலைவன், துணைப் பாத்திரங்கள் போன்ற அனைத்தையும் வெவ்வேறு உணர்வோடு படைப்பதும் ஆசிரியரே. எனவே,

> “தான் நினைக்கின்ற போதெல்லாம் வெவ்வேறு பாத்திரமாகத் தன்னை ஆக்கிக் கொள்கின்ற ஆசிரியனே, மாறுபட்ட, எண்ணற்ற பாத்திரங்களைப் படைக்க முடியும்.”[69]

ஒரு காப்பியத்தில் பல பாத்திரங்கள் படைக்கப்பட்டாலும் எல்லாம் ஒன்றுபோல இருக்கக் கூடாது. ஒவ்வொரு பாத்திரமும் ஒவ்வொரு நிலையில் வேறுபடல் வேண்டும்.

கம்பராமாயணம் சிறப்பதற்கு அதில் படைக்கப்பட்டுள்ள வேறுபட்ட பண்புடைய தனித்துவச் சிறப்புடைய பல்வேறு பாத்திரங்களே என்பர் தா.ஏ. ஞான.மூர்த்தி.[70] ஒரு பாத்திரம் பண்பு நலன், வருணனை மூலம் விளக்கப்படுவதை விடச் செயல் மூலம் விளக்கபப்டுவதே சிறப்பு[71] என்னும் கருத்தும் மனங்கொளத்தக்கது. ‘கொடுமைத் தன்மைமிக்க பாத்திரமாயினும் அவை காப்பியத்திற்கு ஒரு நல்ல காட்சி அமைப்பினை, சூழலை உருவாக்கித் தருவனவே; அவை புலவனின் ஒரு சோதனைக் களமாக அமைவதோடு, காப்பிய வளர்ச்சிக்கும் துணை செய்கின்றன’[72] என்னும் கூற்றும் பாத்திரப்படைப்பின் தனித்தன்மையை விளக்குவதாக அமைகிறது. பொதுவாகக் கதை மாந்தர்களைக் குறிக்கோள் நிலையிலும், நடப்பியல் நிலையிலும் படைத்துக் காட்டுவர். தனி வாழ்க்கையிலும் பொதுவாழ்க்கையிலும் குறிக்கோள் நெறியில் இயங்கும் பாத்திரங்களை முடியரசனின் காப்பியங்களில் காணமுடிகிறது.

**தலைமைப் பாத்திரம்:**

காப்பியத்தின் தலைமைப்பாத்திரம் தன்னிகரில்லாத் தலைவனாக இருத்தல் வேண்டுமென்பது தண்டியலங்காரம் வகுத்துள்ள வரையறையாகும்.

பூங்கொடி காப்பியத்தலைவி ‘பூங்கொடி’ இயல், இசைப் புலமை உடையவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். பல்வேறு நாடுகளிலும் பல சொல்லரங்குகளை நிகழ்த்தியும், புதுப்புது நூல்களைப் படைத்தும் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபட்டாள் புலமைத் திறம் வாய்ந்த பூங்கொடி என்பதனை,

“கலையெலாம் தமிழில் இலையெனுங் குறையினி

இலையெனச் செய்தனள்”[73]

என்னும் பாடலடிகளின்வழி அறியலாம். தமிழுக்காக வாழ்ந்து இறுதியில் தமிழுக்காகப் போராடி உயிர் நீத்த பூங்கொடி, குறிக்கோள் நெறியில் இயங்கும் தலைமைப் பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளமை போற்றுதற்குரியது.

காதலையும் வீரத்தையும் குறிக்கோளாகக் கொண்டிலங்கும் தலைமைப்பாத்திரமாக மாவேழன் என்பான் வீரகாவியத்தில் படைக்கப்பட்டுள்ளான். வயத்தரசன் மகள் வேல்விழி மீது மாவேழன் கொண்ட காதல்,

“வாளுக்கும் வேலுக்கும் தோற்ற தில்லை

வட்கார்தம் வில்லுக்குந் தோற்ற தில்லை

நீளக்கண் வேலுக்குத் தோற்று விட்டேன்

நீயுரைத்த சொல்லுக்குந் தோற்றேன் என்றான்”[74]

என்னும் பாடலடிகளில் வெளிப்படுகிறது. மேலும்,

“மிக்காரும் ஒப்பாரும் காணாச் செம்மல்
மேவலரை நடுக்குறுத்தும் இமையா நோக்கன்
புக்காரும் வெலற்கரியன்; அவன்பேர் கேட்டால்
பூவேந்தர் நடுநடுங்கிப் பதுங்கி நிற்பர்”[75]

என்ற பாடலடிகளில் மாவேழனின் வீரமும் தன்னேரிலாத் தகைமையும் வெளிப்படுகின்றன.

ஊன்றுகோல் காப்பியத்தில் காப்பிய நாயகர் பண்டிதமணி. அவருடைய பிறப்பு முதல் மறைவு வரை பேசும் இக் காப்பியம், பண்டிதமணியின் தன்னிகரில்லாத் தமிழ்ப் புலமையை விரிவாகக் கூறுகிறது.

“தலைமகன் இவனுக் குற்ற
தாழ்வினைக் கண்டு நொந்தாள்
இலைநிகர் இவனுக் கென்ன
இவனைநான் உயர்வு செய்வேன்
கலைமலி புலமை ஈவேன்
கதிரொளி பரவ வென்று
தலையளி சொரிந்து நின்றாள்
தமிழன்னை அவனை நோக்கி”[76]

என்னும் பாடல் ஊன்றுகோல் காப்பியத் தலைமையைத் தெளிவுபடுத்துகிறது.

> “வழிவழி வந்த இலக்கிய மாந்தர்களையும் வாழ்வில் எதிர்ப்பட்டோரையும் தன் அகத்தன்மையையும் பல்வேறு அளவுகளில் கலந்து படைப்பாளன் இலக்கிய மாந்தரைப் படைக்கின்றான்”[77]

என்ற கூற்றுக்கிணங்க முடியரசனின் காப்பியங்களில் தலைமைப்பாத்திரங்கள் அமைந்துள்ளன எனக் கொள்வதே பொருத்தமுடையது.

முடியரசன் காப்பியங்களில் இடம்பெற்றுள்ள துணைப்பாத்திரங்களும் இங்குக் குறிக்கத்தக்கன.

**துணைப்பாத்திரங்கள்:**

கதையின் கட்டுக்கோப்பு, பாத்திரத்தின் உறவுநிலை, நடப்பியல் தன்மை ஆகியவற்றை விளக்கத் துணைப்பாத்திரம் உதவுகிறது. கதைப் போக்கில் சிறுசிறு விளைவுகளை ஏற்படுத்தவும், குறிப்பிட்ட ஒரு சுவையைப் புகுத்தவும், தலைமை, இணைப் பாத்திரங்களின் பண்புகளை விளக்கவும், படைப்பாளன் தன் கருத்தை வெளிப்படுத்தவும் துணைப்பாத்திரங்களைப் படைக்கின்றார் ஆசிரியர்.

பூங்கொடி காப்பியத்தில் அருண்மொழி, வஞ்சி, தேன்மொழி, அல்லி, கோமகன், தாமரைக்கண்ணி, நாவலூர் அமுதம், மலையுறையடிகள், மீனவன், வில்லவன், பொன்னி, ஏமகானன், தங்கத்தேவன், எழிலி, சண்டிலி, பெருநிலக்கிழார் ஆகிய பதினாறு பாத்திரங்களும் துணைப்பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளன.

வீரகாவியத்தில், மதலைக்கோ, வெண்கோடன், மானத்தி, கோவூரன், வெண்பூதன், நம்பியன், பெருங்கனகன், வயத்தரசன், வேல்விழி, தலைத்தோழி, முறுவலன், மாவலியன், தடவலியன், இளவேலன் ஆகிய பதினான்கு பாத்திரங்களும் துணைப்பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளன.

ஊன்றுகோல் காப்பியத்தில், முத்துக்கருப்பன், சிவப்பி, அரசஞ்சண்முகனார், தருவை நாராயண சாத்திரியார், பழநியப்பன், அண்ணாமலையரசர், சோமசுந்தர பாரதியார், உ.வே.சாமிநாதய்யர், வீமகவி, முருகப்பர், குன்றக்குடி அடிகளார், பாண்டித்துரைத் தேவர், திரு.வி.க., மறைமலையடிகள், மீனாட்சி ஆகிய பதினைந்து பாத்திரங்களும் துணைப்பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளன.

**பெயர் மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்கள்:**

ஒரு காப்பியம் தோன்றும் போது, அதன் முன்னிழ்வுகளைக் கூற வேண்டிய நிலையும், பாத்திரங்களைப் புகுத்தும்போது அதன் உறவு நிலைகளைச் சுட்ட வேண்டிய நிலையும் உள்ளது. இது போன்ற நிலையில் காப்பியத்தை ஒழுங்குபடுத்தும்போது சிலவற்றை மேலோட்டமாகக் கூற வேண்டியுள்ளது. கோவலனையும் கண்ணகியையும் கூறவந்த இளங்கோவடிகள் இருவரின் பெற்றோரையும் குறிப்பிடுகின்றார். இங்கு அவர்களின் பெயர்கள் மட்டுமே இடம்பெறுகின்றன. எனவே, காப்பியத்தில் பாத்திரமாக இடம் பெறாமல் பெயர் மட்டும் வந்து போகும் பாத்திரங்களைப் பெயர் மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்கள் எனக் குறிப்பிடலாம்.

பூங்கொடி காப்பியத்தில் வடிவேல், பெருநிதிக்கிழவன், ஏலங்குழலி ஆகிய மூன்று பாத்திரங்களும், வீரகாவியத்தில் மானத்தியின் தந்தை என்ற ஒரு பாத்திரமும், ஊன்றுகோல் காப்பியத்தில் க. சங்கரநாராயணப்பிள்ளை, நடேச ஐயர், மல்லிங்கசாமி, முத்துசாமிப்புலவர், வீர. செல்லப்பனார், வ.சுப.மாணிக்கம், பழநியப்பர் பெயரர் சீனிவாசன் ஆகிய ஏழு பாத்திரங்களும் எனப் பதினோரு பாத்திரங்கள் பெயர் மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்களாக அமைகின்றன.

**காப்பிய நயம்:**

காப்பியத்தில் அணி நயம், சொல்நயம் முதலான நயங்கள் அமைந்து காப்பியத்திற்குச் சிறப்புச் சேர்க்கின்றன. முடியரசனின் காப்பியங்களில் அமையும் நயங்கள் சிலவற்றைச் சான்றாகச் சுட்டலாம்.

பூங்கொடி காப்பியத்தில் கடல்நகரில் பூங்கொடி பேசியதைப் பற்றிக் கூறும் முடியரசன்,

"நடை எழில் காட்டும் நல்லதோர் சொன்மழை
பொழிந்தனள்; மக்கள் புதுமழை கண்டு
விளைந்தெழு பயிர் போல் விம்மிதம் கொண்டனர்"[78]

என்று பாடிச் சென்றுள்ளதில் உவமையணி இடம் பெற்றுள்ளது.

மணிநகரில் மலையுறையடிகள் நடத்திய முத்தமிழ் மாநாட்டில் ஆடிய மகளிர் குறித்து,

"பவள இதழால், பைந்தளிர் விரலால்
பொற்புடை நுதலால் புருவச் சிலையால்"[79]

எனப்பாடுவதில் உருவக அணி பயின்று வந்துள்ளது. வீரகாவியத்தில் இடம்பெறும்,

"ஆடிக்குள் காண்பார்தம் தோற்ற மெல்லாம்
அவ்வாறே தோன்றுதல்போல் தந்தை சாயல்
நீடிக்கும் பெருவீரம், செய்கை பண்பு
நினைவெல்லாம் அப்படியே ஒக்கின் றானால்"[80]

என்னும் பாடலில் உவமையணி பயின்றுவந்துள்ளது கருதத்தக்கது.

ஊன்றுகோல் காப்பியத்தில் காப்பியத் தலைவன் பண்டிதமணி பிறந்த ஊர் வளத்தைப் பாடும்,

"குணங்களில் நிறையும் நீர்தான்
குறையினும் ஆங்கு வாழ்வோர்
உளங்களில் நிறையும் ஈரம்
உலருதல் என்றுங் காணார்
வளங்களிற் சுருங்கு மேனும்
வழங்கலிற் சுருங்காக் கையர்
களங்களில் பதர்க ளுண்டு
காளையர் மணிகள் போல்வர்"[81]

என்ற பாடலில் தன்மையணி பளிச்சிடுவதைக் காணமுடிகிறது.

**சொல்நயம்:**

காப்பியங்களில் மிளிரும் சொல்நயங்கள் குறிக்கத்தக்கவை ஆகும். முடியரசனின் பூங்கொடி காப்பியத்தில் வரும்,

"அரிவை யிகழ்ந்தனை! அறிவை யிகழ்ந்தனை!
தெரிவை விரைவினில் தெரிவை திறமெலாம்"[82]

என்னும் பாடலில் அரிவை-பெண், அறிவை-அறிவு, தெரிவை-தெரிவாய், தெரிவை-பெண் என்று பொருள்படும் வகையில் சொற்களை நயமுடன் பயன்படுத்தியிருப்பது சிறப்பாகச் சுட்டத்தக்கது. வீரகாவியத்தில் வரும்,

"தினவடங்கு மாவேழன், பெற்ற மைந்தன்
திருமுகத்தை மறுமுறையும் கூர்ந்து நோக்க
மணமடங்கிச் சினமடங்கி ஆற்றல் சான்ற
மறமடங்கிச் செயலடங்கிப் பொருது வெல்லும்
நினைவடங்கி உடலடங்கிச் சுழன்று பாயும்
நிலையடங்கி கொலையடங்கி நாட்டை யாளும்
கனவடங்கிச் சினமடங்கல் மதிமு கந்தான்

கலைமலிந்து மும்மடங்கு பொலியக் கண்டான்”[83]

என்னும் பாடல் கவிஞரின் சொல்நயத்திற்குச் சிறந்த சான்றாகும். மேலும் ஊன்றுகோல் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மகிபாலன்பட்டி ஊர் மக்கள் திறத்தைப் பற்றி அமையும்,

“நிழல்களே சாயும் அன்றி
நிலையினிற் சாயா நெஞ்சர்
கழனியில் வரம்பு செய்வர்
கற்பதில் வரம்பு செய்யார்
உழவினிற் களைகள் தோன்றும்
உறவினிற் களைகள் காணார்
அழல்களே சுடுவ தன்றி
அவர்மொழி சுடுவதில்லை”[84]

என்ற பாடலையும் முடியரசனின் சொல் நயத்திற்குச் சான்றாகச் சுட்ட முடிகிறது.

**தொகுப்புரை:**

காப்பிய இலக்கண வரையறையோடு முடியரசன் காப்பியங்களின் பொருத்தப்பாடு ஆய்வில் எடுத்துதுகாட்டப்பெற்றுள்ளது. வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல், தன்னேரில்லாத் தலைவன், நாடு, நகர் வருணனை, திருமணம், தூது, படலம்-இயல்-காதைப் பிரிவுகள், மெய்ப்பாடுகள் முதலான காப்பிய இலக்கண வரையறைகள் பொருத்தமுற அமைந்துள்ளமை ஆய்வின்வழி கண்டறியப்பட்டுள்ளது.

முடியரசனின் காப்பியங்கள் இலக்கியக் காப்பியம் என்ற வகைமையில் அடங்குகின்றன. காப்பியக் கூறுகளான கதை, கரு, கிளைக்கதை, மொழி நடை, பின்னணி, ஆகியவை குறித்தும் ஆய்வுக் காப்பியங்களின் வழியே சான்றுகளுடன் புலப்படுத்தப்பெற்றுள்ளன.

கருவை வெளிக்கொணரவும், கதையை நடத்திச் செல்லவும் பாத்திரம் என்பது இன்றியமையாத ஒன்றாகும். கதை, கரு, கிளைக்கதை, மொழிநடை, பின்னணி போன்றவை காப்பியக் கூறுகளாக அமைந்திருப்பினும், பாத்திரமே முக்கியக் கூறாக விளங்குவதால் அதன் தனித்தன்மை குறித்து ஆராயப்பட்டுள்ளது.

முடியரசனின் காப்பியங்களில் வரும் பாத்திரங்களின் எண்ணிக்கை வரையறை செய்யப்பட்டுப் பட்டியலிடப்பட்டுள்ளது. பாத்திரத்தின் தன்மை, செயல்பாடு ஆகியவற்றைக்

கொண்டு அவை தலைமைப்பாத்திரம், துணைப்பாத்திரம் என வகைமை செய்யப்பட்டுள்ளது. பாத்திரமாக இடம் பெறாமல் ஆங்காங்குப் பெயர்மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்களும் ஆய்வின் வழி எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

காப்பியங்களில் இடம்பெறும் அணிநயம், சொல்நயம் முதலான காப்பிய நயங்கள் சான்றுகளுடன் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1.இரா.காசிராஜன், உலகக்காப்பியங்கள், பக். 20-21

2.வ.சுப.மாணிக்கம், கம்பர், ப. 42

3. John Clark, History of Epic Poetry, – P. 32

4. தண்டி நூ.8

5. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.15

6. மேலது. , ப.256

7. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப. 35

8. மேலது., ப. 5

9. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப.9

10. மேலது., ப. 254

11. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப. 6

12. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 135

13. மேலது, ப. 258

14. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப. 38

15. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 52

16. மேலது ப. 324

17. மேலது ப.313

18. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப. 88

19. மேலது, ப. 139

20. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 26

21. மேலது, ப. 445

22. மேலது., பக். 46-47

23. மேலது., ப.98

24. மேலது., ப. 384

25. மேலது., ப. 316

26. மேலது., ப 162

27. மேலது., ப. 407

28. மேற்கோள்: இரா.காசிராஜன், உலகக்காப்பியங்கள், ப. 3

29. மேலது ப.31

30. வ.சுப.மாணிக்கம், கம்பர், ப. 42

31. ச.வே.சுப்பிரமணியன், காப்பியப் புனைதிறன், பக். 20-21

32. மா. இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.157

33. இரா.மோகன், முடியரசன், ப. 66

34. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7, ப. 258

35. மேலது ப.456

36. வ.சுப. மாணிக்கம், தமிழக்காதல், ப. 98

37. இரா.மோகன், முடியரசன், ப. 70

38. இரத்தினவேலு முதலியார், வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல் மூலமும் உரையும், ப.16

39. முடியரசன், கவியரசர் முடியரசன் படைப்புகள - 8, ப. 36

40. மேலது., ப. 154

41. தமிழண்ணல், தமிழ்க்கதிர், கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8, ப. 12

42. வ.சுப.மாணிக்கம், விழாப்பதிப்புரை, மேலது. ப. 4

43. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப. 56

44. John Clark, History of Epic Poetry, P. 32

45. மேற்கோள்: இரா.காசிராஜன், உலகக்காப்பியங்கள், ப.13

46. முடியரசன், பூங்கொடி 6: 136-139

47. மேலது. 6:61-65

48. ஔவை சு.துரைசாமி, சீவகசிந்தாமணி ஆராய்ச்சி, ப. 43

49. சு.வேங்கட்ராமன் (பதி.ஆ)., மு.வ.கருத்தரங்கக் கட்டுரைகள், ப. 83

50. மேற்கோள் இரா.காசிராஜன், உலகக் காப்பியங்கள், ப. 14

51. ச. முருகேசன், சாகித்திய அகாடமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப் பார்வை, ப. 97

52. மேற்கோள்: இரா.காசிராஜன், உலகக்காப்பியங்கள், ப. 16

53. முடியரசன், வீர.இ.28: பா.113

54. மேலது இ.27 பா. 102

55. மேலது. இ. 25 பா. 97

56. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப. 318

57. தி.சுந்தரம்பாள், பெரியபுராணத்தில் காப்பியக் கொள்கைகள், ப. 295

58. து.சீனிச்சாமி, தமிழ்க் காப்பிய அமைப்பு, ப. 301

59. முடியரசன், பூங்.4:3-9

60. மேலது.6:1-4

61. முடியரசன், ஊன்றுகோல்,8.6:1-4

62. முடியரசன், பூங் 31:1

63. இரா.மோகன், டாக்டர் மு.வ.வின் நாவல்கள், ப. 46

64. T.E. Gnanamoorthy, A. Critical Study of Civaka Cintamani, P. 102

65. இரா. காசிராஜன், தமிழ் இலக்கியக் கொள்கை, ப. 71

66. John Clark, History of Epic Poetry, P. 66

67. மேற்கோள்: வெ.கனகசுந்தரம், ஜெகசிற்பியனின் சமூகப் புதினங்கள், ப.197

68. சா.தியாகமணி, சு.சமுத்திரம் படைப்புகளில் பெண்ணியம், ப. 71

69. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப. 46

70. மேற்கோள்: இரா.காசிராஜன், உலகக் காப்பியங்கள், ப. 12

71. வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், ப. 303

72. வ.சுப. மாணிக்கம், கம்பர், ப. 79

73. முடியரசன், பூங் 27:152 – 153

74. முடியரசன், வீர. 27. 112: 5-8

75. மேலது. 2:7

76. முடியரசன், ஊன்றுகோல், 2:19

77. The creation of characters may be supposed to blend invarying degrees, inherited literary types, persons observed and the self-Rene welleck & Austin Warren, Theory of Literature, P.79

78. முடியரசன், பூங் 7:74-76

79. மேலது, 29:14-15

80. முடியரசன், வீர.57. பா. 268.

81. முடியரசன், ஊன்றுகோல்,1:11

82. முடியரசன், பூங்,22:179-180

83. முடியரசன், வீர.117:பா.471

84. முடியரசன், ஊன்றுகோல். 1:12

# ஆய்வு முடிவுரை

'முடியரசனின் கவிதைத் திறன்' என்னும் தலைப்பின் கீழ் ஆய்வு செய்ததன் வழியே கீழ்க்கண்ட முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

72. வ.சுப. மாணிக்கம், கம்பர், ப. 79

73. முடியரசன், பூங் 27:152 – 153

74. முடியரசன், வீர. 27. 112: 5-8

75. மேலது. 2:7

76. முடியரசன், ஊன்றுகோல், 2:19

77. The creation of characters may be supposed to blend invarying degrees, inherited literary types, persons observed and the self-Rene welleck & Austin Warren, Theory of Literature, P.79

78. முடியரசன், பூங் 7:74-76

79. மேலது, 29:14-15

80. முடியரசன், வீர.57. பா. 268.

81. முடியரசன், ஊன்றுகோல்,1:11

82. முடியரசன், பூங்,22:179-180

83. முடியரசன், வீர.117:பா.471

84. முடியரசன், ஊன்றுகோல். 1:12

# ஆய்வு முடிவுரை

'முடியரசனின் கவிதைத் திறன்' என்னும் தலைப்பின் கீழ் ஆய்வு செய்ததன் வழியே கீழ்க்கண்ட முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

1. அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவைக் கேட்டதன் விளைவாகத் துரைராசு என்றிருந்த தன் இயற்பெயரை முடியரசன் என்று மாற்றிக்கொண்ட கவிஞர், மிகவும் எளிய குடும்பத்தில் பிறந்து தன் அரும் முயற்சியாலும், தான் கொண்டிருந்த மிக உயர்ந்த தமிழ்ப்பற்றாலும் பாரதிதாசன் கவிதைப்பரம்பரையின் தலைமகன் எனப் போற்றப்பட்டமை கருதத்தக்கது.
2. தமிழ்மொழி, தமிழர்நலன், சமுதாயச் சீர்திருத்தம் ஆகியவற்றை முன்னிறுத்திக் கவிதை பாடியுள்ள முடியரசனின் வரலாறு, படைப்புகள், திரைத்துறைத் தொடர்புகள், பெற்ற விருதுகள், பரிசுகள், பாராட்டு ஆகியவை குறித்து ஆய்வின் வழியே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.
3. காலத்தைக் கடந்தும் வாழத்தக்கது கவிதை. அத்தகைய தன்மைகொண்ட முடியரசனின் கவிதைத் தொகுப்புகள், காப்பியங்கள், காப்பிய நாடகம் ஆகியவற்றின் சுருக்கம் அறிமுக நிலையில் தரப்பட்டுள்ளது.
4. கவிஞர் தன் கருத்தைச் செம்மையாக வெளியிடுவதற்குப் பயன்படுத்தும் நுணுக்கமான உத்தி, இலக்கியத்தில் இடம்பெற வேண்டிய இன்றியமையாத கூறு என்பதோடு மிகவும் பயன்பாடு உடையதென்றும் கருத முடிகிறது.
5. சொற்பொருளுக்கும் உணர்வு வெளியீட்டிற்கும் ஏற்பக் கவிஞர் ஒலியைப் பயன்படுத்துவதால் உருவாகும் ஒலிஉத்தி, ஒலிக்குறிப்புச் சொற்களைப் பயன்படுத்துதல், உணர்வுக்கேற்ப அமையும் ஒலியிசை முதலான நிலைகளில் முடியரசனின் படைப்புகளில் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.
6. மனிதன் அல்லது ஒரு பொருளின் குறிப்பிட்ட குணப்பண்பினைச் சுட்டும் அடைச்சொல், தொன்மைச் சொற்களைப் பயன்படுத்திக் கவிதை படைத்தல், ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைத் தரும் பல்பொருளுடைய ஒரு சொல் முதலான சொல் உத்திகளும், முரண், எதிர்மறை, பொருள்மயக்கம், சிலேடை, அங்கதம், குறிப்பு முதலான பொருண்மை நிலை உத்திகள் முடியரசனின் கவிதைகளில் காணப்பெறுகின்றன என்பது ஆய்வுப் படைப்புகளின் வழியே கண்டறியப்பட்டுள்ளது.
7. விளித்தொடர், கேள்வித் தொடர், இணைத்தொடர், பழமொழி ஆட்சி முதலான தொடரமைப்பு உத்திகள் முடியரசனின் கவிதைப்படைப்புகளில் பரவலாகக் காணப்படுகின்றன.
8. இடம், பொழுது, செயல், உருவம், பண்பு எனப்பல வகைகளாக அமையும் வருணனை உத்தி, கற்பனை, காட்சி ஆகிய வெளியீட்டு உத்திகள் ஆய்வு மேற்கொள்ளப்பட்ட முடியரசனின் மூன்று காப்பியங்கள், ஒரு காப்பிய நாடகம் ஆகியவற்றில் மட்டுமே இடம்பெற்றுள்ளன. எஞ்சிய கவிதைத் தொகுதிகளில் இத்தகைய உத்தி இடம் பெறவில்லை.

9. அழகு, விளக்கம், தெளிவு, நயம் ஆகிய பன்முகப் பயன்பாட்டில் அமையும் உவமை, உருவகம், சுவை, மேற்கோள் ஆட்சி முதலான அணிநிலை உத்திகளையும் முடியரசன் பயன்படுத்தியுள்ளார். இலக்கியப்படைப்பில் உவமையும் ஒரு இன்றியமையாத கூறாக அமைகின்றது. படைப்பாளன் தான் கூறக் கருதும் பொருளை வெளியிடப் பயன்படுத்தும் தொன்மையான உத்தியே உவமையாகும். தெளிவாகத் தெரியாததைத் தெளிவுபடுத்தவும், தெரிந்ததைச் சுவையோடு புரியவைப்பதற்கும் அழகுபடுத்திக்காட்டும் நோக்கில் முடியரசன் உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். தொல்காப்பியர் வகைப்படுத்தும் வினை, பயன், மெய், உரு என்னும் நான்கின் அடிப்படையில் உவமைகளைப் படைத்துள்ளார். நடைமுறைச் செயல்களைச் சுட்டும் வகையிலும், படித்தோர் சுவைக்கும் நிலையிலும், பாமரருக்குச் சுவையூட்டும் தன்மையிலும் பல உவமைகள் முடியரசனின் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.
10. முடியரசனின் படைப்புகளில் உருவகம் அருகியே காணப்படுகிறது. எண்சுவை குறித்தும் பாடியுள்ள முடியரசன், பயில்வோரை அச்சுவையோடு ஒன்றச் செய்திடும் வகையில் திறம்படப் பாடியிருப்பது சிறப்பாகப் போற்றத்தக்கது.
11. பாடுபொருள் ஆக்கத்திற்குரிய அருள்வேண்டல், பின்னோக்கு, மறைநிலை ஆகிய உத்திகளையும் முடியரசனின் படைப்புகளில் காண முடிகின்றது. தமிழ் வாழ்த்தையும், தமிழ்த் தெய்வ வணக்கத்தையும் தொடக்கமாக வைத்து அருள் வேண்டும் முடியரசனின் போக்குச் சிறப்பாக எண்ணற்குரியது.
12. முடியரசன் கவிதைத் தொகுப்புகளுள் ஐந்தில் தமிழ்வாழ்த்தும், இரண்டனுள் தமிழ் வணக்கமும், இரண்டனுள் தமிழ்த்தாய் வாழ்த்தும் அமைந்துள்ளன.
13. இந்தி மற்றும் பிறமொழி ஆதிக்கத்தால் தமிழுக்கு விளையும் இன்னல் குறித்தும் தமிழர் நலனுக்கு ஏற்படும் கேடு குறித்தும், இந்தி ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடி உயிர்நீத்த தமிழ்ச்சான்றோர் மற்றும் தமிழ் நலன் காக்கத் தொண்டாற்றிய தமிழறிஞர் ஆகியோர் குறித்தும் முடியரசன் செய்துள்ள பதிவுகளின் வாயிலாக வெளிப்படும் அவருடைய தமிழியற் சிந்தனை மனங்கொளத்தக்கது.
14. தனித்தியங்க வல்லதும், காலத்தால் மூத்ததும், செம்மையானதுமான தமிழின் சிறப்புகளைப் புலப்படுத்தியுள்ள முடியரசன், உயர்நிலை எய்தியிருந்த தமிழின வரலாறு, சரிவுநிலை கண்ட தமிழின வீழ்ச்சி குறித்தும் பதிவு செய்திருப்பது போற்றத்தக்கது.
15. தமிழ் உணர்ச்சி வேண்டும் என்றும் தமிழ் ஆட்சிமொழியாக அமைய வேண்டும் என்றும் பாடியிருப்பதில் முடியரசனின் தமிழ்ப்பற்று தெற்றெனப் பளிச்சிடுகிறது.

16. பன்னாட்டுக் கருத்தரங்கம், மாநாடு நடத்துதல், கலைச்சொல்லாக்கம் செய்தல், திருமணச்சடங்கு மற்றும் கோயில் வழிபாடு ஆகியவற்றைத் தமிழிலேயே நடத்துதல், பிறமாநிலங்களிலும் தமிழை வளர்த்தல், பிறமொழிக் கலைகளைத் தமிழுக்குக் கொணர்தல் முதலான தமிழ் வளர்ச்சிக்கான திட்டங்களை முன்வைத்துள்ள முடியரசனின் தமிழியற் சிந்தனை குறிப்பாகச் சுட்டத்தக்கது.
17. கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, நடனக்கலை, நெய்தற்கலை முதலான தமிழ்க்கலைகள் குறித்த முடியரசனின் பதிவுகள் வாயிலாகத் தமிழ்நாட்டுக்கலைகளின் தொன்மையும் சிறப்பும் கருதி அவற்றைப் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்ற செய்தியை முடியரசன் தமிழ்ச்சமுதாயத்தின் முன் வைத்துள்ளதாகக் கருதமுடிகிறது.
18. அனைத்துக் கவிதைகளிலும் தமிழ்ப்பற்றை வெளிப்படுத்தியிருக்கும் முடியரசன், தமிழைத் தன் தாயாகவும், தந்தையாகவும், காதலியாகவும், மனைவியாகவும், மகனாகவும், தெய்வமாகவும் பாடியிருப்பதன் வழியே ஆசிரியருடைய தமிழ்ச்சிந்தனை மதிப்பிடப்பெற்றுள்ளது.
19. இலக்கியமும் சமுதாயமும் ஒன்றோடொன்று இணைந்திருப்பவை என்பதால் ஒரு சமுதாயம் எப்படி அமைந்தால் சிறப்பாக இருக்கும் என்பதற்கான வழிவகைகளைக் காட்டும் சமுதாய உணர்வு அதில் மேலோங்கியிருக்கும். அத்தகைய சமுதாயச் சீர்திருத்த உணர்வு வாய்க்கப் பெற்ற முடியரசனின் படைப்புகளில் சமுதாயப்பார்வை மிளிருவதைக் காணமுடிகிறது.
20. கல்வி கற்பதையும், குறள் நெறியில் நடப்பதையும் சாதி வேறுபாடு மறைவதற்குரிய தீர்வுகளாக முன் வைத்திருப்பதும், பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையே மதமாற்றத்தைத் தடுப்பதற்குரிய தீர்வு எனச் சுட்டியிருப்பதும் குறிக்கத்தக்கது.
21. மூட நம்பிக்கை, சாதியச்சிக்கல், வறுமை, ஒற்றுமையின்மை, இலஞ்சம் முதலான சமுதாயச் சிக்கல்கள் குறித்த முடியரசனின் பார்வை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது கலப்புமணத்தைச் சாதியச் சிக்கல் தீர்வதற்கான தீர்வாகச் சுட்டியிருப்பது கருதத்தக்கது.
22. தன்னலமின்றிப் பொதுநலத்திற்காகத் தொண்டாற்றினால் அரசியல் ஒழுக்கக்கேடு மறையும் என்றும், பொதுவுடைமையே பொருளாதாரச் சீர்கேட்டை அகற்றும் என்றும், வரதட்சணைக் கொடுமை தீர இளைஞர்களிடையே விழிப்புணர்வு ஏற்பட வேண்டுமென்றும் சுட்டியிருப்பது காலத்திற்கேற்ற தேவையாக அமைகிறது.
23. பெண்கள் பாதுகாப்பு, கற்பு, விதவைகள் நிலை, பெண்ணுரிமை முதலான சிந்தனைகளின் வாயிலாக முடியரசனின் சமுதாய நலக் கண்ணோட்டம் புலனாகிறது.

24. வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல், தன்னேரில்லாத் தலைவன், நாடு, நகர் வருணனை, திருமணம், தூது, படலம், இயல், காதைப் பிரிவுகள், மெய்ப்பாடுகள் முதலான காப்பிய இலக்கண வரையறைகள் முடியரசனின் காப்பியங்களில் பொருத்தமுற அமைந்துள்ளன என்றே கருதத் தோன்றுகிறது.
25. தமிழ்நாடு, தமிழினம், தமிழ்மொழி ஆகியவற்றின் மீட்புப் போராட்டமாகப் 'பூங்கொடி' என்ற காப்பியம் திகழ்கிறது. எழுத்தாலும், பேச்சாலும் தமிழ் வளர்ச்சிக்கு ஊன்று கோலாக இருந்த பண்டிதமணியன் வரலாற்றைப் பேசுவதாக 'ஊன்றுகோல்' காப்பியம் அமைந்துள்ளது. பொய் கூறுவதால் அவலமே நிகழுமென்பதை விளக்கும் விதமாக 'வீரகாவியம்' விளங்குகிறது. போரில்லா ஓருலகு வேண்டுமென்பதைச் சொல்வதாக 'இளம்பெருவழுதி' அமைகிறது. கதை, கரு, கிளைக்கதை, மொழிநடை, பின்னணி முதலான காப்பியக் கூறுகள் முடியரசனின் காப்பியங்களில் இடம்பெற்றுள்ள போக்குக் குறித்துச் சான்றுகளுடன் புலப்படுத்தப்பட்டுள்ளது.
26. கருவை வெளிக்கொணரவும், கதையை நடத்திச் செல்லவும் பாத்திரம் இன்றியமையாததாகும். பாத்திரத்தின் தன்மை, செயல்பாடு ஆகியவற்றைக் கொண்டு அவை தலைமைப்பாத்திரம், துணைப்பாத்திரம், பெயர் மட்டும் சுட்டப்படும் பாத்திரம் என வகைமை செய்யப்பட்டுள்ளது. முடியரசனின் காப்பியங்களில் மூன்று தலைமைப்பாத்திரங்களும், நாற்பத்தைந்து துணைப் பாத்திரங்களும், பதினோரு பெயர் மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்களும் இடம்பெற்றுள்ளன. காப்பியத்திற்கு அழகு சேர்க்கும் அணி மற்றும் சொல் நயங்கள் சான்றுகளுடன் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.
27. ஆசிரியப்பணியைத் தன் கவிதைப்பணிக்கு இடையூறாகக் கருதிய முடியரசன், தமிழின் மீட்சி, தமிழைக்காத்தல், தமிழை வளர்த்தல் ஆகியவற்றைத் தன் மேலான பணிகளாகக் கொண்டிருந்தவர் என்பதை முடியரசனுடைய கவிதைப் பரப்பெங்கும் காணமுடிகிறது.

## மேலாய்வு:

'முடியரசனின் கவிதைத்திறன்' என்னும் தலைப்பில் இவ்வாய்வு அமைந்தாலும் இன்று பாத்திரங்களை ஆய்வு செய்யும் போக்குக் காணப்படுகிறது. 'முடியரசனின் காப்பிய மாந்தர்கள் - ஒரு திறனாய்வு' என்னும் தலைப்பிலும், 'முடியரசன் காப்பியங்களில் தமிழியற் சிந்தனை' என்னும் தலைப்பிலும் ஆய்வு செய்ய வாய்ப்பிருக்கிறது.

சீர்திருத்தச் சிந்தனைகளை மையமிட்டு, 'முடியரசனாரின் படைப்புகளில் சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனை' என்னும் தலைப்பிலும், 'திராவிட இயக்கக் கவிஞருள் முடியரசன் பெறும் இடம்' என்ற தலைப்பிலும் ஆய்வு நிகழ்த்தலாம்.

கருத்து வெளிப்பாட்டிற்கு இன்றியமையாததாக விளங்கும் உத்திகளை மையமிட்டு 'முடியரசனாரின் இலக்கிய உத்திகள்' என்னும் தலைப்பிலும் ஆய்வு நிகழ்த்த வாய்ப்பிருக்கிறது.

# துணை நூற்பட்டியல்

**முதன்மைச் சான்றாதாரங்கள்**


முடியரசன், **கவியரசர் முடியரசன் படைப்புகள் -1,** (முடியரசன் கவிதைகள், நெஞ்சிற் பூத்தவை) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 2,** (காவியப்பாவை, பாடுங்குயில்) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 3** (கவியரங்கில் முடியரசன், தமிழ் முழக்கம்) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 4** (நெஞ்சு பொறுக்கவில்லையே, மனிதனைத் தேடுகிறேன், மனிதரைக் கண்டு கொண்டேன்) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 5** (தாய்மொழி காப்போம், புதியதொரு விதி செய்வோம்) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 6** (வள்ளுவர் கோட்டம், ஞாயிறும் திங்களும்) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 7** (பூங்கொடி, வீரகாவியம்) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 8** (ஊன்றுகோல், இளம்பெருவழுதி) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008

--- --- - - --- - - --, **கவியரசர் முடியரசன் படைப்புகள் - 10** பாட்டுபறவையின் வாழ்க்கைப்பயணம் (தன்வரலாறு)) தமிழ்மண் பதிப்பகம், சென்னை, மு.ப., 2008


**துணைமைச் சான்றாதாரங்கள்:**

**அ) தமிழ்:**


அறவாணன், க.ப., **படைப்பாளி + சமுதாயம் = இலக்கியம்,** தமிழ் கோட்டம், புதுச்சேரி, மு.ப.,1995.

அறிவு நம்பி, அ., **இலக்கியங்களும் உத்திகளும்**, அமுதன் நூலகம், புதுச்சேரி, மு.ப.,2001.

இராம கிருட்டிணன், எசு., **கம்பனும் மில்ட்டனும்,** மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1969.

--- --- - - --- - - --, **இளங்கோவின் பாத்திரப்படைப்பு,** மீனாட்சி புத்தக நிலையம், சென்னை, இ.ப., 1975.

இராமலிங்கம், மா **புதிய உரைநடை,** தமிழ்ப்புத்தகாலயம். சென்னை, 1980.

**--- --- - - --- - - --,** **நாவல் இலக்கியம்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1999.

**--- --- - - --- - - --,** **இலக்கியத் தகவு,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1999.

இளங்குமரன், இரா **பாவாணர் வரலாறு,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு, சென்னை, 2000.

இளந்திரையன் சாலை, **புரட்சிக் கவிஞர் கவிதை வளம்,** பாரி நிலையம், சென்னை, 1965.

இளம்பூரணர் (உரை.ஆ) **தொல்காப்பியம் - பொருளதிகாரம்,** கழக வெளியீடு, சென்னை, 1982.

இளவரசு சோம., **காப்பியத்திறன்,** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1987

இன்னாசி, சூ. (பதி.ஆ), **சமயமும் சமுதாயமும்,** பதிப்புத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மு.ப., 1993.

ஈசுவரபிள்ளை, தா., **பக்தி இலக்கியத்தில் சமுதாயப்பார்வை,** தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், இ.ப.,2002

கமலா, பொ.நா., **நவீன கோட்பாட்டு ஆய்வுகள்,** காவ்யா வெளியீடு, பெங்களூர், மு.ப., 1999.

கருணாநிதி, மு., **கலைஞரின் கவிதைகள்,** சென்னை, மு.ப., 1969.

கலியாண சுந்தரனார், திரு.வி., **தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு,** சாது அச்சுக் கூடம், சென்னை, 1935

காசிராஜன், இரா., **உலகக்காப்பியங்கள்**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, மு.ப., 2014.

கிருஷ்ணசாமி, ப. (தொகு.ஆ) **ஜெயகாந்தன் இலக்கியத்தடம்,** காவ்யா வெளியீடு, பெங்களூர், மு.ப.,1997.

குமரவேலன், இரா., **தமிழ்க் கவிதை நாடகம்,** மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 2000.

குளோரியா சந்திரமதி, எல், (மொ.பெ.ஆ) **இலக்கியக்கொள்கை,** பாரிநிலையம், சென்னை, 1966.

கைலாசபதி, க., **இலக்கியமும் திறானாய்வும்,** பாட்டாளிகள்

வெளியீடு, சென்னை, 1976.

--- --- - - --- - - --, **இலக்கியச் சிந்தனைகள்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, மூன்றாம் அச்சு, 1987.

சச்சிதானந்தன், வை., **மேலை இலக்கியச் சொல்லகராதி,** மாக் மில்லன், சென்னை.

சஞ்சீவி, ந. (பதி.ஆ) **இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்,** சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1974.

சம்பத் குமார், பா., **மு.வ.நாவல்களில் பாத்திரங்கள் ஒரு திறனாய்வு,** ராஜ்காந்தி பதிப்பகம், கோயம்புத்தூர், மு.ப., 1988

சீனிச்சாமி, து., **தமிழ்க்காப்பிய அமைப்பு,** தஞ்சைப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சை.

சுந்தரம்மாள். தி., **பெரியபுராணத்தில் காப்பியக கொள்கைகள்,** வள்ளி பதிப்பகம், விருது நகர், 1998.

சுந்தரமூர்த்தி, இ., **நடையியல் சிந்தனைகள்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட, சென்னை, மு.ப., 1994

சுப்பிரமணியம் க.நா. **விமரிசனக் கலை,** தமிழ்ப்புத்தகாலயம், சென்னை,மு.ப.,1959

சுப்பிரமணியன், ச.வே **காப்பிப் புனைதிறன்**, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,

சென்னை, 1979.

--- --- - - --- - - --, **இளங்கோவின் இலக்கிய உத்திகள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மு.ப., 1984.

--- --- - - --- - - --, **கம்பன் இலக்கிய உத்திகள்,** மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், மு.ப.,2002

சுபாசு சந்திரபோசு,பெ., **பாரதிதாசனும் தமிழியமும்,** சுபாலிகா பதிப்பகம், திருச்சி, 2000.

சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள் **கோகிலாம்பாள் கடிதங்கள்**, கழக வெளியீடு, சென்னை, ம.ப.,1957.

ஜெயராணி ராசதுரை **பெண்கள் படைப்பில் சமூகம்,** வைகை வெளியீடு, பவானி, மு.ப.,1992.

சௌந்திரபாண்டியன், எஸ் **தமிழில் காப்பியங்கள்,** தமிழ்க் கோட்பாட்டு வரிசை-5, ஸ்டார் பதிப்பு, சென்னை, 1985.

ஞான சம்பந்தன், அ.ச., **இலக்கியக்கலை,** கழக வெளியீடு, திருநெல்வேலி, நா.ப., 1964.

--- --- - - --- - - --, **பெரியபுராணம் ஓர் ஆய்வு,** சேக்கிழார் ஆராய்ச்சி மையம், சென்னை, 1984

ஞானமூர்த்தி தா.ஏ., **இலக்கியத் திறனாய்வியல்**
ஐந்திணை பதிப்பகம், சென்னை,
இ.ப.., 1986

தமிழண்ணல், இலக்குமணன், எம்எசு. **ஆய்வியல் அறிமுகம்,**
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை,
மூ.ப.,1986.

தண்டியாசிரியர் **தண்டியலங்காரம்,**
வை.மு.கோ.கம்பெனி, சென்னை,1962,

திருவள்ளுவர் **திருக்குறள்**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1997

திவாகர முனிவர் **சேந்தன் திவாகரம்,**
கழக வெளியீடு, திருநெல்வேலி,1958.

நடராஜன் தி.சு., **திறனாய்வுக் கொள்கைகள்,**
அன்னம்(பி) லிட்., சிவகங்கை,
மு.ப., 1990

நீதிவாணன், ஜெ., **நடையியல்,**
முல்லை வெளியீடு, மதுரை,1979.

நீலாமணி, மு., **காப்பியங்களில் கற்பனை வளர்ச்சி ஓர் ஆய்வு,**
தேன் தமிழ்ப்பதிப்பகம், சேலம், 1991.

பக்தவத்சல பாரதி, **பண்பாட்டு மானிடவியல்,**
மணிவாசகர் பதிப்பகம், சென்னை,
தி.ப.,1999.

| | |
|---|---|
| பகவதி, கு. (பதி.ஆ) | **திறனாய்வு அணுகுமுறைகள்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மு.ப.,1989. |
| பரமேஸ்வரன், பா., | **பாரதிதாசன், வால்ட் விட்மன் - இருபெரும் புரட்சிக் கவிஞர்கள் - ஓர் ஒப்பிலக்கிய ஆய்வு,** அன்பு பதிப்பகம், மு.ப., 1987. |
| பாரதிதாசன் | **பாரதிதாசன் பாடல்கள்,** பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, ஐ.ப., 2006. |
| பாலச்சந்திரன், சு. | **இலக்கியத் திறனாய்வு,** அணியகம், சென்னை, மூ.ப., 1981. |
| பாலசுப்பிரமணியன் கு.வெ | **ஆய்வுக் களங்கள்,** உமா நூல் வெளியீட்டகம், தஞ்சாவூர், மு.ப.,1998. |
| பிச்சமுத்து ந, | **திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும்,** சக்தி வெளியீடு, சென்னை, 1986. |
| பெரியகருப்பன், இராம., முத்தையா,இ | **தமிழியல் ஆய்வு**, பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், இ.ப.,1988 |
| பொற்கோ, | **ஆராய்ச்சி நெறி முறைகள்**, ஐந்திணை பதிப்பகம், சென்னை, |

இ.ப.1998

மதியழகன் மு. **பாவேந்தரின் உரைநடைத்திறன்,**
முத்து பதிப்பகம், விழுப்புரம், மு.ப.,1990.

**--- --- - - --- - - --,** **தமிழியல் ஆய்வு வரலாறு,**
ப்ரீத் வெளியீட்டகம், புதுவை, 1996.

மீனாட்சி சுந்தரானார் **சிலம்பில் துணைப்பாத்திரங்கள்,**
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1973.

மீனாட்சி முருகரத்தினம் **மேலை இலக்கியத் திறனாய்வு அறிமுகம்**
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ் (விற்பனை உரிமை),மதுரை, 1987.

முத்துச் சண்முகன், **தமிழ் இலக்கியக் கோட்பாடுகள்,**
கழக வெளியீடு, சென்னை, 1989.

முத்தையா, கரு., **செயகாந்தன் நாவல்களில் பாத்திரப்படைப்பு,**
முத்துமீனாள் பதிப்பகம், தேவகோட்டை, 1980.

முருகேசன், ச., **சாகித்திய அகாதெமி விருதுபெற்ற புதினங்களில் சமுதாயப் பார்வை,**
தி.பார்க்கர் வெளியீடு, சென்னை, மு.ப.,2007.

**--- --- - - --- - - --,** **செவ்வியல் இலக்கியச் செந்நெறி,**
இராசகுணா பதிப்பகம், சென்னை, மு.ப.,2014.

**--- --- - - --- - - --,** **தமிழ் நாடு - இனம் - மொழி – சங்கம் ஒரு வரலாற்றுப் பார்வை,**
இராஜா பப்ளிகேசன்ஸ், திருச்சி, மு.ப., 2015.

மோகன், இரா., **முடியரசன்,**
சாகித்திய அகாதெமி, புது தில்லி,
மு.ப.,2006

யோகீசுவரன், பி., **தமிழ்க்கவிதைகளில் சமுதாயச் சிக்கல்கள்,**
நீலா பதிப்பகம், சென்னை, மு.ப.,1985.

வரதராஜன் மு., **இலக்கியத் திறன்,**
தாயக வெளியீடு, சென்னை, மு.ப.,1959.

**--- --- - - --- - - --,** **இலக்கிய மரபு,**
தாயக வெளியீடு, பாரி நிலையம்,
(விற்பனை உரிமை),சென்னை, நா.ப.,1997.

வளவன், சா., **பெண் படைப்பாளர் தம் படைப்புகள்,**
சென்னை, மு.ப., 1995.

விசுவநாதன், ஈ.ச., **ஆய்வு நெறிமுறைகள்,**
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, இ.ப.,1981.

விசுவநாதன், அ., **சமுதாயச் சிந்தனைகள்,**
மங்கை பதிப்பகம், காரைக்குடி, மு.ப.,1996.

விமலானந்தம், மது.ச., **தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்,**
ஐந்திணை பதிப்பகம், சென்னை, மு.ப., 1987.

வேங்கடசாமி, மயிலை, சீனி., **தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்,**
மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1984.

**--- --- - - --- - - --,** **நுண்கலைகள்,**
பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, மு.ப.,2012

வேங்கடராமன், சு., **மு.வ.கருத்தரங்கக் கட்டுரைகள்,**

(பதி.ஆ) பதிப்புத் துறை,
மதுரை காமராஜர் பல்கலைக் கழகம்,
மதுரை, 1977.

ஜான்சாமுவேல்,ஜி., **திறனாய்வுச் சிந்தனைகள்,**
மணி பதிப்பகம், சென்னை,மு.ப.,1977.

ஸ்ரீ குமார், எசு., **நாவலும் சமுதாயமும்,**
சுபா பதிப்பகம், நாகர் கோவில், மு.ப.,1992

**ஆசிரியர் பெயரின்றிப் பதிப்பகத்தாரே வெளியிட்டது.**

**ஆய்வுச் சிக்கல்களும், தீர்வுகளும்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, மு.ப., 1995

**கட்டுரைகள்**

சேது பாண்டியயன் தூ., **'மு.வ.வின் நாவல்களில் மொழிநடை'**
மு.வ.கருத்தரஙகக் கட்டுரைகள், மதுரை
காமராஜர் பல்கலைக் கழகப் பதிப்புத் துறை
வெளியீடு, 1987.

தமிழரசி, இரா., **'தமிழ் இலக்கிய உத்திகள்-ஓர் அறிமுகம்'**,
Papers on Tamil Studies, International Institute of
Tamil studies, Madras, 1980.

நீதிவாணன், ஜெ., **'பின்புலமும் மொழிநடையும்'**
அகிலன் கருத்தரங்க ஆய்வுரைகள், மதுரைப்
பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடு,
மதுரை, 1976.

இரத்தினசபாபதி, **சைவ சமய இலக்கியங்கள் காட்டும் சமுதாய**

வை.(கட்.ஆ) **உணர்வுகள்,**

சூ.இன்னாசி (பதி.ஆ), சமயமும் சமுதாயமும், பதிப்புத்துறை, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1993.

முத்துக்கூரி,கி, (கட்.ஆ) **‘நொறுங்கல் சுட்டும் சமூகம்’**

இ.ப.த.மன்ற முப்பத்திரண்டாம் ஆய்வுக் கோவை, தொகுதி – 3, 2001.

## ஆய்வேடுகள்:

கதிரேசன், சுப., **கண்ணதாசன் கவிதைகளில் சமுதாயக் கூறுகள்,** பா.ப.க., பி.ப.ஆ., 1990

சேது கல்பனா, ச., **முடியரசனார் கவிதைகளில் புலப்பாட்டு நெறி,** பா.ப.க., பி.ப.ஆ., 2013

பாண்டுரங்கன் **கம்பராமாயணத்தில் காப்பியக் கோட்பாடு,** ம.கா.ப., பி.ப.ஆ., 1979.

முருகேசன் ச., **எசு., எசு., தென்னரசு புதினங்கள் - ஆய்வு,** ம.கா.ப., எ.ப.ஆ., 1987

## இதழ்கள்

தினமணி - 05.12.1998

தினமணி - 24.05.1999

முரசொலி - 22.09.1991

## கலைக்களஞ்சியங்கள்

பெரியசாமித்தூரன், ம.பெ., தொகுதி இரண்டு, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, மு.ப., 1955.

**--- --- - - --- - - --,** தொகுதி எட்டு, தமிழ்வளர்ச்சிக் கழகம், சென்னை, மு.ப.1961.

## English Dictionaries

Shipley Joseph T.(Ed), Dictionary of world Literary Terms, George Allen and Unwin, London, 1970.

**ஆ) ஆங்கிலநூல்கள்**


Hudson, W.H., An Introduction to the study of Literature, George G. Harrap & Co.Ltd, London, Reprint, 1957.

Winchester, C.T., Some Principles of Literary Criticism, English-Tamil Dictionary, University of Madras, 1945.

# பின்னிணைப்பு – 1

# பாத்திர எண்ணிக்கைப் பட்டியல்

| காப்பியம் | தலைமைப்பாத்திரம் | துணைப்பாத்திரங்கள் | பெயர்மட்டும் கட்டப்பெறும் பாத்திரங்கள் |
|---|---|---|---|
| பூங்கொடி | 1 | 16 | 3 |
| வீரகாவியம் | 1 | 14 | 1 |
| ஊன்றுகோல் | 1 | 15 | 7 |
| மொத்தம் | 3 | 45 | 15 |

# முடியரசனின் கவிதைத் திறன்

**(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் (பி.எச்.டி)**
**பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


## ஆய்வாளர்

**இரா.வனிதா**

*(பதிவு எண்:711)*

## நெறியாளர்

## முனைவர் ச.முருகேசன்

**இணைப்பேராசிரியர், தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

**(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மறு மதிப்பீட்டில் ‘ஏ+’ தகுதிபெற்றது)**

**காரைக்குடி – 630 003**


**ஆகஸ்டு – 2017**

72. வ.சுப. மாணிக்கம், கம்பர், ப. 79

73. முடியரசன், பூங் 27:152 – 153

74. முடியரசன், வீர. 27. 112: 5-8

75. மேலது. 2:7

76. முடியரசன், ஊன்றுகோல், 2:19

77. The creation of characters may be supposed to blend invarying degrees, inherited literary types, persons observed and the self-Rene welleck & Austin Warren, Theory of Literature, P.79

78. முடியரசன், பூங் 7:74-76

79. மேலது, 29:14-15

80. முடியரசன், வீர.57. பா. 268.

81. முடியரசன், ஊன்றுகோல்,1:11

82. முடியரசன், பூங்,22:179-180

83. முடியரசன், வீர.117:பா.471

84. முடியரசன், ஊன்றுகோல். 1:12

# ஆய்வு முடிவுரை

'முடியரசனின் கவிதைத் திறன்' என்னும் தலைப்பின் கீழ் ஆய்வு செய்ததன் வழியே கீழ்க்கண்ட முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

1. அறிஞர் அண்ணாவின் சொற்பொழிவைக் கேட்டதன் விளைவாகத் துரைராசு என்றிருந்த தன் இயற்பெயரை முடியரசன் என்று மாற்றிக்கொண்ட கவிஞர், மிகவும் எளிய குடும்பத்தில் பிறந்து தன் அரும் முயற்சியாலும், தான் கொண்டிருந்த மிக உயர்ந்த தமிழ்ப்பற்றாலும் பாரதிதாசன் கவிதைப்பரம்பரையின் தலைமகன் எனப் போற்றப்பட்டமை கருதத்தக்கது.
2. தமிழ்மொழி, தமிழர்நலன், சமுதாயச் சீர்திருத்தம் ஆகியவற்றை முன்னிறுத்திக் கவிதை பாடியுள்ள முடியரசனின் வரலாறு, படைப்புகள், திரைத்துறைத் தொடர்புகள், பெற்ற விருதுகள், பரிசுகள், பாராட்டு ஆகியவை குறித்து ஆய்வின் வழியே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.
3. காலத்தைக் கடந்தும் வாழத்தக்கது கவிதை. அத்தகைய தன்மைகொண்ட முடியரசனின் கவிதைத் தொகுப்புகள், காப்பியங்கள், காப்பிய நாடகம் ஆகியவற்றின் சுருக்கம் அறிமுக நிலையில் தரப்பட்டுள்ளது.
4. கவிஞர் தன் கருத்தைச் செம்மையாக வெளியிடுவதற்குப் பயன்படுத்தும் நுணுக்கமான உத்தி, இலக்கியத்தில் இடம்பெற வேண்டிய இன்றியமையாத கூறு என்பதோடு மிகவும் பயன்பாடு உடையதென்றும் கருத முடிகிறது.
5. சொற்பொருளுக்கும் உணர்வு வெளியீட்டிற்கும் ஏற்பக் கவிஞர் ஒலியைப் பயன்படுத்துவதால் உருவாகும் ஒலிஉத்தி, ஒலிக்குறிப்புச் சொற்களைப் பயன்படுத்துதல், உணர்வுக்கேற்ப அமையும் ஒலியிசை முதலான நிலைகளில் முடியரசனின் படைப்புகளில் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.
6. மனிதன் அல்லது ஒரு பொருளின் குறிப்பிட்ட குணப்பண்பினைச் சுட்டும் அடைச்சொல், தொன்மைச் சொற்களைப் பயன்படுத்திக் கவிதை படைத்தல், ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களைத் தரும் பல்பொருளுடைய ஒரு சொல் முதலான சொல் உத்திகளும், முரண், எதிர்மறை, பொருள்மயக்கம், சிலேடை, அங்கதம், குறிப்பு முதலான பொருண்மை நிலை உத்திகள் முடியரசனின் கவிதைகளில் காணப்பெறுகின்றன என்பது ஆய்வுப் படைப்புகளின் வழியே கண்டறியப்பட்டுள்ளது.
7. விளித்தொடர், கேள்வித் தொடர், இணைத்தொடர், பழமொழி ஆட்சி முதலான தொடரமைப்பு உத்திகள் முடியரசனின் கவிதைப்படைப்புகளில் பரவலாகக் காணப்படுகின்றன.
8. இடம், பொழுது, செயல், உருவம், பண்பு எனப்பல வகைகளாக அமையும் வருணனை உத்தி, கற்பனை, காட்சி ஆகிய வெளியீட்டு உத்திகள் ஆய்வு மேற்கொள்ளப்பட்ட முடியரசனின் மூன்று காப்பியங்கள், ஒரு காப்பிய நாடகம் ஆகியவற்றில் மட்டுமே இடம்பெற்றுள்ளன. எஞ்சிய கவிதைத் தொகுதிகளில் இத்தகைய உத்தி இடம் பெறவில்லை.

9. அழகு, விளக்கம், தெளிவு, நயம் ஆகிய பன்முகப் பயன்பாட்டில் அமையும் உவமை, உருவகம், சுவை, மேற்கோள் ஆட்சி முதலான அணிநிலை உத்திகளையும் முடியரசன் பயன்படுத்தியுள்ளார். இலக்கியப்படைப்பில் உவமையும் ஒரு இன்றியமையாத கூறாக அமைகின்றது. படைப்பாளன் தான் கூறக் கருதும் பொருளை வெளியிடப் பயன்படுத்தும் தொன்மையான உத்தியே உவமையாகும். தெளிவாகத் தெரியாததைத் தெளிவுபடுத்தவும், தெரிந்ததைச் சுவையோடு புரியவைப்பதற்கும் அழகுபடுத்திக்காட்டும் நோக்கில் முடியரசன் உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். தொல்காப்பியர் வகைப்படுத்தும் வினை, பயன், மெய், உரு என்னும் நான்கின் அடிப்படையில் உவமைகளைப் படைத்துள்ளார். நடைமுறைச் செயல்களைச் சுட்டும் வகையிலும், படித்தோர் சுவைக்கும் நிலையிலும், பாமரருக்குச் சுவையூட்டும் தன்மையிலும் பல உவமைகள் முடியரசனின் படைப்புகளில் இடம்பெற்றுள்ளன.
10. முடியரசனின் படைப்புகளில் உருவகம் அருகியே காணப்படுகிறது. எண்சுவை குறித்தும் பாடியுள்ள முடியரசன், பயில்வோரை அச்சுவையோடு ஒன்றச் செய்திடும் வகையில் திறம்படப் பாடியிருப்பது சிறப்பாகப் போற்றத்தக்கது.
11. பாடுபொருள் ஆக்கத்திற்குரிய அருள்வேண்டல், பின்னோக்கு, மறைநிலை ஆகிய உத்திகளையும் முடியரசனின் படைப்புகளில் காண முடிகின்றது. தமிழ் வாழ்த்தையும், தமிழ்த் தெய்வ வணக்கத்தையும் தொடக்கமாக வைத்து அருள் வேண்டும் முடியரசனின் போக்குச் சிறப்பாக எண்ணற்குரியது.
12. முடியரசன் கவிதைத் தொகுப்புகளுள் ஐந்தில் தமிழ்வாழ்த்தும், இரண்டனுள் தமிழ் வணக்கமும், இரண்டனுள் தமிழ்த்தாய் வாழ்த்தும் அமைந்துள்ளன.
13. இந்தி மற்றும் பிறமொழி ஆதிக்கத்தால் தமிழுக்கு விளையும் இன்னல் குறித்தும் தமிழர் நலனுக்கு ஏற்படும் கேடு குறித்தும், இந்தி ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடி உயிர்நீத்த தமிழ்ச்சான்றோர் மற்றும் தமிழ் நலன் காக்கத் தொண்டாற்றிய தமிழறிஞர் ஆகியோர் குறித்தும் முடியரசன் செய்துள்ள பதிவுகளின் வாயிலாக வெளிப்படும் அவருடைய தமிழியற் சிந்தனை மனங்கொளத்தக்கது.
14. தனித்தியங்க வல்லதும், காலத்தால் மூத்ததும், செம்மையானதுமான தமிழின் சிறப்புகளைப் புலப்படுத்தியுள்ள முடியரசன், உயர்நிலை எய்தியிருந்த தமிழின வரலாறு, சரிவுநிலை கண்ட தமிழின வீழ்ச்சி குறித்தும் பதிவு செய்திருப்பது போற்றத்தக்கது.
15. தமிழ் உணர்ச்சி வேண்டும் என்றும் தமிழ் ஆட்சிமொழியாக அமைய வேண்டும் என்றும் பாடியிருப்பதில் முடியரசனின் தமிழ்ப்பற்று தெற்றெனப் பளிச்சிடுகிறது.

16. பன்னாட்டுக் கருத்தரங்கம், மாநாடு நடத்துதல், கலைச்சொல்லாக்கம் செய்தல், திருமணச்சடங்கு மற்றும் கோயில் வழிபாடு ஆகியவற்றைத் தமிழிலேயே நடத்துதல், பிறமாநிலங்களிலும் தமிழை வளர்த்தல், பிறமொழிக் கலைகளைத் தமிழுக்குக் கொணர்தல் முதலான தமிழ் வளர்ச்சிக்கான திட்டங்களை முன்வைத்துள்ள முடியரசனின் தமிழியற் சிந்தனை குறிப்பாகச் சுட்டத்தக்கது.
17. கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, நடனக்கலை, நெய்தற்கலை முதலான தமிழ்க்கலைகள் குறித்த முடியரசனின் பதிவுகள் வாயிலாகத் தமிழ்நாட்டுக்கலைகளின் தொன்மையும் சிறப்பும் கருதி அவற்றைப் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்ற செய்தியை முடியரசன் தமிழ்ச்சமுதாயத்தின் முன் வைத்துள்ளதாகக் கருதமுடிகிறது.
18. அனைத்துக் கவிதைகளிலும் தமிழ்ப்பற்றை வெளிப்படுத்தியிருக்கும் முடியரசன், தமிழைத் தன் தாயாகவும், தந்தையாகவும், காதலியாகவும், மனைவியாகவும், மகனாகவும், தெய்வமாகவும் பாடியிருப்பதன் வழியே ஆசிரியருடைய தமிழ்ச்சிந்தனை மதிப்பிடப்பெற்றுள்ளது.
19. இலக்கியமும் சமுதாயமும் ஒன்றோடொன்று இணைந்திருப்பவை என்பதால் ஒரு சமுதாயம் எப்படி அமைந்தால் சிறப்பாக இருக்கும் என்பதற்கான வழிவகைகளைக் காட்டும் சமுதாய உணர்வு அதில் மேலோங்கியிருக்கும். அத்தகைய சமுதாயச் சீர்திருத்த உணர்வு வாய்க்கப் பெற்ற முடியரசனின் படைப்புகளில் சமுதாயப்பார்வை மிளிருவதைக் காணமுடிகிறது.
20. கல்வி கற்பதையும், குறள் நெறியில் நடப்பதையும் சாதி வேறுபாடு மறைவதற்குரிய தீர்வுகளாக முன் வைத்திருப்பதும், பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையே மதமாற்றத்தைத் தடுப்பதற்குரிய தீர்வு எனச் சுட்டியிருப்பதும் குறிக்கத்தக்கது.
21. மூட நம்பிக்கை, சாதியச்சிக்கல், வறுமை, ஒற்றுமையின்மை, இலஞ்சம் முதலான சமுதாயச் சிக்கல்கள் குறித்த முடியரசனின் பார்வை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது கலப்புமணத்தைச் சாதியச் சிக்கல் தீர்வதற்கான தீர்வாகச் சுட்டியிருப்பது கருதத்தக்கது.
22. தன்னலமின்றிப் பொதுநலத்திற்காகத் தொண்டாற்றினால் அரசியல் ஒழுக்கக்கேடு மறையும் என்றும், பொதுவுடைமையே பொருளாதாரச் சீர்கேட்டை அகற்றும் என்றும், வரதட்சணைக் கொடுமை தீர இளைஞர்களிடையே விழிப்புணர்வு ஏற்பட வேண்டுமென்றும் சுட்டியிருப்பது காலத்திற்கேற்ற தேவையாக அமைகிறது.
23. பெண்கள் பாதுகாப்பு, கற்பு, விதவைகள் நிலை, பெண்ணுரிமை முதலான சிந்தனைகளின் வாயிலாக முடியரசனின் சமுதாய நலக் கண்ணோட்டம் புலனாகிறது.

24. வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல், தன்னேரில்லாத் தலைவன், நாடு, நகர் வருணனை, திருமணம், தூது, படலம், இயல், காதைப் பிரிவுகள், மெய்ப்பாடுகள் முதலான காப்பிய இலக்கண வரையறைகள் முடியரசனின் காப்பியங்களில் பொருத்தமுற அமைந்துள்ளன என்றே கருதத் தோன்றுகிறது.
25. தமிழ்நாடு, தமிழினம், தமிழ்மொழி ஆகியவற்றின் மீட்புப் போராட்டமாகப் 'பூங்கொடி' என்ற காப்பியம் திகழ்கிறது. எழுத்தாலும், பேச்சாலும் தமிழ் வளர்ச்சிக்கு ஊன்று கோலாக இருந்த பண்டிதமணியன் வரலாற்றைப் பேசுவதாக 'ஊன்றுகோல்' காப்பியம் அமைந்துள்ளது. பொய் கூறுவதால் அவலமே நிகழுமென்பதை விளக்கும் விதமாக 'வீரகாவியம்' விளங்குகிறது. போரில்லா ஓருலகு வேண்டுமென்பதைச் சொல்வதாக 'இளம்பெருவழுதி' அமைகிறது. கதை, கரு, கிளைக்கதை, மொழிநடை, பின்னணி முதலான காப்பியக் கூறுகள் முடியரசனின் காப்பியங்களில் இடம்பெற்றுள்ள போக்குக் குறித்துச் சான்றுகளுடன் புலப்படுத்தப்பட்டுள்ளது.
26. கருவை வெளிக்கொணரவும், கதையை நடத்திச் செல்லவும் பாத்திரம் இன்றியமையாததாகும். பாத்திரத்தின் தன்மை, செயல்பாடு ஆகியவற்றைக் கொண்டு அவை தலைமைப்பாத்திரம், துணைப்பாத்திரம், பெயர் மட்டும் சுட்டப்படும் பாத்திரம் என வகைமை செய்யப்பட்டுள்ளது. முடியரசனின் காப்பியங்களில் மூன்று தலைமைப்பாத்திரங்களும், நாற்பத்தைந்து துணைப் பாத்திரங்களும், பதினோரு பெயர் மட்டும் சுட்டப்பெறும் பாத்திரங்களும் இடம்பெற்றுள்ளன. காப்பியத்திற்கு அழகு சேர்க்கும் அணி மற்றும் சொல் நயங்கள் சான்றுகளுடன் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.
27. ஆசிரியப்பணியைத் தன் கவிதைப்பணிக்கு இடையூறாகக் கருதிய முடியரசன், தமிழின் மீட்சி, தமிழைக்காத்தல், தமிழை வளர்த்தல் ஆகியவற்றைத் தன் மேலான பணிகளாகக் கொண்டிருந்தவர் என்பதை முடியரசனுடைய கவிதைப் பரப்பெங்கும் காணமுடிகிறது.

## மேலாய்வு:

'முடியரசனின் கவிதைத்திறன்' என்னும் தலைப்பில் இவ்வாய்வு அமைந்தாலும் இன்று பாத்திரங்களை ஆய்வு செய்யும் போக்குக் காணப்படுகிறது. 'முடியரசனின் காப்பிய மாந்தர்கள் - ஒரு திறனாய்வு' என்னும் தலைப்பிலும், 'முடியரசன் காப்பியங்களில் தமிழியற் சிந்தனை' என்னும் தலைப்பிலும் ஆய்வு செய்ய வாய்ப்பிருக்கிறது.

சீர்திருத்தச் சிந்தனைகளை மையமிட்டு, 'முடியரசனாரின் படைப்புகளில் சமுதாயச் சீர்திருத்தச் சிந்தனை' என்னும் தலைப்பிலும், 'திராவிட இயக்கக் கவிஞருள் முடியரசன் பெறும் இடம்' என்ற தலைப்பிலும் ஆய்வு நிகழ்த்தலாம்.

கருத்து வெளிப்பாட்டிற்கு இன்றியமையாததாக விளங்கும் உத்திகளை மையமிட்டு 'முடியரசனாரின் இலக்கிய உத்திகள்' என்னும் தலைப்பிலும் ஆய்வு நிகழ்த்த வாய்ப்பிருக்கிறது.